ஸ்ரீ:

ஸ்ரீரஸ்து

# ஸகல காரிய ஸித்தியும்

# ஸ்ரீ தேவீ பாகவதமும்

## [ஸ்தோத்ரங்களுடன்]

தேவிதாஸன்
ப்ரஸங்கரத்னாகரம் வித்வான்

**ப்ரஹ்மஸ்ரீ வ. கை. கேதாரீச்வர சர்மா**

அவர்களால் தொகுக்கப்பெற்றது

அம்ருதவாக்வர்ஷி, ப்ரவசனதுரீண, வைதிகதர்மஸம்ரக்ஷக, உபந்யாஸ சக்ரவர்த்தி, பாரதஸிம்ஹம், வேதயாக பரிபாலக, ராமாயண தத்வ உபதேசிக, தர்மோபதேச வாசஸ்பதி, யக்ஞரக்ஷக, ராமாயண கேஸரி, மதுவாணநிதி

**சேங்காலிபுரம் ப்ரஹ்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்**

அவர்கள் ஆசியுரையுடன் கூடியது

பதிப்பகத்தார் :

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**

சென்னை-600017 :: திருச்சி-620002

சென்னையில் லிப்கோ ஸ்டாகிஸ்டுகள் :

**எம். தாமோதரம் அண்டு கம்பெனி,**

கார்ப்பொரேஷன் பழக் கடை, எஸ்பிளனேட்,
சென்னை-600001.

[1979] [விலை ரூ. 3-50

முதற் பதிப்பு : அக்டோபர் : 1967

இரண்டாம் பதிப்பு : ஜூன். 1969

மூன்றும் பதிப்பு : ஜூலை 1972

மறு அச்சு : ஆகஸ்ட் 1975

" : பிப்ரவரி 1979

SUGGESTIONS FOR THE IMPROVEMENT OF THIS BOOK OR CORRECTIONS WILL BE GRATEFULLY WELCOMED BY THE PUBLISHERS, WHOSE MAIN AIM IS ACCURACY AND SERVICE.

அச்சிட்டோர் : மூவேந்தர் அச்சகம், சென்னை-600014.

# பொருளடக்கம்

# A PRAYER

"White captain of my soul, lead on ;
I follow thee, come dark or dawn.
Only vouchsafe three things I crave :
Where terror stalks, help me be brave !
Where righteous ones can scarce endure
The siren call, help me be pure!
Where vows grow dim, and men alone do
What once they scorned, help me be true !"

— ROBERT FREEMAN.

ஸ்ரீ:

# ஆசியுரை

ஸ்திரீ ரூபமாகத் தெய்வம் உண்டென்பதை நமது வேதந் தான் கண்டறிந்தது பல்வகைப்பட்ட கொள்கைகளைக் கொண்டவர்களுங்கூட ஸ்ரீ அம்பாளைத் தன்னை அறியாமலே ஒப்புக்கொள்ளுகின்றனர். ''எனக்குச் சக்தி இருக்கிறது நடந்து செல்லுகின்றேன்'' என்றெல்லாம் கூறுவதையும், ''எனக்குச் சக்தி இல்லை. என்னால் காரியம் செய்ய முடியவில்லை'' என்று கூறுவதையும் காண்கிறோம். அந்தச் சக்தி உலகெல்லாம் பரவியுள்ளது அப்படிப்பட்ட சக்தியானவள் உலகங்களுக்கெல்லாம் ஸ்ரீ ஈசவரியாய் புவனேச்வரியாய் விளங்குகிறாள். அந்த தெய்வத்தின் மகிமையைக் கூறவந்த புராணமே ஸ்ரீ தேவீ பாகவதமாகும் ஸ்ரீ வியாஸ முனிவரே, தான் கோரிய பொருளை அடைவதற்கு வரத்தை அளிக்கும் தெய்வம் ஸ்ரீ விஷ்ணுவா, பரமேச்வரனா, தேவேந்திரனா, பிரம்மதேவனா, ஸூர்யனா கணபதியா, முருகனா, அக்நியா, வருணனா என்றெல்லாம் கவலையுடன் கலங்கி இருக்கும்போது ஸ்ரீ நாரத முனிவர் அங்கு வந்து ''தாங்கள் கவலையுடன் இருப்பதை உணர்ந்துதான் நான் இங்கு வந்தேன்'' என்றும்,

वरप्रदाननिपुणं वाञ्छितार्थप्रदं तथा ।
विष्णुं रुद्रं सुरेन्द्रं वा ब्रह्माणं वा दिवाकरम् ।
गणेशं कार्तिकेयं वा पावकं वरुणं तथा ॥

''வரப்ரதானநிபுணம் வாஞ்சிதார்த்தப்ரதம் ததா |
விஷ்ணும் ருத்ரம் ஸுரேந்த்ரம் வா ப்ரஹ்மாணம் வா திவாகரம் ||
கணேசம் கார்த்திகேயம் வா பாவகம் வருணம் ததா ||''

''தங்கள் ஹ்ருதய கமலத்தில் உள்ள ஸ்ரீ புவனேச்வரியின் சரண கமலத்தை தியானம் செய்யுங்கள். சந்தேஹமின்றி



 

அந்தத் தேவி தாங்கள் கோரிய பொருளை உடன் அளிப்பாள்" என்றும் கூறினார்.

असंशयं हृदम्भोजे भज देवीपदाम्बुजम् ।
सर्वं दास्यति सा देवी यद्यदिष्टं भवेत्तव ॥

"அஸம்சயம் ஹ்ருதம்போஜே பஜ தேவீபதாம்புஜம் |
ஸர்வம் தாஸ்யதி ஸா தேவீ யதயதிஷ்டம் பவேத்தவ ||"

அதேபோல், ஸ்ரீ அம்பாளை ஆராதித்துப் புத்ரலாபம் முதலிய ஸகல பாக்யங்களையும் ஸ்ரீ வியாஸ முனிவர் அடைந்தார் என்பதை ஸ்ரீ தேவீ பாகவத புராணமே கூறுகிறது.

சிஷ்யன் ஆசார்யனிடம் ஆபத்து ஏற்பட்டபோது அதைப் போக்கிக்கொள்ள என்ன செய்யவேண்டுமெனக் கேட்கிறான். ஆசார்யனும் ஸ்ரீ அம்பாளுடைய இரண்டு சரணங்களையும் த்யானம் செய்யவேண்டுமெனக் கூறினார். அந்தத் தியானம் என்ன செய்யுமென சிஷ்யன் கேட்டான். பிரம்மா முதலிய தேவர்களையெல்லாம் பக்கத்தில் வந்து என்ன செய்யவேண்டுமெனக் கேட்கும்படி செய்யும் எனக் கூறினார்.

आपदि किं करणीयं
स्मरणीयं चरणयुगलमम्बायाः ।
तत्स्मरणं किं कुरुते
ब्रह्मादीनपि किङ्करीकुरुते ॥

"ஆபதி கிம் கரணீயம் கரணீயம் சரணயுகளமம்பாயா :|
தத்ஸ்மரணம் கிம் குருதே ப்ரம்மாதீனபி கிங்கரீ குருதே ||"

அயோத்திக்கு அதிபனை ஹரிச்சந்திர மஹாராஜனுக்குக் கஷ்டம் வந்தபோது, ஸ்ரீ அம்பாள் சதாக்ஷீ எனப் பெயருடன் வந்து, அமிருதத்தை லோஹிதாசன் மீது வாரித் தெளித்து பாம்பின் விஷத்தையெல்லாம் போக்கி உயிர்ப்பித்து, மறுபடி ராஜ்யத்தை ஆளும்படி அருள்புரிந்த கதையும், உலகத்தில் பஞ்சம் வந்தபோது ஸ்ரீ அம்பாளை உபாசித்தால் ஸ்ரீ சாகம்பரீ எனப் பெயருடன் தன் கைகளிலெல்லாம் காய், கிழங்கு, பழம், தான்யம் முதலியவைகளை எல்லாம் எடுத்துவந்து இந்த உலகிற்கெல்லாம் தனது பெரும் கைகளால் அளித்தாள் என்ற கதையும் இந்தப் புராணத்தில் உள்ளது.

ஜாதகத்தில் சந்திரன், சுக்கிரன், ராகு முதலிய கிரஹங்கள் தோஷமுள்ளவைகளாக இருந்தால் தாயின் சாபம், பசுவின் கோபம், சுமங்கலியின் சாபம், ஸ்ரீ துர்க்கையின் கோபம், யக்ஷிணீ முதலிய துஷ்ட கிரஹங்களால் ஏற்படும் தொல்லை முதலியவை கள் நிச்சயமாய்க் குடும்பத்தில் இருக்கக்கூடும். அந்தக் கோபம், சாபம் முதலியன விலகுவதற்கு ஸ்ரீ அம்பாளை அவசியம் ஆராதிக்க வேண்டும்.

ஸ்ரீ அம்பாளின் மஹிமையை விசேஷமாய்க் கூறும் இப்படிப் பட்ட ஸ்ரீ தேவீ பாகவத புராண ஸாரத்தை லிப்கோ கம்பெனிக் காரர்கள் நல்ல முறையில் அச்சிடுவது நமது தேசத்தின் பாக்கியமேயாகும்.

ஆகையால், ஆஸ்திகர்கள் இந்தப் புஸ்தகத்தை வாங்கி அதன் மீது இரண்டு புஷ்பங்களையாவது வைத்து, நமஸ்கரித்துப் படிக்க வேண்டும்.

(Camp) Astika Samaj,
Matunga, Bombay-19,
22—1—1967.

இப்படிக்கு,
சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்.

## புதுவையில் கவர்னர் தேர் இழுத்தார்!

புதுவைக்கு ஐந்து மைல் அப்பாலுள்ள வீராம்பட்டி ணத்தில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ செங்கழுநீர் அம்மன் கோயில் தேர் உற்ஸவத்தை லெப். கவர்னர் சீலம் 16-ஆம் தேதி துவக்கிவைத்தார்.

தேர் வடம் பிடித்து இழுத்து உற்ஸவத்தை ஆரம்பித்த தாகவும் ஏற்கனவே புதுவையில் பிரஞ்சு அரசாங்கம் கடைப் பிடித்து வந்த வழக்கப்படி அவர்கள் சென்ற அடிச்சுவட்டி லேயே தானும் தனது சக மந்திரிகளும் கடந்த ஐந்தாண்டு களாகச் சென்று வருவதாயும் அதாவது ராஜீயத் தலைவன் என்ற முறையில் உத்தியோக ரீதியாக தேர் உற்ஸவத்தில் கலந்துகொள்வதாகவும் கவர்னர் குறிப்பிட்டார்.

— சுதேசமித்திரன், 19—8—1968

ஸ்ரீ:

# பதிப்பகத்தாரின் பணிவுரை

இக்காலத்தில் எந்தத் தொழிலையும் சுலபமாகச் செய்வது ஸாத்யமில்லை. அதிலும் புராண, இதிகாஸ ஸம்பந்தமான வெளியீடுகள் (பக்தி வெளியீடுகள்) பிரசுரிப்பதில் வெற்றி காண்பது எளிதன்று. எனினும், பகவத்பாகவத க்ருபையிருந்தால் எந்த நற்காரியமும் விக்னமின்றி நடந்தேறும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை இருக்கவேண்டும். அது, ஈசனருளால், எங்களுக்கு அதிகம் உண்டு.

சென்னை வீனஸ் காலனியில் 2-6-1965-ல் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி பட்டாபிஷேக ப்ரவசனத்துடன் அழகாக முடிவு பெற்ற, ப்ரஹ்மஸ்ரீ சேங்காலிபுரம் ஆனந்தராம தீக்ஷிதர் அவர்கள் புல்லரிக்கும் வகையில் செய்த "ஸ்ரீ தேவீ பாகவத" உபந்யாஸத்தைக் கேட்கும் பாக்யம் எங்களுக்கு ஏற்பட்டது. ஸ்ரீ தேவியின் கருணையைப்பற்றிப் பெரியவர் வர்ணித்தபோதும், பலன்களைக் கூறியபோதும் இந்த மகத்தான க்ரந்தத்தை லௌகிகத் துறையில் உழலும் ஆஸ்திகர்களுக்குப் பயன்படும்படி ப்ரசுரிக்கவேண்டும் என்ற ஊக்கம் எங்கட்கு ஏற்பட்டது. இது பெரியோர் ஆசீர்வாதம். ஸ்ரீ தேவியின் கருணைக்குப் பெரியதோர் திருஷ்டாந்தம்! அந்த ஊக்கத்தை எங்கள் உள்ளத்தில் ஏற்படுத்திய பெருமை மேற்படி பெரியவரையே சாரும். அதனால் முதன்முதலில் எங்கள் நமஸ்காரங்களை அவருக்குத் தெரிவித்துக்கொள்கிறோம்.

அது முதற்கொண்டு கலைமகள் ஆசிரியர், வித்வான், திருமுறுகாற்றுப்படை அரசு, வாகீச கலாநிதி, தமிழ்க்கவி பூஷணம், செந்தமிழ்ச் செல்வர், திருநீர்த் தவமணி, முருகன் அருள் பெற்ற முனிவர், உபந்யாஸ கேஸரி, சைவபூஷணம், ப்ரஹ்மஸ்ரீ கி. வா. ஜகந்நாத அய்யர் அவர்கள் போன்ற பல பெரியோர்களை அணுகி இந்த க்ரந்தத்தைத் தயார் செய்யும் பணியில் ஈடுபட்டோம். தேவீதாஸன் ப்ரஸங்கரத்னாகரம் வித்வான் வ கை. கேதாரீச்வர சர்மா அவர்களைக் கொண்டு தொகுத்து ஒருவாறு வெளியிட்டிருக்கிறோம்.

இந்நூலைத் தயார் செய்வதில் உதவிய தேவீகதாம்ருத வர்ஷக தர்மக்ஞ சிரோமணி, வித்யாவாசஸ்பதி மாயூரம் பிரஹ்மஸ்ரீ ராமநாத தீக்ஷிதர் அவர்களுக்கும், சிவபுராண ஞானபூஷகா பரஹமஸ்ரீ ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா அவர்களுக்கும, கீழாத்தூர் ஸ்ரீ. உ. வே ஸ்ரீநிவாஸாசார் ஸ்வாமிக்கும், ஸ்ரீ. உ. வே. வித்வான் K. சௌரிராஜன் அவர்களுக்கும், ஹிந்து ப்ரசார ஸபா ப்ரஹ்மஸ்ரீ K. வேங்கட்ராம அய்யர் அவர்களுககும், போட்டோக்கள தந்து

உதவிய ஸ்ரீ N. ராமகிருஷ்ணன் அவர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ ஜகதம்பிகையின் அநுக்ரஹத்தால் நம் பாரத தேசத்தில் ஸகல ஸௌக்கியங்களும் ஏற்படவேண்டும் என்னும் ப்ரார்த்தனையுடன் இந்நூலை லோகமாதா ஸ்ரீ தேவீ திருவடித் தாமரைகளில் ஸமர்ப்பிக்கின்றோம்.

தி லிட்டில் ப்ளவர் கம்பெனி,
பதிப்பகத்தார்.

முக்கியம்

இப்புத்தகத்தில் காணும் குற்றங் குறைகளைத் தயைசெய்து எடுத்துக் காட்டவேண்டும்; அடுத்த பதிப்பில் இதை இன்னும் அழகுறச் செய்ய அது ஹேதுவாகும். — பதிப்பகத்தார்

## OUR AMBITION

WITH the Grace of the Lord and the blessings of the elders and with abundant active good-will all around us, it is our aim to make our Publications big,—big in every way. It is our heart's desire to produce and place in the hands of the public great and good books,—books that would be of enduring value to the reader, books that inspire lofty ideals, books that enshrine the vision of the seers and the wisdom of the sages, books that convey profound ideas, of perennial significance to one and all, books that would be prized not only by the disciplined mind seeking celestial bliss in a transcendental realm, but also by the practical man of the everyday world looking for guidance here and now, books that would touch the readers heart and quicken its vibrations with sublime sentiments.

In short, we seek to serve man and God through the written word, through the vivid medium of the living print. That is our ambition.

Pray, help us realise the ambition.

THE LITTLE FLOWER CO
(LIFCO)

ஸ்ரீ :

# பதிப்பாசிரியரின் முன்னுரை

## காமாநுபவமும்-கர்மநிவ்ருத்தியும்

## பொது

ஆதிபரம்பொருளின் படைப்பில் எத்தனையோ லக்ஷம் ஜீவ ராசிகள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமான சரீர அமைப்பும் வெவ்வேறு விதமான செயற்பாடுகளும், பல்வேறு விதமான கோரிக்கைகளும், தகுந்த முயற்சிகளும், முரண்பாடு களும் உள்ளன. இந்த ஜீவராசிகளில் தேவர், மனிதர், மிருகங்கள், பறவைகள், கிருமிகள் முதலிய எல்லாம் அடங்குகின்றன. இந்தப் படைப்பு ஒன்றுக்கொன்று இவ்வளவு வித்தியாசமாக இருக்கக் காரணம் என்ன? இதற்குக் காரணம், அந்த அந்த ஜீவாத்மா செய்த முன்வினையே என்பர் நம் பெரியோர்.

இப்போது நாம் மற்ற ஜீவராசிகளையெல்லாம் விட்டுப் பூவுல கிலுள்ள மனித வர்க்கத்தை மாத்திரம் எடுத்துக்கொள்வோம். ஆஹா! மனிதர்களில் எவ்வளவு, எவ்வளவு, வித்தியாசம்!

ஒருவன் பணக்காரன்—இன்னொருவன் ஏழை.
ஒருவன் அறிவாளி—இன்னொருவன் மூடன்.
ஒருவன் சிவப்பு—இன்னொருவன் கறுப்பு.
ஒருவன் நெட்டை—இன்னொருவன் குட்டை.

ஒரே மனிதனின் வாழ்க்கையை எடுத்துக்கொண்டால் அவ னுக்கு வெவ்வேறு காலங்களில் நேரும் வெவ்வேறு தொழில்களை யும் சுகதுக்கங்களையும் பார்க்கிறோம். ஒரு சமயம் தேவையான அநேக வசதிகளுடன் அமோகமாக அவன் வாழ்கிறான். அநேக விதச் சிறப்புக்களை அடைகிறான். அதே மனிதனுக்குத் தன் வாழ் நாளில் மற்றொரு சமயத்தில் சகல ஸௌக்கியங்களும் ஆற்றின் வெள்ளம் வற்றினதுபோல் மறைந்துவிடுகின்றன. செல்வம் அவனை விட்டு அகலுகிறது. அப்பொழுது உலகம் அவனைத் தாழ்ந்தவனாக மதிக்கிறது. இதற்கெல்லாம் காரணம் பூர்வ ஜன்ம கர்மம் என்று சொல்லப்படும் முற்பிறப்பு வினையே யாகும். "பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே" என்பது பட்டினத்தார் வாக்கு.

பூர்வ ஜன்ம கர்மம் என்பது, புண்ணிய ரூபமாகவும் பாவ ரூப மாகவும் இருக்கும். ஒவ்வொருவனும் தன் வாழ்நாள் முழுவதும்

புண்ணியம் மாத்திரமோ, பாவம் மாத்திரமோ தனியாகச் செய்திருக்கமாட்டான். மிகுந்த புண்ணியசீலனுங்கூடத் தனக்குத் தெரியாமலே ஏதாவது பாவம் செய்திருக்கலாம் அவ்விதமே பாவியும் தனக்குத் தெரியாமல் ஏதாவது புண்ணியம் செய்திருப்பான். ஆகையால் ஒருவன் முன்ஜன்மத்தில் செய்த புண்ணியத்தையும் பாவத்தையும் அநுபவிப்பதற்காகவே மறுபடியும் ஜன்மம் எடுக்கிறான் என்பது நியதி

ஒருவனுடைய செயலை ஒரு தராசுக் கோலுக்கு ஒப்பிடலாம் அதன் இருபுறத்திலும் உள்ள தட்டுக்களில் ஒன்றில் புண்ணியமும், மற்றொன்றில் பாவமும் வைத்திருப்பதாகக் கருதுவோம். புண்ணியம் அதிகமாக இருந்தால் அதற்குத் தக்கபடி வீடு, வாசல், வாகனம், பூமி பசு, தனம், தானியம் போன்ற அதிக சுகங்களை அநுபவிக்கிறான். அதனால் அவனைப் புண்ணியம் செய்தவன் என்று உலகில் பேசுவார்கள் ஆனால், அவனும் முன் ஜன்மத்துப் பாவத்தின் பலனை அதே சமயத்தில் ஓரளவுக்கு அநுபவிக்காமலில்லை. உதாரணமாக, கைநிறையப் பணமும், கண் நிறைந்த மனைவியும், மற்ற வாழ்க்கை வசதிகளும் இருந்தும், தனக்குப் பின் தன் பெயர் சொல்ல—தன் செல்வத்தை அநுபவிக்க—ஒரு குழந்தை பிறக்கவில்லையே என்று ஏங்குகிறவன் இருக்கிறான் அல்லவா? இம்மாதிரியே பாவம் செய்தவன் என்று எண்ணப்படும் மற்றொருவன் மனைவி மக்களும், உற்றார் உறவினரும் நிறைந்திருந்தும் குடிக்கக் கூழும், உடுக்கத் துணியும் இல்லையே என்று அல்லும் பகலும் அல்லற்படுகிறான். ஆகையால், மனிதன் என்னும் தராசுக் கோலுக்கு இருபுறமும் இருக்கும் புண்ணிய பாவங்கள் இடத்தை விட்டு மாறாமல், மனிதனுக்கு ஒரே சமயத்தில் சுகத்தையும் துக்கத்தையும் மாறி மாறிக் கொடுத்து வருகின்றன என்பது கண் கூடாகும்.

மற்றுமோர் உதாரணம்: ஒருவன் துஷ்டன்; பல பாவச் செயல்களைப் புரிகிறான். ஆனால், அவன் வாழ்நாளில் வசதியாக வாழ்கிறான். மற்றொருவன் நல்லவன்; ஒருவருக்கும் தீங்கு செய்ய மனத்தாலும் நினையாதவன்; தெய்வ பக்தி உள்ளவன். ஆனால், அவன் படும் கஷ்டங்களோ சொல்லி முடியாது நம் கண்முன் சுகங்களை அநுபவிக்கும் துஷ்டன் இந்த ஜன்மத்தில் தீச்செயல்களைப் புரிபவனாக இருந்தாலும், முன் ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பலனை இந்த ஜன்மத்தில் அநுபவித்து வருகிறான். அவனே இந்த ஜன்மத்திலும் புண்ணிய காரியமே செய்வானானால், இந்தப் பிறப்பின் முடிவிலேயே மறு பிறப்பில்லாத முக்தியை அடைவது திண்ணம் ஆனால், அவன் தீச்செயல்களைச் செய்வானாகில் அவன் தீய பலனை இப்பிறப்பிலோ அல்லது அடுத்த ஜன்மத்திலோ அநுபவிப்பது நிச்சயம். அப்படியே இந்த ஜன்மத்தில் நற்செயல் புரிபவனாக இருந்தும், கஷ்டத்தை அநுபவிப்பவன் தன் கஷ்டம்

களுக்குப் 'பூர்வ ஜன்ம வினையே' காரணம் என்று தெரிந்து, அதற்காகத் தன்னாலியன்ற அளவில் நற்காரியங்களைச் செய்ய மேன் மேலும் முயலவேண்டும்.

## கடவுள் என்ன செய்வார்?

அவரவர்கள் செய்துள்ள தீவினையின் பயனாகக் கஷ்டப்படுபவர்கள் அறிவிழந்து ஆண்டவனை நோகின்றனர் என்னே இவர்கள் அறிவீனம்! நம் ஔவைப் பிராட்டியாரின் அமுதமொழிகளை அமைதியாக நோக்குவோம் :

"செய்தி வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம் ?—வையத்து
அறும்பாவம் என்னவறிந் தன்றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல் ?"

அந்தோ பாவம்! தான் செய்த அடாத செயல்களுக்குத் தண்டனைகளை அநுபவித்தே தீரவேண்டும் தண்டனைகள் அநுபவிக்கும் சமயம், கடவுளைத் திட்டுவதால், மிகுந்த செல்வம் இப்படிப்பட்ட பாவிகளை வந்தடையுமோ? வெறும்பானை பொங்குவதும் உண்டோ?

இதை ஓர் உதாரணத்தால் விளக்குவோம் : ஒருவன் ஒரு பாங்கில் பணம் போட்டு வைக்கிறான். பணம் போடுகிறவன் நல்லவனா, கெட்டவனா என்பதைப்பற்றிப் பாங்கிக்காரர்களுக்கு அக்கறை இல்லை அவன் போட்டிருக்கும் பணம் கணக்கில் இருக்கும்வரையில் அவன் கேட்டபொழுதெல்லாம் பணம் கொடுத்துக்கொண்டே வருகிறார்கள். அவனுடைய பாங்கில் மிச்சம் இல்லாதிருந்தால் அவன் கொடுக்கும் 'செக்கை'த் திருப்பி அனுப்பிவிடுவார்கள். அதுபோலவே, ஒருவன் இப்பொழுது துஷ்டனாக இருந்தாலும், பூர்வ ஜன்மத்தில் அவன் சேர்த்து வைத்த புண்ணியம் செலவழிந்து போகும் வரையில் அந்தப் புண்ணியத்துக்குத் தகுந்த சுகத்தைப் பகவான் கொடுத்து வருகிறார். அவ்விதமே பாங்கில் கடன்பட்டவன் நல்லவனானாலும், அவன் கடன் முழுவதையும் தீர்க்கும் வரையில் பாங்கிக்காரர்கள் அவனை வருத்துவது போலவே, பூர்வ ஜன்மத்தில் செய்த பாவம் தீரும் வரையில் இந்த ஜன்மத்தில் நல்லவனாக இருந்தாலும் அவனுக்குப் பகவான் கஷ்டங்களைக் கொடுத்து வருகிறார். இம்மாதிரி பாங்கிக்காரன் உள்ள நிலையில் இருக்கும் பகவானை நிந்திப்பதில் என்ன பயன்?

## பாவமும் மன்னிப்பும்

பூர்வ ஜன்மத்தில் பாவம் செய்த காரணத்தால் தற்பொழுது கஷ்டத்தை அநுபவிப்பவர்களுக்கு விமோசனமே இல்லையா? இருக்கிறது.

அதையும் ஓர் உதாரணத்தால் விளக்கலாம்: ஒருவன் ஏதோ குற்றம் செய்துவிட்டான் அவன் செய்த குற்றத்திற்கு ஏழு வருஷம் கடின தண்டனை விதிக்கலாமென்று சட்டம் இருக்கிறது. அவன் மனம் வருந்தி, தான் செய்த குற்றத்தை உணர்ந்து நீதிபதியிடம் தனக்குத் தண்டனையேயில்லாமல் மன்னித்துவிட வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொள்கிறான். ஆனால் சட்டப் படி தவறு செய்தவன் தண்டனையை அநுபவித்தே தீர வேண்டுமென்று இருப்பினும், அவன் தன் குற்றத்துக்காக மனமார வருந்தியதனால், 7 வருஷத் தண்டனையை 3 அல்லது 2 வருஷமாகக் குறைத்துவிட்டதாக நீதிபதி தீர்ப்பளிக்கிறார். அவ்விதமே முன் ஜன்மத்தில் செய்த பாவத்துக்கு இந்த ஜன்மத்தில் கஷ்டங்களை அநுபவிக்கவேண்டியது நியதியானாலும், மனம் உருகி மன்றாடிக் கேட்டுக்கொண்டால் பகவான் நம் கஷ்டங்களைக் குறைத்து, அதோடு கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றலையும் அருளுகிறார். நல்ல நிலையில் உள்ளவர்கள் மீண்டும் மீண்டும் பகவானைத் துதித்து வந்தால், அவர்களுக்கு மேன்மேலும் சுகம் உண்டாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

இப்படி தாம் முற்பிறப்பில் செய்த வினையைப்பற்றித் தெரியாமல் கஷ்டங்களில் உழலும் மக்கள், அவைகள் நீங்கிச் சுகமடைய தம் இஷ்ட தெய்வங்களைப் பிரார்த்தனை செய்வதற்காகவே ராமாயணம், பாரதம், பாகவதம், ஸ்ரீ தேவீ பாகவதம் முதலிய இதிகாஸ புராணங்களும், ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் போன்ற பல ஸ்தோத்ரங்களும், ஜபம, தவம், ஹோமம், தானம்போன்ற நற்காரியங்களும் முற்றுந்துறந்த முனிவர்களாலும் மஹான்களாலும் அருளிச் செய்யப்பட்டுள்ளன இவைகளில் ஏதாவது ஒன்றை அநுஷ்டித்தால் மக்கள்துன்பம் நீங்கப்பெற்று இன்பம் பெறுவது திண்ணம்; அவர்கட்கு ஸகல கார்யங்களும் ஸித்திக்கும்.

## இப்புத்தகத்தைப்பற்றி

"ஓம் ஸர்வசைதன்ய ரூபாம்தாம் ஆத்யாம் வித்யாம் ச தீமஹீ புத்திம் யா ந: ப்ரசோதயாத்!"

உலகெலாம் அல்லல் தீர்ந்துய்ய இறைவனால் அருளப் பட்டது வேதம். அதுவே நமது தர்மத்தின் ஆணிவேர். அவ்

வேதத்தின் பொருள் மிக ரஹஸ்யமானது. எளிதில் அறிய கூடாதது. நுண்மையினும் நுண்மையானது. மிக நுண்ணிய பொருளைப் பூதக்கண்ணாடியின் உதவியால் பெரிதாக்கிப் பார்ப்பு போலவே, நமது பாரத நாட்டுப் பேரறிஞர்கள் வேதத்தின் நு பொருளைப் புராணங்கள் மூலம் அறிந்து அரும்பயன் பெற்றன பரமக்ருபையுடன் அவற்றைப் பாமர மக்களுக்கும் வழங்கியுள்ள னர். எனவே, வேதத்தைப்போன்று, புராணங்களும் நமக்கு பிரமாண நூல்களேயாகும்.

அப்புராணங்கள் பதினெட்டு. இவையன்றி உபபுராணங்களு பதினெட்டு உள்ளன. பன்னருஞ்சீர் வியாஸமாமுனியே தொ னூலாம் வேதம் நான்காக வகுத்த பின்னர் இப்பதினெண்புர ணங்களையும். இயற்றியருளினார்.

இத்தகைய பெருமை வாய்ந்த மஹாபுராண வரிசையி ஐந்தாவதாகப் பேசப்படும் பாகவதம் என்பது பகவதியாகி பராசக்தியின் பெருமையைக் . கூறும் "ஸ்ரீ தேவீ பாகவதமே யாகும்.

மற்றப் புராணங்களுக்கில்லாத தனிச் சிறப்பு ஸ்ரீ தேவீ பாக தத்துக்கு உண்டு. அஃது என்ன? தமது மாணவர்கள் மூல மற்றப் புராணங்களையும் மஹாபாரதத்தையும் பிரசாரம் செய் வியாஸமாமுனிவர் ஸ்ரீ தேவீ பாகவதத்தை மட்டும் தா உபதேசித்தார்.

இந்த நூல் 18000 ஶ்லோகங்களும், 318 அத்தியாயங்க என்னும் சிறு பிரிவுகளும், 12 ஸ்கந்தங்களாகிய பிரிவுகளு கொண்ட பெருநூலாகும். புராண லக்ஷணங்கள் யாவும் நிறைந் இப்புண்ணிய நூல் ஜகதாம்பிகையான ஸ்ரீபராசக்தியின் பெரு ஸ்வரூப நிர்ணயம், வழிபாட்டு முறைகள், மந்த்ரங்களி பெருமை, தேவீ யக்ஞ முறைகள், வழிபட்டோரும், ஜபம் செ தோரும், தேவியக்ஞங்களை அநுஷ்டித்தோரும் பெற்ற பெரு பயன்கள், தேவியின் அநுக்ரஹம், பாவ புண்ய விசேஷங்கள் மற்று காயத்ரீ மஹிமை, விபூதி மஹாத்மியம், மணித்வீப வர்ணனம் முதலி பல அரிய விஷயங்களைப் படிக்கப் படிக்கச் சுவை சொட்டக் கூ கிறது. படனஞ் செய்பவர்கள், செய்விப்பவர்கள், ச்ரவண செய்பவர்கள், செய்விப்பவர்கள் ஆகியோர் பெறக்கூடி பயன்களையும் உறுதியாய் உரைக்கிறது. இகத்தில் மக்களுக்கு தேவையான பலன்களும், அவாந்தரமாக அவர்கள் அறியா லேயே, இப்புராண படனஞ் செய்யும் புண்ணிய சீலர்கள் பெ கிறார்கள் என்பது கற்றறிந்து அடங்கிய ஆன்றோர்கள் அனுபவ தால் அறிந்த பேருண்மை.

தேவ பாஷையான ஸம்ஸ்க்ருத மொழியில் உள்ள இந்நன்னூலை அம்மொழியைக் கற்றாரேயன்றி மற்றோரும் பயின்று பயன் பெறவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டதும் அன்னையின் அருளாலேயாகும். ஆகவே, இம்மஹாபுராணத்தில் காணப்படும் விஷயங்களை இயன்றவரை ஒருவாறு தொகுத்து ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீ தேவீ பாகவதமும்'' என்கின்ற இந்த நூலை ஆஸ்திகர்களுக்குச் சமர்ப்பிக்கவேண்டுமென்ற அவா ஏற்பட்டது. இம்மஹாபுராண படனத்தால் ஸகல காரிய ஸித்தியும் ஏற்படுகின்றது என்கிற பலச்ருதி அப்புராணத்திலேயே காணப்படுவதால், இதில் கதா பாகங்களில் ஊடுருவிக் கிடக்கும் காரிய ஸித்திகளையே தலைப்பாகக் கொண்டு கதை எழுதப்பட்டிருக்கின்றன. அந்தந்த கதாபாத்திரங்கள் பெற்ற பெரும்பயனையே நாமும் பெறவேண்டும் என்னும் பாவனையுடன் ஸ்ரீ தேவியைப் பிரார்த்தித்துப் பாராயணம் செய்வதால் அக்காரிய ஸித்திகள் யாவும் கைகூடும் என்பது திண்ணம். இன்னல்கள் பலவற்றுக்கிலக்காகி அல்லலுறும் நமக்கு அவைகளை விலக்க ஸர்வ சைதன்ய ஸ்வரூபியான ஸ்ரீ ஜகதம்பிகையைச் சரணமடைவதைத் தவிர வேறு வழியில்லை. எனவே, அன்பர்கள் இந்நூலைப் பக்தியுடன் படனஞ்செயது ஸகல காரிய ஸித்திகளையும பெற்றுப் பெரும்பயன் அடையவேண்டும்.

இந்நூலின் அந்தந்த பாகங்களின் மூல ஸம்ஸ்ருத ஶ்லோகங்கள் தமிழில் கோத்துப் பிற்சேர்க்கையாக வெளியிடப்பட்டிருக்கிறது. சொற்ப அவகாசமுள்ளவர்களும் ஸம்ஸ்க்ருதம் தெரிந்தவர்களும் இந்த ஶ்லோகங்களை மாத்திரம் பாராயணம் செய்தாலும் ஸ்ரீ தேவியின் பரமக்ருபை கிடைக்கும் என்பது பெரியோரின் கருத்து.

ஸம்ஸ்க்ருதம் தெரியாத அன்பர்களும் தெரிந்தவர்களைக் கேட்டுப் பாராயணம் செய்து பயன் அடையவேண்டும்.

மேலும், இப்புத்தகத்திலுள்ள ஒவ்வொரு காரிய ஸித்தியையும் தமிழிலும், ஸங்கல்பம் செய்துகொள்வதற்காக ஸம்ஸ்க்ருதத்திலும் கீழே தரப்பட்டிருக்கிறது. கோரிக்கைக்கு உண்டான பாகத்தைப் பாராயணம் செய்யத் தொடங்குமுன் ஸங்கல்பத்துடன் ஆரம்பிப்பது உசிதம். முதல் பலனுககு உண்டான மாதிரி ஸங்கல்பம் (தானே செய்வதற்காகவோ, தான் பிறருக்காகச் செய்வதற்காகவோ, பிறரைக் கொண்டு செய்வதற்காகவோ) கீழே தரப்பட்டிருக்கிறது. அதன் பிரகாரம் அந்தந்தப் பலனுக்கு உண்டானதைத் தக்கபடி சொல்லிக் கொள்ளவும்.

1. இழந்த பொருளைத் திரும்பப் பெற :
நஷ்டவஸ்து லாப ஸித்த்யர்த்தம்

2. பகைவரை வெல்ல :
ப்ரதிபந்தி விஜயா வாப்த்யர்த்தம்

3. கவலை நீங்கி விரும்பிய பொருளைப் பெற :
ஸகல சிந்தா நிவ்ருத்தி பூர்வக—அபீப்ஸித லாப
ஸித்த்யர்த்தம்

4. நல்ல ஸந்ததி உண்டாக :
ஸத்ஸந்தாந ப்ராப்த்யர்த்தம்

5 நற்கதி அடைய :
ஸத்கதிலாபார்த்தம்

6. கடன் நிவாரணமும் மனச்சாந்தியும் பெற; கன்னிப்
பெண்களுக்குக் கல்யாணம் நிகழ :
ருணவிமோசந பூர்வகமநஶ்ஶாந்தி ஸித்த்யர்த்தம்
கந்யாயா: உத்வாஹ மங்கள ஸித்த்யர்த்தம்

7. அறிவு நிரம்ப :
ஜ்ஞாநாவாப்த்யர்த்தம்

8. மனோரதம் நிறைவேற :
ஸகல மநோரத பூர்த்யர்த்தம்

9. ஸ்ரீ தேவியின் பேரருளைப் பெற :
தேவீ கருணா கடாக்ஷ ஸித்த்யர்த்தம்

10. பிரிந்தவர் சேர :
விச்லிஷ்ட பந்துஜந ஸம்ஶ்லேஷார்த்தம்

11. பெரும் புண்ணியப் பயன் பெற :
மஹத்புண்யபலாவாப்த்யர்த்தம்

12. ஸகல நன்மைகளையும் பெற :
ஸகலவித ஸௌக்யாவாப்த்யர்த்தம்

13. வேண்டுகோள் நிறைவேற :
மதீய ப்ரார்த்தநாஸித்த்யர்த்தம்

14. பந்தபாசங்களும் கவலையும் நீங்க :
ஸகலவித பந்தபாஶசிந்தா நிவ்ருத்யர்த்தம்

15. கலியுகத்தின் கேடுகளிலிருந்து தப்ப :
ஸகலவித கலிகல்மஷ நிவ்ருத்யர்த்தம்

16. கன்னிப் பெண்கள் விரும்பிய கணவரைப் பெற :
அபீப்ஸித பதிலாபார்த்தம்

17. மாயையை விலக்க :
ஸகலவித மாயாஜால விமுக்த்யர்த்தம்
18. சோதனைகளில் வெற்றியும் சீரிய தாம்பத்ய வாழ்க்கையும் பெற :
ஸகல வித துக்கநிவ்ருத்திபூர்வக அநுகூல தாம்பத்ய லாபார்த்தம்
19. பாவம் நீங்க :
ஸகலவித பாப நிவ்ருத்யர்த்தம்
20. துன்பங்கள் நீங்கிப் புகழ் ஓங்க :
ஸகல-அஹித நிவ்ருத்தி பூர்வக-யஶோபிவ்ருத யர்த்தம்
21. ஸகல ஸௌபாக்யங்களும் பெற :
ஸகல ஸௌபாக்ய ஸித்த்யர்த்தம்
22. மாங்கல்ய பலம் பெற ; கன்னிப் பெண்களுக்குக் கல்யாணம நடக்க ;
குமார்யா: ஸௌமங்கல்ய பலாவாப்த்யர்த்தம் ;
கந்யாய: விவாஹ ஸித்த்யர்த்தம்
23. ஸகல கலையறிவுகளும் அடைய :
ஸகல கலா கௌஶலாவாப்த்யர்த்தம்
24. கொடியவனும் மோட்சம் அடைய :
ஸகலாபசார க்ஷாபணபூர்வக மோக்ஷாவாப்த்யர்த்தம்
25. அளவற்ற சுகங்களைப் பெற :
பரிபூர்ணஸுகாவாப்த்த்யர்த்தம்
26. தீர்க்க ஸௌமங்கல்யம் பெற :
தீர்க்கஸௌமங்கல்யஸித்த்யர்த்தம்
27. மனோபீஷ்டம் நிறைவேறி, ஸகல சம்பத்துகளும் பெற :
ஸகல மனோரதபூர்த்தி த்வாரா ஸகல ஸம்பதவாப்தி யர்த்தம்
28. ஸர்வ சக்திகளும் பெற :
ஸர்வவித ஶக்திஸாமர்த்ய ஸித்த்யர்த்தம்
29. பெரும்புகழ் பெற :
திகந்த விஶ்ராந்த கீர்த்தி ஸித்த்யர்த்தம்
30. ஸகல பாவங்களையும் போக்கிக் கொள்ள :
ஸகல விததுரித நிவ்ருத்யர்த்தம்
31. பாவம் நீங்கி நோயற்ற வாழ்வு பெற :
ஸகல பாப நிவ்ருத்தி பூர்வக நீரோக ஜீவிதாப்தி யர்த்தம்
32. அகால மரணம் நேராமல் இருக்க :
அகாலம்ருத்யு ரூபதோஷ நிவ்ருத்யர்த்தம்

33. பஞ்சத்தைப் போக்க :
ஸகல விதாஸம் பூர்ணதா நிவ்ருத்யர்த்தம்
34. உண்மை ஞானம் பெற :
தத்வஜ்ஞான ஸித்த்யர்த்தம்
35. அம்பிகையின் அருளைப் பெற :
ஸ்ரீ தேவிக்ருபா கடாக்ஷ ஸித்யர்த்தம்
36. பிறவிப் பிணியைப் போக்கிக் கொள்ள :
புநர்ஜநநருபதுக்க காரண நிவ்ருத்யர்த்தம்
37. முத்தி பெற :
அபவர்க்கலாப ஸித்த்யர்த்தம்

— பதிப்பாசிரி

ஸ்ரீ:

# மாதிரி ஸங்கல்பம்

## I

## (தானே பாராயணம் செய்ய)

ஆசமனம்
சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே
ததேவலக்னம் ஸுதிநம்ததேவ தாராபலம் சந்த்ரபலம்
ததேவ-வித்யாபலம் தைவபலம் ததேவ—லக்ஷ்மீபதே
தேங்க்ரியுகம் ஸ்மராமி.
ஓம்பூ:— ஓம்புவ:ஓம்ஸுவ:—ஓம்மஹ:—
ஓம்ஜந:—ஓம்தப:—ஓம்ஸத்யம்—ஓம்
தத்ஸவிதுர்வரேண்யம்—பர்க்கோ தேவஸ்ய
தீமஹீ—தியோயோந: ப்ரசோதயாத்—
ஓமாப:—ஜ்யோதீரஸ:—அம்ருதம் ப்ரஹ்ம—
பூர்புவஸ்ஸுவரோம்.

ஓம் ஓம் ஓம்

மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா
ஸ்ரீபரமேச்வரப்ரீத்யர்தம்-சுபே சோபநே
முஹுர்த்தே—ஆத்யப்ரஹ்மண:—த்வீதீய
பரார்த்தே—ச்வேத வராஹகல்பே—வைவஸ்வத
மந்வந்தரே—அஷ்டாவிம்சதிதமே கலியுகே—
ப்ரதமபாதே—ஜம்பூத்வீபே—பாரத வர்ஷே—
பரதகண்டே—மேரோ: தக்ஷிணே பார்ச்வே—
சகாப்தே—அஸ்மிந் வர்தமாநே வ்யவஹாரிகே—
சாந்த்ரமாநேந ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும்
மத்யே—ப்லவங்க *நாம ஸம்வத்ஸரே—தக்ஷிணு*யநே
வர்ஷ* ரிதௌ—ஶ்ராவண*மாஸே—சுக்ல*பக்ஷே

ரயோதச்யரம்*க்பதிதௌ
ருகு*வாஸாயுக்தாயாம்—உத்தராபாத்ரா*நக்ஷத்ரயுக்தாயரம்ச
வங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம்
பதிதௌ—ஆஸ்மாகம் ஸகுடும்பானும்
க்ஷமஸ்தைர்ய, தைர்ய விஜய ஆயுராரோக்யைச்வர்யாபிவ்ருத்
ர்த்தம்; தர்மார்த்த காம மோக்ஷ சதுர்வித பலபுருஷார்த்த
த்த்யர்த்தம், புத்ரபௌத்ராபிவ்ருத்த்யர்த்தம், இஷ்ட காம்
ார்த்த ஸித்த்யர்த்தம், மநோவாஞ்சாபல ஸித்த்யர்த்தம்,
மஸ்த துரிதோப சாந்த்யர்த்தம்; லோகே ஸர்வஜன
க்ஷமார்த்தம், ஸமஸ்த மங்களா வாப்த்யர்த்தம்—ஸ்ரீ தேவீ
ரஸாதேந,

மம நஷ்ட வஸ்து லாப ஸித்த்யர்த்தம்*
ஸ்ரீ தேவீ பாகவத பாராயணம்

ஹம் கரிஷ்யே—

---

# II

(ஒருவருக்காக வேறு ஒருவர் பாராயணம் செய்ய)

1. ஒருவனுக்கு ஏதோ ச்ரமம் வந்து, நிவர்த்தி செய்து காள்ள தானே பாராயணம் செய்ய வஸதி இல்லாத பக்ஷத்தில், வரொருவரைக் கொண்டு, தனக்காக, தன் கோத்ரம், நக்ஷத்ரம், சி, பெயர் தெரிவித்து, ஸங்கல்பம் செய்துகொள்ளச் சொல்லிப் ராயணம் செய்யச் சொல்லலாம்.

அல்லது

2. தூர தேசத்திலிருக்கும் தன் மகனுக்கோ, பந்துவுக்கோ, ண்பனுக்கோ ஏதாவது ச்ரமம் ஏற்பட்டாலும் அவர்களுக்காக ம், தான் இங்கிருந்தே அவரவர்கள் கோத்ரம், நக்ஷத்ரம், ராசி, பயர் சொல்லிப் பாராயணம் செய்யலாம்.

ஷெ இரண்டுக்குமான மாதிரி ஸங்கல்பம் கீழே தரப்பட்டிருக் றது. விஷயம் தெரிந்த பெரியவர்களைக் கேட்டுத் தக்கபடி ாற்றிக்கொள்ளக் கோருகிறோம்.

சமனம்
க்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
ரஸன்ன வதநம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே
தேவலக்னம் ஸுதிநம்ததேவ தாராபலம் சந்த்ரபலம்
தேவ—வித்யாபலம் தைவபலம் ததேவ—லக்ஷ்மீபதே
தங்க்ரியகம் ஸ்மராமி.
ம்பூ:—ஓம்புவ:—ஓம்ஸுவ: ஓம்மஹ:—

---

* இக்குறியிட்ட இடங்களைப் பெரியோர்களைக் கேட்டு க்கபடி மாற்றிக்கொள்ளவும்.

ஓம்ஜந: ஓம்தப:—ஓம்ஸத்யம்—ஓம்
தத்ஸவிதுர்வரேண்யம் —பர்க்கோ தேவஸ்ய
தீமஹி—தியோயோந: ப்ரசோதயாத்—
ஓமாப:—ஜ்யோதிரஸ:—அம்ருதம் ப்ரஹ்ம—
பூர்புவஸ்ஸுவரோம்.

ஓம் ஓம் ஓம்

மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா
ஸ்ரீ பரமேச்வரப்ரீத்யர்தம்—சுபே சோபநே
முஹூர்த்தே—ஆத்யப்ரஹ்மண:—த்வீதிய
பரார்த்தே—ச்வேத வராஹகல்பே—வைவஸ்வத
மந்வந்தரே—அஷ்டாவிம்சதிதமே கலியுகே—
ப்ரதமபாதே—ஜம்பூத்வீபே—பாரத வர்ஷே
பரதகண்டே—மேரோ:தக்ஷிணே பார்ச்வே—
சகாப்தே—அஸ்மிந் வர்தமாநே வ்யவஹாரிகே—
சாந்த்ரமாநே ப்ரபவாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணும்
மத்யே—ப்லவங்க* நாம ஸம்வத்ஸரே—தக்ஷிண*யநே
வர்ஷ*ரிதௌ—ச்ராவண* மாஸே—சுக்ல*பக்ஷே
த்ரயோதச்யாம் சுபதிதௌ—
ப்ருகு*வாஸரயுக்தாயாம் உத்தராபாத்ரா* நக்ஷத்ர யுக்தா [யாம்சு

ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் சுபதிதௌ—
ஸ்ரீவத்ஸ* கோத்ரோத்பவஸ்ய—
பூர்வபல்குநீ* நக்ஷத்ரே—
ஸிம்ஹ*ராசௌஜாதஸ்ய— வரத* சர்மண:

அஸ்யயஜமானஸ்ய, ஸகுடும்பஸ்ய—
க்ஷேமஸ்தர்ய; தைர்ய விஜய
ஆயுராரோக்யைச்வர்யாபிவ்ருத்யர்த்தம்
தர்மார்த்த காம மோக்ஷ சதுர்வித பலபுருஷார்த்த
ஸித்த்யர்த்தம், புத்ரபௌத்ராபிவ்ருத்யர்த்தம்,
இஷ்ட காம்யார்த்த ஸித்த்யர்த்தம், மநோவாஞ்சாபல
ஸித்த்யர்த்தம், ஸமஸ்த துரிதோப சாந்த்யர்த்தம்,
லோகே ஸர்வஜன க்ஷேமார்த்தம், ஸமஸ்த
மங்களா வாப்த்யர்த்தம், ஸ்ரீதேவீ ப்ரஸாதேந,

நஷ்ட வஸ்து லாப ஸித்த்யர்த்தம்*
ஸ்ரீ தேவீ பாகவத பாராயணம்

அஹம் கரிஷ்யே—

———

* இக்குறியிட்ட இடங்களைப் பெரியோர்களைக் கேட்டு தக்கபடி மாற்றிக்கொள்ளவும்.

ஸ்ரீ:

ஸ்ரீரஸ்து

# ஸகல காரிய ஸித்தியும்

# ஸ்ரீ தேவீ பாகவதமும்

OOMB : YRLX

தே.—1

ஸ்ரீ :

# 1. இழந்த பொருளைத் திரும்பப் பெற

## ஸ்ரீ தேவீ பாகவத மகி

ஸ்ரீ தேவீ பாகவதம் ஓர் அரியதொரு நூல்; படிக்க எளிய சொல்லச் சுவைப்பது; நினைக்க இனியது; பக்திச் சு ஊட்டுவது. இந்நூலைப் படிப்பதால் விளையும் பயன்க ஏராளம். அவற்றைத் தொகுத்துக் கூறும் பகுதி ஒன்று ஸ்கா புராணத்தில், மானஸ காண்டத்தில், ஸ்ரீ தேவீ பாக மகாத்மியம் என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. அப்பகுதி ஸ்ரீ தேவீ பாகவத மகிமைகள் சிறப்பாகக் கூறப்பெற் கின்றன. அவ்வாறு கூறப்பெற்றுள்ள மகிமைகளுள் ஒன் மட்டும் இங்கே குறிப்பிடுவோம்:

ஸ்ரீ வஸுதேவர் தம் அருமைத் திருக்குமாரராகிய ஸ்ரீகண்ண ளோடும் ஏனையோரோடும் மகிழ்ச்சியாகத் துவாரகையில் வசி வந்தார். அப்போது ஸத்ராஜித் என்னும் அரசன் சூரிய உபாச செய்து, சூரிய பகவானிடமிருந்து ஒரு மணியைப் பெற்று அதற்குச் சியமந்தகம் என்று பெயர். அது ஒவ்வொரு நா நண்பகலில் தவருது பொன் கொடுக்கும் சக்தி பெற்றிருந் அத்தகைய மணி கிடைத்த காரணத்தால் ஸத்ராஜித் ம விரைவில் பெரும் பணக்காரன் ஆகிவிட்டான். அதனுல் அவன புகழ் எட்டுத் திக்கிலும் பரவிவிட்டது.

இச்செய்தியை உணர்ந்தார் கண்ணபிரான். அவ மூவுலகங்களுக்கும் சக்ரவர்த்தி. ஸத்ராஜித்தோ சாதார அரசன். ஒரு சாதாரணக் குடிமகன் அரசனைக் காட்டிலும் பே புகழும், செல்வமும் செழிப்பும் கொண்டு விளங்குதல் சரியன் எனவே கண்ணபிரான், ஏவலரின் மூலமாக, ஸத்ராஜித்துக் 'உன்னிடம் மணி ஒன்று உள்ளது; ஏராளமாகப் பொன்ன தருகிறது நான் பேரரசன்; உலகைக் காப்பவன்; ரத்தினத்தி உரியவன். எனவே, உன்னிடம் உள்ள மணியைக் கொடு தனுப்பு' என்று செய்தி அனுப்பினுர்.

கண்ணபிரான் சொல்லியனுப்பிய செய்தியைக் கேட்டா ஸத்ராஜித். செல்வச் செருக்கு அவனது அறிவை மறைத் விட்டது. கண்ணபிரானது கருத்தை அவன் உணரவில் எனவே அவன், 'நான் கடுந்தவம் செய்தேன்; பெரு முய செய்தேன்; கிடைத்தற்கரிய மணியைப் பெற்றேன். ஆக

அந்த மணி எனக்கே உரியது. அதனைத் தர முடியாது' என்று பதில் சொல்லி அனுப்பிவிட்டான்.

இப்படியிருக்கையில் ஒரு நாள் ஸத்ராஜித்தின் மைத்துனனுன ப்ரஸேனஜித் அந்த மணியை அணிந்துகொண்டு வேட்டைக்குச் சென்ருன். காட்டில் அவனை ஒரு சிங்கம் கொன்று அந்த மணியை வௌவியது. அதைக் கண்ணுற்ற கரடி ஒன்று சிங்கத்தைக் கொன்று அந்த தெய்வ மணியைக் கைப்பற்றியது. தான் பெற்ற சியமந்தக மணியுடன் அக்கரடி தன் குகையை அடைந்து விட்டது.

மணியையும் மைத்துனனையும் காணுத ஸத்ராஜித், 'எனது தெய்வ மணியைக் கண்ணபிரானே கவர்ந்திருக்கவேண்டும். முன்னே அவன் மணியைத் தன்னிடம் தருமாறு விரும்பிக் கேட்டான். நான் தர மறுத்துவிட்டேன். அதனுல் அவனே வஞ்சகமாகத் திருடிவிட்டான். திருடும் பழக்கம் அவனுக்கு இளமையிலேயே உண்டு. வெண்ணெயையும் தயிரையுமே திருடியுண்டவன் தெய்வ மணியைத் திருடாமல் இருப்பானே?' எனப் பலவாறு இகழ்ந்து பேசினுன்.

தம்மைப்பற்றி ஸத்ராஜித் இழிவாகப் பேசிப் பழி சுமத்தித் தூற்றுவதைக் கண்ணபிரானுல் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. தமக்கு வந்த பழியை அகற்றிக்கொள்ள விரும்பினுர். அந்த மணியைத் தேடிப் பெற்று ஸத்ராஜித்திடம் சேர்க்க விரும்பினுர். எனவே, அவர் ஒரு நாள் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் மணியைத் தேடிக் காட்டுக்குச் சென்றுவிட்டார்.

கண்ணபிரானைக் காணுத வஸுதேவர் கதறியழுதார்; 'என் கண்ணன் திரும்பி வருவானு? நான் கண்டு களிப்பேனு? எனக்கு இளமையில் ஏற்பட்ட சோகம் போதாதா?' என்று புலம்பிச் சோகத்துடன் இருந்தார். அந்தச் சமயத்தில் அங்கு நாரத முனிவர் வந்தார். முனிவரைக் கண்ட வஸுதேவர் தம் சோகத்தை அடக்கிக்கொண்டு, அவரை அர்க்கிய பாத்யாதிகளால் உபசரித்து, ஆசனத்தில் அமரச் செய்தார். வஸுதேவரின் முகவாட்டத்தைக் கண்ணுற்ற நாரதர், 'வஸுதேவரே! ஏன் உமது முகம் வாடியிருக்கிறது? கண்ணபிரானைக் காதல் மகனுகப் பெற்ற உமக்கும் கவலை வருமோ? வாட்டத்துக்குக் காரணம் யாதோ?' என்று வினவினுர்.

வஸுதேவரின் துக்கம் அதிகரித்துவிட்டது. அவர் பெரு வருத்தத்துடன் நாரத முனிவரைப் பார்த்து, கண்ணீர் விட்டுக் கலங்கியவாறே, 'முனிபுங்கவரே! என் அருமை மைந்தன் கண்ணன் என்னைப் பிரிந்து சென்று நான்கு நாட்கள் ஆகி விட்டன. எங்கே சென்ருனே, அறியேன். ஏன் சென்ருன் என்றும் தெரியவில்லை, அவன் திரும்பி வருவானு? கண்ணனைக் கண்குளிரக் காண்பேனு? இந்தப் பாவியின் கண்களுக்கு

மீண்டும் கண்ணனைக் காணும் பாக்கியம் கிடைக்குமா? கண்ணனைக் காணாத கண்ணும் ஒரு கண்ணா? பிரிந்த என் அருஞ் செல்வத்தை மீண்டும் காண வழி ஏதேனும் உண்டா? கருணை கூர்ந்து கண்ணனைக் காண வழி வகுத்துக் கூறியருளவேண்டும்' என்று வேண்டினார்.

அவ்வளவில் நாரதர் வஸுதேவரைப் பார்த்து, 'வஸு தேவரே, சோகத்தைக் கைவிடுங்கள். மன அமைதி கொள்ளுங் கள். இழந்த பொருளைப் பெற விரும்பினாலும் பிரிந்து சென்ற புதல்வனை அடையவேண்டுமானாலும், வீண் பழியினின்றும் குடும்பம் மீளவேண்டுமானாலும் அதற்குத் தக்க வழி ஒன்று உள்ளது. அது ஜகன்மாதாவுக்கு மிகவும் விருப்பமான நவ ராத்திரி விரதத்தை அனுஷ்டிப்பதேயாகும். அந்த விரதத்தைத் தாங்கள் மேற்கொண்டு நன்கு நிறைவேற்றினால் கண்ணபிரான் கட்டாயம் வெற்றியுடன் திரும்பி வருவார். கவலை வேண்டாம். உலகமாதாவின் நவராத்திரி விரதத்தை அகஸ்தியர் அல்லது தூர்வாஸர் கல்ப முறைப்படி அனுஷ்டியுங்கள்' என்று அருளிச் செய்தார்.

உடனே வஸுதேவர் ஸ்ரீ தேவீ உபாசகர்களை வருவித்தார். முறைப்படி ஒன்பது நாட்களிலும் ஒன்பது நிவேதனம், ஒன்பது பழங்கள், ஒன்பது பட்சணங்கள், ஒன்பது தீர்த்தங்கள், ஒன்பது அலங்காரங்கள், ஒன்பது கோலங்கள், ஒன்பது அர்ச்சனைகள் என்ற முறையில் மிகவும் பக்தி சிரத்தையுடன் பூஜை நடத்தச் செய்தார்; பெரியோர்களைக் கொண்டு ஸ்ரீ தேவீ பாகவதம் பாராயணம் செய்வித்துத் தானும் சிரவணம் செய்து மகிழ்ந்தார். இவ்வாறு எட்டு நாட்கள் ஆயின.

நவராத்திரி பூஜையும், ஸ்ரீ தேவீ பாகவத சிரவணமும் நடைபெற்ற எட்டு நாட்களுக்குள் காட்டிலே நிகழ்ந்ததைக் காண்போம். மணியைத் தேடிச் சென்ற மாயக் கண்ணன் காட்டில் ஸத்ராஜித்தின் மைத்துனனுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிச் சென்றார்; சிங்கத்தால் அவன் உயிரிழந்ததை உணர்ந்து, சிங்கத்தின் காலடிச் சுவடிகளைப் பின்பற்றிச் சென்றார். சிங்கமும் கரடியும் போர் செய்த நிகழ்ச்சியை ஊகித்துணர்ந்தார். இறந்து கிடந்த சிங்கத்தைக் கண்டவுடன், கரடியின் காலடிச் சுவடுகளையே ஒட்டிச் சென்று, கரடியின் குகையை அடைந்து விட்டார்.

கண்ணன் வரவைக் கண்டு சினத்துடன் எழுந்தது கரடி. அது சாதாரணக் கரடியன்று. ஸ்ரீ ராமபிரானின் அடிமையாகிய ஜாம்பவானே அந்தக் கரடி; ஜாம்பவான் கண்ணபிரானைப் பகை வனாகக் கருதிப் போரிடத் தொடங்கினார். சிறிது நேரத்தில் அவ ருக்கு ஸ்ரீ ராமபிரானே கண்ணபிரானாக அவதாரம் செய்து

ளார் என்னும் உண்மை புலப்பட்டுவிட்டது. உடனே ஜாம்பவான் தாம் செய்த பிழையைப் பொறுத்தருளுமாறு கண்ணபிரானை வேண்டினர்; தன் மகளாகிய ஜாம்பவதியை அவருக்கு மணஞ் செய்து கொடுத்தார். சியமந்த மணியையும் அன்புடன் அளித்துக் கண்ணபிரானை வணங்கி வழியனுப்பினர்.

மணியையும் புதிய மணமகளையும் பெற்ற மாயக் கண்ணன் ஸத்ராஜித்திடம் சென்றார்; நடந்தவற்றைக் கூறினர்; 'இதோ உன் மணி; பெற்றுக்கொள்; இனிமேலாவது வீண் அபவாதச் சொற்களைக் கூருதே' என்றார். ஸத்ராஜித் தன் பிழையை உணர்ந்தான்; கண்ணபிரானின் பெருமையை அறிந்தான்; மன்னிப்புக் கேட்டான்; தன் பிழைக்குப் பிராயச்சித்தமாகத் தன் அருமைக் குமாரி ஸ்ரீ சத்திய பாமா அம்மையைக் கண்ணபிரானுக்குத் திருமணம் செய்துகொடுத்தான்; அது மட்டுமோ? தன் தெய்வத் திருமணியாகிய சியமந்தக மணியையும் தன் பெண்ணுக்கு ஸ்திரீ தனப் பொருளாக அளித்தான்.

ஜாம்பவதி, சத்தியபாமை ஆகிய புது மணைவியார் இருவருடனும் சியமந்தக மணியுடனும் கண்ணபிரான் கல்யாண கிருஷ்ண ராகத் தம் திருமாளிகைக்குத் திரும்பினர். அப்பொழுதுதான் வஸுதேவரும் நவராத்திரி ஒன்பது நாட்களும் பக்தி சிரத்தையுடன் முறைப்படி பூஜை நடத்திப பூர்த்தி செய்து முடித்திருந்தார். நவராத்திரி பூஜை முடியவும் கண்ணபிரான் திரும்பி வரவும் சரியாக இருந்தன.

ஸ்ரீ தேவீயின் நவராத்திரி பூஜையும் ஸ்ரீ தேவீ பாகவத சிரவணமும் இழந்த பொருள்களையும், பிரிந்த சுற்றத்தையும் சேர்த்துவைக்கும் தன்மை உடையன என்பது இந்த வரலாற்ருல் விளங்குகின்றதன்றே?

---

# 2. பகைவரை வெல்ல

## மது கைடபவதம்

பூர்வத்தில் ஒரு முறை முனிவர்கள் யாவரும் ஒன்றுகூடி, ஸத் கதா சிரவணம் செய்வதற்கு ஏற்ற ஓர் இடத்தைத் தேடினர். அப்பொழுது பிரம்மதேவர் ஒரு தர்ப்பையை வட்டமாகச் செய்து மந்திரப் பிரயோகம் செய்து அதனை ஏவி, 'முனிவர்களே! சக்கரம் போன்ற இந்தத் தர்ப்பை வட்டம் எங்கு நிற்கிறதோ அந்த இடமே நீங்கள் ஸத்கதா சிரவணம் செய்வதற்கு ஏற்ற புனிதமான இடமாகும்' என்றார். அந்தத் தர்ப்பை வட்டமோ பேரமைதி நிலவிய ஒரு தபோவனத்தில் நின்றது. அந்தத் தபோவனமே

பிரம்மதேவர் தேர்ந்தெடுத்துக் கொடுத்த புனிதமான நைமி சாரண்யம் !

முனிவர்கள் யாவரும் நைமிசாரண்யத்தில் ஒன்று கூடினர். அவர்கள் ஸத்கதா சிரவணம் செய்யத் தொடங்கும்பொழுது அங்கு சூதமா முனிவர் பிரசன்னமானுர். அவர் சொல் மையும், ஆசார சீலமும் உடையவர் ; பல புராணங்களை உல கம் உய்யுமாறு அருளிய உத்தம தவத்தர். அவரைக் கண்ட முனிவர்கள் யாவரும் எழுந்து நின்று, 'முனிவர் பெருமானே' வருக வருக' என்று வரவேற்று அர்க்கிய பாத்திய ஆசமனீயங் களால் உபசரித்து, பக்தி சிரத்தையுடன் கைகளைக் கூப்பித் தொழுதனர்.

அதன் பின் முனிவர்கள் சூதமா முனிவரை நோக்கி, 'முனி சிரேஷ்டரே! இவ்வுலகில் மனிதன் தன் ஆயுட்காலத்தை ஏதோ ஒரு வழியில் செலவிட்டு வருகிருன். மூர்க்கர்கள் சண்டை யிலும், பயனற்றப் பேச்சிலும் பொழுதைப் போக்குகின்றனர். அறிவாளிகளோ காவ்ய சாஸ்திர ஆராய்ச்சியில் தம் நேரத்தைக் கழிக்கிருர்கள். பாவத்தைப் போக்குவதும் நன்மையைக் கொடுப்பதுமாக இருப்பது ஸ்ரீ தேவீ பாகவதமே என்று தேவரீர் முன்பு திருவாய்மலர்ந்தருளியிருக்கிறீர்கள். அந்தப் பாகவதம் என்னும் அமுதைப் பானம் செய்ய நாங்கள் விரும்புகிருேம். தேவாமிர்தம் நரை திரை மூப்புகளைப் போக்குமேயன்றிப் பிறப்பை ஒழிப்பதில்லை. இந்தப் பாகவத சிரவணமே பிறவிப் பிணியை வேருடன் அழித்து, முத்தியைக் கொடுக்கும் ஆற்றல் வாய்ந்தது. எனவே, ஸ்ரீ தேவீ பாகவதத்தைத் தாங்கள் எங்க ளுக்கு அருள் கூர்ந்து விரித்துரைக்கவேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

முனிவர்களின் வேண்டுகோளைக் கேட்ட சூதமா முனிவர், 'முனிவர் பெருமக்களே ! ஸ்ரீ தேவீ பாகவதத்தை விரித்துரைக்கு மாறு என்னைக் கேட்கிறீர்கள் ; நான் பெரும் பாக்கியம் செய்தவன் ஆனேன். அன்னையின் கதை ஆதலால், அடங்கிய மனத்துடன் கேட்டீர்களாக. யாரைப் பரா என்றும், மத்யமா என்றும், பச்யந்தீ என்றும், வைகரீ என்றும் நாம் துதிக்கின்ருேமோ, யார் அகில உலகத்திற்கும் அன்னையாக விளங்குகின்ருளோ, யார் எல்லா உயிர்களின் ஹ்ருதய கமலங்களிலும் வீற்றிருக்கின்ருளோ அந்த அன்னையை வணங்கித் தொடங்குகிறேன்' என்று கூறி ஸ்ரீ தேவீ பாகவதத்தைச் சொல்லலானுர். அவர் கூறியவை வருமாறு :—

ஸ்ரீ தேவீ பாகவதம் என்று வழங்கும் இந்தப் புராணம் மிக மிகப் புண்ணியமான நூல். இதனை வேத வியாஸ பகவான் இயற்றியருளினுர். 18,000 ஸ்லோகங்களும், 12 ஸ்கந்தங்களும், 318 அத்தியாயங்களும் கொண்டது இந்நூல். ராமாயணம்,

மஹாபாரதம், கிருஷ்ண சரிதம், தேவீ சீதை சரிதை, காயத்ரீ சரிதை முதலிய பல புண்ணிய சரிதங்களை இந்நூல் கூறுகிறது. இந்த பாகவதத்தைக் கேட்பதற்குப் பூர்வ ஜன்ம புண்ணியம் வேண்டும். இந்த பாகவதத்திலிருந்து ஒரு சுலோகம் கேட்டாலும் தனிப் பயன் உண்டு.

முன் ஒரு காலத்தில் சமுத்திரம் பொங்கிப் பெருவெள்ளமாகக் காட்சியளித்தது. அப்போது திருமால் ஆதிசேஷனைப் படுக்கையாக்கி, அப்படுக்கையில் சுகமாக யோக நித்திரை செய்யலானார். அவருடைய காதுகளின் அழுக்கிலிருந்து இரண்டு அசுரர்கள் தோன்றினர். அவர்கள் முறையே மது, கைடபன் எனப் பெயர் பெற்றனர். அவர்கள் வளர்ந்து, தாம பிறந்ததன் பயன் இன்னது என்று அறியாமல் பல இடங்களிலும் அலைந்து திரிந்து கடைசியில் பராம்பிகையைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தனர். அவர்களது தவத்தை மெச்சிய தேவி அவர்களுக்குக் காட்சி கொடுத்தாள். தாம் விரும்பும்போது மட்டுமே தனக்கு மரணம் உண்டாகவேண்டும் என்று அவர்கள் தேவியைக்கேட்டுக் கொண்டனர். அன்னையும் அந்த வரத்தை அவர்களுக்கு அளித்து, அளவற்ற வலிமையையும் வழங்கி மறைந்தாள்.

அன்னை ஈந்த வரத்தினால் மது, கைடபர் இருவரும் மரண பயத்தை விடுத்தனர். உடனடியாகப் பிரம்மதேவரிடம் சென்றனர்; அவரைத் தம்முடன் போருக்கு அழைத்தனர். ஸ்ரீ தேவியின் வரத்தைப் பெற்ற அவர்களுடன் பிரம்மதேவர் போர் புரிவாரோ? அவர் அஞ்சித் திருமாலிடம் சென்றார். அவரோ உறங்கிக் கொண்டிருந்தார். அதனால் பிரம்மதேவர் செய்வதறியாமல் திகைத்து, இறுதியில் அம்பிகையின் அம்சங்களில் ஒரு கூறு உள்ளவளும். மாயா சம்பந்தம் உடையவளுமான நித்திராதேவியைத் துதித்தார். அந்தத் தேவியின் அருளால் திருமாலும் கண்விழித்து நிகழ்ந்ததை அறிந்து, மது கைடபருடன் போருக்கு ஆயத்தமானார்.

மது கைடபர் இருவரும் திருமாலுடன் மாறி மாறிப் போர் செய்தனர். போர் ஐயாயிரம் ஆண்டுகள் நடந்தன. தேவீ ஈந்த வரத்தின் மகிமையால் அவர்கள் விரும்பும்பொழுதுதானே மரணம் நேரிடும். அவர்கள் மரணத்தை விரும்புவார்களோ? இந்நிலையில் அவர்களைக் கொல்லும் வழியை அறியாமல் திருமால் திகைத்து முடிவில் புவனேசுவரியைத் துதித்தார். அவருடைய தோத்திரங்களால் மகிழ்ச்சியடைந்த அம்பிகை அவரைப் பார்த்து, ‘சகோதரனே! மனங்கலங்காதே! இந்த முறை நீ வெற்றி பெறுவாய், கவலையின்றிப் போர் செய்’ என்று பணித்தாள். திருமால் மீண்டும் போர் புரியலானார்.

இவ்வாறு செய்த போரில் திருமாலுக்குச் சற்று அயர்ச்சி உண்டாயிற்று. அதனை உணர்ந்த ஜகதம்பிகை, அந்த அசுரர்கள்

மட்டும் காணுமாறு தம் மோகனத் திருவுருவைக் காட்டவே அவர்கள் அவ்வடிவழகில் மயங்கிப் போர் புரிய மறந்து நின்றனர். அந்நிலை கண்ட திருமால் அவர்களை நோக்கி, 'ஏன் தயங்குகிறீர்கள்? மயக்கமாக இருக்கிறதா? போர் புரிய இயலவில்லையா? உங்களுக்கு வேண்டிய வரத்தைத் தருகிறேன். கேளுங்கள்' என்று கூறினர்.

திருமாலின் உரையைக் கேட்ட மது கைடபர் வெகுண்டு, 'தேவியின் அருள் பெற்ற நாங்கள் எவரிடமும் சென்று யாசிக்க மாட்டோம். எங்கள் குலத்தினரிடம் வந்து யாசிப்பதுதான் உம்முடைய வழக்கம். நீர் விரும்பியதைக் கேளும். நாங்கள் தருகிறோம்' என்று கர்வத்துடன் கூறினர். அவ்வளவில் திருமால் 'என் கையால் நீங்கள் இருவரும் மரணம் அடையவேண்டும்!' என்று அவர்களைக் கேட்டார். திருமாலிடம் வசமாக அகப்பட்டுக் கொண்டதை அறிந்த அவர்கள் வேறு வழியின்றி, 'அப்படியே ஆகுக' என்று சொல்லி, "எங்களைத் தண்ணீர் நிறைந்த இடத்தில் வதம் செய்யக்கூடாது" என்று வேண்டிக்கொண்டனர். திருமாலும் அவ்வாறுசெய்ய உடன்பட்டார்.

அதன்பின் திருமால் தண்ணீர் இல்லாத இடத்தில் அவர்களைக் கொல்ல விசுபரூபம் எடுத்துத் தம் தொடையைப் பெரியதாகச் செய்துகொண்டார். மது கைடபர்களைத் தம் தொடையின்மீது ஏற்றிவைத்து, அவர்களை அழித்தார். இந்நிகழ்ச்சியைக் கண்ட தேவர்கள் மகிழ்ச்சியுடன் மலர்மாரி பொழிந்தனர்.

---

# 3. கவலை நீங்கி விரும்பிய பொருளைப் பெற

### சுக முனிவர் திருமணம்

சத்தியவதியின் குமாரரான ஸ்ரீ வேத வியாஸர் முன்னொரு காலத்தில் சரஸ்வதி நதி தீரத்தில தவம் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அங்கு ஆணும் பெண்ணுமாக ஊர்க் குருவிகள் இரண்டு ஒருங்கே அமர்ந்து கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தன. அதனைக் கண்ணுற்ற வியாஸர் மனங்கலங்கி, "என்னே! இந்த ஊர்க்குருவிகள் கூட மக்கட்பேற்றை விரும்புகின்றன! இவற்றிற்குக் குஞ்சு பிறந்து கர்மாவா செய்யப் போகிறது? பிதுர்க்களுக்கு இஃது என்ன நன்மை செய்யும்? கயைக்குச் சென்று சிரார்த்தம் செய்யப்போகிறதா? இப்படியெல்லாம் ஒன்றும் செய்யமுடியாமல் இருந்தும் இவ்வூர்க் குருவிகள் மகப்பேற்றை விரும்புகின்றனவே? எனக்கோ புத்திரன் இல்லை.

பரலோக கர்மாக்களை எனக்கு யார் செய்யப்போகிறார்கள்? இவ்வளவு நூல்களை இயற்றிய வியாஸர் பிள்ளையில்லாதவர் என்று கூறி உலகம் இகழுமே! புத்திரன் இல்லாதவர் 'புத்' என்னும் நகரத்தை அடைவரே! மக்கள் இல்லாதவர்களுக்கு நற்கதி இல்லை என்று நானே என் நூல்களில் சொல்லியிருக்கிறேனே! என் மனம் கலங்குகிறதே! எனக்கு இனி மகன் எப்படி உண்டாவான்? இந்த மனக் கலக்கத்தைப் போக்கிக்கொள்ளும் வழி என்ன?'' என்றவாறு சிந்தித்து வாட்டமாக இருந்தார்.

இவ்வாறு வியாஸர் மனவாட்டத்துடன் இருக்கும்பொழுது அங்கு நாரத முனிவர் எழுந்தருளினார். வியாஸர் நாரத முனிவரை வணங்கி வரவேற்று, 'எம்பெருமானே! மலை கலங்கினாலும் நிலை கலங்காத என் மனம் இன்று கலக்கம் அடைகின்றது. இவ்வளவு காலத்திற்குப் பிறகு புத்திரன் வேண்டும் என்னும் ஆசை எனக்கு ஏற்பட்டுள்ளது. இக்கலக்கம் நீங்கவும், புதல்வன் உண்டாகவும் நான் யாரைக் குறித்து தவம் செய்யலாம்?'' என்று பக்தி சிரத்தையுடன் வினவினார்.

அது கேட்ட நாரத முனிவர் வியாஸரை நோக்கி, 'முனிவர்ரேஷ்டரே! சொல்கிறேன். உங்களுக்கு இப்பொழுது மன அமைதி தேவை. மன அமைதி உண்டாவதற்கு யாரைக் குறித்துத் தவம் செய்யவேண்டும் என்று ஒரு முறை என் தந்தையாகிய பிரம்மதேவர் திருமாலிடம் கேட்டார். அதற்குத் திருமால், தாம் மது கைடபவதம் செய்த வரலாற்றை கூறி, அம்பிகையாகிய உலக மாதாவைக் குறித்துத் தவம் செய்தால் தான் உண்மையான ஞானமும், கவலை நீக்கமும் உண்டாகி, விரும்பிய பொருள் கிடைக்கும் என்று என் தந்தைக்குக் கூறினார். எனவே 'தாங்களும் பராசக்தியைக் குறித்துத் தவம் செய்வீராக' என்று கூறிச் சென்றுவிட்டார்.

வேத வியாஸர் முதலில் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்தார். ஆனால், அவரது கவலை நீங்கவில்லை. எனவே, அவர் ஸ்ரீ தேவீ பராசக்தியை நோக்கித் தவம் செய்தார். அவ்வாறு செய்த தவத்தினால் அவருக்கு மனச்சாந்தி உண்டாயிற்று. நமக்குப் புத்திரன் பிறப்பான் என்னும் நம்பிக்கையும் அவருக்கு ஏற்பட்டது.

இவ்வாறு தவம் செய்தபின் வியாஸர் ஒரு நாள் யாகம் ஒன்று செய்யும்பொருட்டு அக்னியை மூட்ட அரணிக் கட்டையைக் கடையத் தொடங்கினார். அப்பொழுது அங்கே வந்த ஊர்வசியின் மோகன வடிவத்தில் தன் மனத்தைப் பறிகொடுத்துவிட்டார். அதனால் உண்டான காமத்தை அவரால் அடக்கமுடியவில்லை. அந்த நிலையில் ஊர்வசி கிளி உருவம் கொண்டு பறந்தாள். வியாஸர் அக்கிளியையே பார்த்தவாறு மயங்கியிருந்தார். எனினும் அவர் தம் மனவலிமையால், அம்

மயக்கத்தை அடக்க முயன்றவாறே அரணிக் கட்டையை கடைந்தார். அப்பொழுது அங்கே அவரது வீர்யம் சிதற அக்கட்டையினின்றும் ஓர் ஆண் குழந்தை தோன்றிய இவ்வாறு கிளியுருவான தேவமங்கையின்பால் உண்டாகி மோகத்தினுல் பிறந்த குழந்தையாதலால் அக்குழந்தைக்கு சுகர் என்றே திருநாமம் அமைந்தது.

வியாஸர் தமது அருமைக் குழந்தையாகிய சுகரை அ புடனும் ஆதரவுடனும் வளர்த்து வந்தார். ஜாதகர்ம நாமகரணம், கர்ணபூஷணம், அன்னப் பிராசானம், சௌள உபநயனம் முதலியவை சுகருக்கு முறைப்படி நடத்தப் பெ றன. வியாஸரே சுகருக்கு எல்லா வித்தைகளையும் கற்பித்தா பிரகஸ்பதி பகவானும் சுகருக்குப் பலவற்றைக் கற்பித்தா சுகர் பலவகைப்பட்ட கலையறிவுகளைப் பெற்று, நல்ல தேஜசு னும், வைராக்கியத்துடனும் விளங்கினுர்.

இவ்வாறு கட்டழகும், கல்வியழகும், ஆசாரமும், வைரா கியமும் நிறைந்த தம் அருமைப் புதல்வராகிய சுகரை வியாஸ அழைத்து, 'குழந்தாய், நீ என்னுடைய நலத்தை முன்னிட் விவாகம் செய்துகொண்டு இல்லறத்தை மேற்கொள்ள வே டும்' என்று சுருதியுக்தி அனுபவத்துடன் எடுத்துக் கூறினுர்.

தம் தந்தையின் உரையைக் கேட்ட சுக முனிவர், இ லறத்தால் விளையும் இன்னல்களையும், பெண்மையால் விளையு தீமைகளையும் பெண்ணாசை ஒருவனது கல்வியறிவுகளையெல்லா மயக்கிக் கீழே தள்ளிவிடும் என்னும் உண்மையையும் எடுத் விளக்கினுர்.

பின்பு அவர், 'தந்தையே, ஒருவன் கரையேறுவதற் உண்மையான பிரம்மஞானம் தேவை. புத்திரன் செய்யு கைங்கர்யம் தந்தையை வீடு பெறச் செய்யாது. கர்மகாண்ட தாலும் பயனில்லை. எனவே, என்னை இல்லற வாழ்வில் புகுத் வேண்டாம்' என்று தம் அறிவுத் திறமைக்கு ஏற்ற முறையி எடுத்துரைத்தார்.

தம் அறிவுக் குழந்தையின் உரையைக் கேட்ட வியாஸ மீண்டும், 'குழந்தாய்! படிப்பு வேறு, அநுபவம் வேற பெரியோர்களின். ஆசாரம்தான் தலைசிறந்த மேற்கொ பெரியோர்களின் பலர் மணம் செய்துகொண்டு மக்களைப் பெ றிருக்கின்றனர். நீயும் அவ்வாறே செய்து, தந்தையாகிய எ வேண்டுகோளை நிறைவேற்று. அதுதான் உனக்கு அழ ஒருகால் எனது சொல் பொருத்தமாக உனக்குத் தோன் விட்டால், அரசாட்சி செய்துகொண்டே ஜீவன் முக்தரா இருக்கும் ஜனகமகாராஜாவைத்தரிசனம் செய்து, அவரது கருத் அறிந்து வா' என்று உரைத்தார். சுகரும் அதற்கு இண ஜனகருடைய தரிசனம் பெற்றுவரச் சென்றுர்.

நூல்களைப் படித்துப் பெற்ற அறிவினால் மட்டும் பிரம்ம ஞானம் வந்துவிடாது என்பதை உணராத சுகர் ஜனகருடைய அரண்மனையை அடைந்து, அங்கே காவல் புரியும் ஏவலாளர், பணிப்பெண்டிர், அந்தப்புர மகளிர் முதலியோர்களைக் கண்டு பேசி, பிரம்மஞான விஷயமாகப் பலவற்றை அறிந்தார். அதன் பின்பு அவர் ஜனக மகாராஜாவை அணுகிப் பல உபதேசங்களைப் பெற்றார். இவ்வாறு கேட்டவற்றால் அவர் ஓர் உண்மையை உணர்ந்தார்: 'ஒருவனுக்கு இயல்பாகவே வைராக்கியம் ஏற்பட்டால் அவனை யாராலும் மாற்றமுடியாது. ஒருகால் அவனுடைய வைராக்கியத்திற்குச் சலனம் நேரிட்டால், அதற்கு அவனது பலஹீனமான மனமே காரணமாக இருக்கும். மனத்தின்மை இருந்தால் ஒருவனை எந்த நிகழ்ச்சியும் மாற்றிவிடாது' என்பதே சுகர் உணர்ந்து தெளிந்த அந்த உண்மையாகும்.

பின்பு சுகர் ஜனகருடைய அறிவுரையின்படியும், தந்தையின் விருப்பத்திற்கேற்பவும் திருமணம் செய்துகொள்ள உடன்பட்டார். ஆயினும், எப்படி ஜனகர் அரசாட்சி செய்துகொண்டே விரக்தியோடு விளங்கினாரோ, எப்படித் தாமரையிலைமேல் தண்ணீர்போல் வாழ்ந்தாரோ அப்படியே தாமும் தம் மனத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு வாழவேண்டும் என்று அவர் உறுதி பூண்டார். அதன்பின் அவர் பீலி என்னும் மங்கையை மணந்துகொண்டார். அவர் மூலமாகப் பீலிக்கு நான்கு புதல்வர்களும், ஒரு பெண்ணும் பிறந்தனர். சுகரும் அவர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைத் தக்கபடி செய்து நிறைவேற்றிவைத்தார். பின்னர், அவர் யாதொரு கவலையும் இன்றித் தெளிந்த மனத்துடன் தவம் செய்யச் சென்றுவிட்டார்.

———

# 4. நல்ல ஸந்ததி உண்டாக

## ஸ்ரீ வேத வியாஸரின் பிறப்பு

தம்முடைய அருமருந்தன்ன ஒரே மைந்தர் இல்வாழ்க்கையைத் துறந்து தவஞ்செய்யச் சென்றுவிட்டதை உணர்ந்த வேத வியாஸர் மனம் வருந்தினார். அவர் பின்பு, 'இந்த வருத்தத்தைப் போக்கிக்கொள்ள முடியவில்லை. தாயைத் தரிசித்தால் ஒரு மைந்தனுடைய வருத்தங்கள் யாவும் நீங்கிவிடும். எனவே, நானும் என் தாயைக் கண்டு என் துக்கத்தைப் போக்கிக்கொள்வேன்' என்று சிந்தித்துத் தம் தாய் இருக்குமிடம் நோக்கிப் புறப்பட்டார்.

இவ்விதமாகச் சூதமுனிவர் கதை சொல்லிக்கொண்டு வ பொழுது, அதனைக் கேட்டுக் கொண்டிருந்த நைமிசார முனிவர்கள், சூத முனிவரை நோக்கி, 'முனிபுங்கவரே! கூர்ந்து இந்த வேதவியாஸரின் பிறப்பு வரலாற்றை எங்களு கூறியருளவேண்டும்' என்று ஆவலுடனும் பக்தியுடனும் கே னர். அவ்வேண்டுகோளைக் கேட்ட சூதர் மிக மகிழ்ச்சிய தார். வேதங்களை வகைப்படுத்தியவரும், பதினெட்டுப் புரா களை இயற்றியவரும், பிரம்மஸூத்திரம் செய்தவரும பகவான் வியாஸ முனிவரின் வரலாற்றைக் கூற யாருக்குத் மகிழ்ச்சியாக இராது! சூதமுனிவரும் வியாஸரின் ஜனன வத்தைச் சொல்ல முற்பட்டார்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் சேதி நாட்டை உபரிச என்னும் மன்னன் ஆண்டுவந்தான். அவன் தன் தவ வல யால் வானத்தே பறக்கும் விமானம் ஒன்றைப் பெற்றிருந்த கிரிஜா என்னும் பெண்மணியை அவன் மணந்திருந்தான். அ மூலமாக அவனுக்கு நான்கு புதல்வர்களும், ஒரு பெண்ணும் பி தனர்.

ஒரு நாள் குடிமக்கள் உபரிசரனை அடைந்து, காட்டு வில களால் தம்முடைய பயிர் பச்சைகளுக்குத் தீங்கு ஏற்படுகி என்று கூறி முறையிட்டனர். அந்த முறையீட்டைக் கே மன்னன், வேட்டையாடி அவ்விலங்குகளை அழிப்பதற்கா காட்டுக்குச் சென்றான்.

காட்டில் உபரிசரன் ஊக்கத்துடன் நெடுந்தூரம் செ கொடிய விலங்குகள் பலவற்றைக் கொன்றொழித்தான். வேட் முடிந்தபின்னர் அவனுக்குத் தன் வீட்டு நினைவு வந்தது. அ டைய மனைவி வீட்டுக்கு விலக்காக இருந்து நீராடும் நாள் அ அவன், 'என் மனைவியுடன் இன்று நான் கூடாவிடில் கர்மக விதிப்படி நரகதண்டனை எனக்கு ஏற்படுமே! நான் என் வேன்?' என்று எண்ணினான். உடனே அவன் தன் தபோவலி யால் தன் வீரியத்தை ஒரு தொன்னையில் வைத்து, அங்கே பற வந்த வலிமை மிக்க கழுகு ஒன்றை அழைத்து, 'நீ என் பொரு இதனைச் சிதறாது பத்திரமாக எடுத்துச் சென்று, என் மனைவியி சேர்த்துவிடு' என்று வேண்டி, அதனை அபிமந்திரித்துக் கழுகினி கொடுத்தான். கழுகும் அரசனது வேண்டுகோளுக்கு இண மிகவும் கவனத்துடன் அதனைக் கௌவிக்கொண்டு, வானவீதி வேகமாகப் பறந்து சென்றது.

இவ்வாறு அக்கழுகு பறந்து செல்லுங்கால் இடைவழி மற்றொரு கழுகு அதனைப் பார்த்தது. தொன்னையில் இருப் ஒரு மாமிசத்துண்டு என்று கருதிய அந்தக் கழுகு, இக்கழுகு போரிட்டது. போரின் விளைவாகத் தொன்னையில் இருந்த வீ நழுவி யமுனை வெள்ளத்தில் விழுந்தது. அவ்வளவில் அங்கு

ஒரு மீன் அதனை விழுங்கிவிட்டது. இங்ஙனம் விழுங்கிய மீன் வடிவத்தால் மீனாகிய அத்திரிகை என்னும் தேவமகளே. ஒரு முறை அவள் ஆற்றில் நீராடிக்கொண்டிருந்தாள். அப்பொழுது அங்கே ஒரு பிராமணன் சந்தியாவந்தனம் செய்துகொண்டிருந்தான். நீரில் முழுகி நீந்திக்கொண்டிருந்த அத்திரிகை விளையாட்டாக அந்தப் பிராமணனது காலைப் பிடித்து இழுத்தாள். அதனால் சினங்கொண்ட பிராமணன், அந்தத் தேவ மகளை மீனாகப் போகுமாறு சபித்துவிட்டான். அவ்வாறு சாபம் பெற்ற தேவமகளே மீனுருவம் எய்தி இப்பொழுது இந்த வீரியத்தை விழுங்கியவள்.

அந்த மீன் கருவுற அதன் வயிறு பெருத்துவிட்டது. அந்நிலையில் ஒரு நாள் செம்படவன் ஒருவன் மீன்பிடிக்க வலையை வீசினான். கருவுற்ற அந்த மீன் செம்படவனின் வலையில் சிக்கியது. பருத்த வயிறுடன் விளங்கிய அம்மீனை வலைஞன் இரண்டாகக் கிழித்தான். வயிற்றினுள் ஓர் ஆண் குழந்தையும், ஒரு பெண் குழந்தையும் இருந்தன. குழந்தைகளைக் கண்ட வலைஞன் அதிசயித்து அவ்விரு குழந்தைகளைத் தனது நாட்டு அரசனாகிய உபரிசரனிடம் சேர்த்தான். உபரிசரனோ ஆண் குழந்தையை மட்டும் தான் எடுத்துக்கொண்டு, செம்படவனுக்குப் பெண் குழந்தையைக் கொடுத்துவிட்டான். அப்பெண் குழந்தையும் அச்செம்படவனிடம் வளர்ந்து வந்தது. அப்பெண் நாளடைவில் செம்படவர்களின் தொழிலை மேற்கொண்டு, மீன் பிடித்தும், படகோட்டியும் வரலானாள்.

இஃது இவ்வாறு இருக்க, முனிவர்களுள் சிறந்து பராசர முனிவர் ஒரு நாள் யமுனை ஆற்றங்கரையை அடைந்து, அதனைத் தாண்டவேண்டி, அங்கே படகோட்டிக் கொண்டிருந்த செம்படவனை அழைத்து, தம்மை அக்கரையில் சேர்க்கும்படி கேட்டுக்கொண்டார். தேவ மகளாகிய மீனின் வயிற்றில் தோன்றிய பெண்ணை வளர்த்து வந்த செம்படவனே அவன். அப்பொழுது அவனுக்கு உணவு கொள்ளும் நேரம். எனவே, அவன் தான் வளர்த்து வந்த பெண்ணை அழைத்து, முனிவரைப் படகில் ஏற்றிச் சென்று அக்கரையில் விட்டுத் திரும்பும்படி கட்டளையிட்டான். அவளும் களங்கமற்ற மனத்துடன் பராசர முனிவரைப் படகில் ஏற்றி அக்கரை நோக்கி ஓட்டலானாள்.

அவ்வாறு படகு யமுனை ஆற்றில் ஓடிக்கொண்டிருக்கும் பொழுது, பராசர முனிவர் அப்பெண்ணைத் தழுவி இன்புற முயன்றார். அப்பெண் பல நியாயங்களைக் கூறித் தடுத்தாள். முனிவரோ, 'பெண்ணே! எனக்கு இச்சை தோன்றுவது அரிது. தோன்றினாலோ அதை மாற்றவே முடியாது. இப்பொழுது மிக நல்ல வேளை. இந்த நேரத்தில் கூடினால் பிறக்கும் புத்திரன் மிகவும் புகழ் வாய்ந்தவனாக இருப்பான். நீ பயப்படாதே. உன் மீது வீசும் நாற்றத்தைப் போக்குகிறேன். இங்கேயே ஒரு தீவை

யும் உண்டாக்குகிறேன். இரவையும் உண்டாக்குகிறேன். உ
துக் குழந்தை பிறந்தவுடனே நீ மீண்டும் கன்னிப் பெண்
மாறும் ஆற்றலையும் தருகிறேன். எனவே தடை செய்ய
என்றார். அம்மங்கையும் அதற்கு இசைந்தாள்.

உடனே முனிவர் அப்பெண்ணின்மீது வீசிய மீன் நாற்ற
மாற்றி நறுமணம் வீசச் செய்தார். அவள் பரிமளகந்தி ஆ
பின்பு அவர் தமது வலிமையால் அந்த நடு ஆற்றில் ஒரு
உண்டாக்கி, இரவுப் பொழுதையும் வரச் செய்தார். அப்
நறுமண மேனியுடன் நின்ற அந்த அழகியைக் கூடி இன்பு
தம் விருப்பம் நிறைவேறியவுடன் முனிவர் அந்தப் பெண்
ணிடம் விடை பெற்றுச் சென்றுவிட்டார்.

சிறிது நேரத்தில் நல்ல முகூர்த்தத்தில் தேவர்கள் அதிசய
மாறு கோடி சூரியப் பிரகாசம் போன்ற ஒளி வீசும் ஓர் அ
குழந்தையைப் பரிமளகந்தி பெற்றெடுத்தாள். அவ்வாறு பி
குழந்தை தன் தாயைப் பார்த்து, 'அம்மா, நீ எப்பொழுது எ
நினைக்கிறாயோ அப்பொழுது நான் உன்னிடம் வருகிறேன்' எ
கூறி விடை பெற்றுச் சென்றான். அவள் மீண்டும் கன்
பெண்ணாக மாறிவிட்டாள். இங்ஙனம் பராசர முனிவரு
பரிமளகந்திக்கும் புதல்வராக அப்பொழுது உதித்தவரே வியா

வியாஸ சரித்திரம் கேட்ட முனிவர்கள் அதிசயித்து ஆன
அடைந்தனர்.

---

# 5. நற்கதி அடைய

**பாண்டவ சரி**

ஐந்தாவது வேதம் என்று பாராட்டப்பெற்று, இதிக
களில் ஒன்றாக விளங்குகின்ற மகாபாரதம் முழுவதை
விளக்கிச் சொல்லுதல் இயலாது. எனவே, சுருக்கமாகப் பார
தைப் பாராயணம் செய்வோம் :—

திருதராஷ்டிரனுடைய ஆட்சியில் கௌரவருடைய சூழ்
யால் அரக்கு மாளிகைக்குத் தீ மூட்டப்பெற்றது. அதில் அ
பட்ட பாண்டவர்கள் இறைவன் திருவருளால் பிழைத்த
பீமசேனன் இடும்பனைக் கொன்று இடும்பியை மணந்தான். பி
பாண்டவர்கள் ஏகசக்ரபுரம் சென்றனர். அங்கே வீமன் பக
னைக் கொன்றான். பாண்டவர் பின்பு பாஞ்சால நாட்டை அ
தனர். அங்கே அர்ச்சுனன் மச்சயந்திரத்தை வீழ்த்திப் பெ

திரௌபதியை ஐவரும் மணந்தனர். பின் அவர்கள் திரும்பி வந்து, தாயபாகம் பெற்று இந்திர பிரஸ்தத்தில் இருந்து இராஜ சூய யாகம் செய்து, துரியோதனனுக்குப் பொருமையை உண்டாக்கினார்கள். அவன் சகுனியின் துணை கொண்டு, பொய்ச் சூதாடி, பாண்டவர்களின் நாட்டைக் கவர்ந்து, பன்னிரண்டு வருடங்கள் வனவாசமும், ஒரு வருடம் அஞ்ஞாத வாசமும் செய்ய வேண்டும் என்று அவர்களுக்கு நிபந்தனை கூறினான். அப்படியே பாண்டவர்கள் காட்டில் அந்த நியமங்களை நிறைவேற்றி, விராட நகரத்தில் மறைந்து வாழ்ந்து அங்கே கீசகனைக் கொன்று விரதத்தைப் பூர்த்தி செய்து நாடு திரும்பினர். பின்னர் அவர்கள் கண்ணனைத் தூதாக அனுப்பினர். துரியோதனன் நாட்டைக் கொடுக்க மறுத்தமையால், பாண்டவர்கட்கும் கௌரவர்கட்கும் போர் மூண்டது. போர்க்களத்தில் கண்ண பிரான் அர்ச்சுனனுக்குக் கீதாபதேசம் செய்தான். கண்ணனின் சகாயத்துடன் பதினெட்டு நாட்கள் போர் புரிந்து பாண்டவர் வெற்றி பெற்றனர்.

பாண்டவர் வெற்றி அடைந்ததைப் பொறுக்காத அசுவத் தாமன் அபாண்டவஸ்திரத்தைப் பிரயோகம் செய்தான். அந்த அஸ்திரத்தால் இரு குலத்திற்கும் ஒரே சந்ததியான உப பாண்டவர் கருகிப் பிண்டமாக விழுந்தனர். அப்பிண்டத்தைக் கண்ணபிரான் எழுப்பித் தந்தார். அவ்வாறு உயிர் பெற்ற குழந்தையே பின்னர் பரீக்ஷித் என்ற பெயரோடு பாண்டவ சந்ததி யாக அரசு புரிந்து வந்தான். அந்தப் பரீக்ஷித் ஒரு நாள் மமதை கொண்டு சினந்து, செத்த பாம்பு ஒன்றை பிரம்ம நிஷ்டையி லிருந்த ஒரு முனிவரின் கழுத்தில் மாலைபோல் இட்டுச் சென்றான். அதனால் விளைந்த மரண சாபத்தைப் பயனிலதாக்க அவன் கங்கையாற்றின் நடுவில் பாதுகாப்பான இடத்தை ஏற்படுத் திக்கொண்டு சர்வ ஜாக்கிரதையுடன் மனங்கலங்கி இருந்தான். ஆனால், மரண ஹேதுவான பாம்போபுழு உருவத்துடன் ஒரு எலுமிச்சம்பழத்தில் புகுந்து, பரீக்ஷித்தை அடைந்ததும் பாம்பாக மாறி அவனைக் கடித்துவிட்டது. பரிக்ஷீத்தும் மாண்டான். இது விதியின் செயல்.

பரீக்ஷித்தின் பிள்ளையான ஜனமேஜயன் தன் தந்தையைக் கடித்துக் கொன்ற பாம்பின்மீது கோபம் கொண்டு சர்ப்ப யாகம் செய்யத் தொடங்கினான். ஆனால், அந்த யாகம் இடையில் நின்று விட்டது. எனவே அவன், 'என் பாட்டனாருக்குத் தந்தையான யுதிஷ்டிரர் தொடங்கிய ராஜஸூய யாகம் சிசுபாலனது இறப் போடு நின்றது. தந்தையாகிய பரீக்ஷித்தோ பாம்பு கடித்ததால் மோட்சம் கிடைக்காமல் தவிக்கிறார். நான் தொடங்கிய யாகமும் இடையில் நின்றுவிட்டது. இந்தப் பாவங்கள் யாவும் எப்படித் தொலையும்? என் தகப்பனார் எப்படிக் கரையேறி மோக்ஷம் அடைவார்?' என்று நினைத்து வருந்தினான்.

இவ்வாறு வருந்தும்பொழுதுதான் ஜனமேஜயன், ஸ்ரீ பு னேசுவரியின் யக்ஞத்தினல் விளையும் பெரும்பயனைக் கே டறிந்தான். அந்த யக்ஞத்தைச் செய்தால், யக்ஞபங்க பா மும், பாம்பு கடித்த பாவமும், ஏனைப் பல்வேறு பாவங்களு நீங்கும் என்று உணர்ந்த ஜனமேஜயன், ஸ்ரீ தேவீ யக்ஞத்தை சாஸ்திர முறைப்படி வேதவிற்பன்னர்களைக் கொண்டு நடத் னன். பின்பு அவன் ஸ்ரீ தேவீ பாகவதக் கதையைச் சிரவண செய்து யக்ஞத்தை முடித்தான். அப்பொழுது ஆகாயத்தி 'ஜனமேஜயனே, உன் தகப்பனர் மோட்சம் அடைந்தா உங்கள் வமிசச் சாபங்களும் நீங்கின' என்று அசரீரி ஒலி எழுந்த அவ்வொலி கேட்ட ஜனமேஜயன் பேரானந்தம் அடைந்தான்.

---

# 6. கடன் நிவாரணமும் மனச்சாந்தியு பெற; கன்னிப் பெண்களுக்குக் கல்யாணம் நிகழ

ஸ்ரீ புவனேச்வரி து

ஸ்ரீ தேவீ பாகவதத்தில் நூற்றுக்கணக்கான துதிகளும் ம திரங்களும் அமைந்துள்ளன. அவற்றில் சிறந்தது ஸ்ரீ புவனேச்வ தோத்திரம். இந்தத் தோத்திரத்தைப் பாராயணம் செய்வதா கன்னிப் பெண்களுக்குக் கடிமணம் நடைபெறும். கட தொல்லையால் வருந்துபவர்களுக்கு நிவாரணம் ஏற்படும் மனவமைதிவிழந்து அல்லலுறுவோர்க்கு சாந்தி கிடைக்கும் தோத்திரங்கள் எல்லாவற்றையும் பாராயணம் செய்யமுடிய விடினும், சில ச்லோகங்களையேனும் பக்தியுடன் படித்தால் நல் பயன் கிடைக்கும் என்று பெரியோர்கள் கூறுவர். எனவே அந்தத் தோத்திரங்களில் சிலவற்றை ஈண்டுக் காட்டுவோம் பொருளுடன் இசையுடன் பாடித் துதிப்பதற்கு உதவியாக அவை எளிய அழகிய தமிழ்ப் பாடல்களின் உருவிலும் ஆங்காங்கே தர பெறுகின்றன:

1. நமோ தேவ்யை ப்ரக்ருத்யை ச
 விதாத்ர்யை ஸததம் நம: I
 கல்யாண்யை காமதாயை ச
 வ்ருத்யை ஸித்யை நமோ நம: II

"தேவியே போற்ற யாண்டும்
 இயற்கையாய்த் திகழ்வாய் போற்றி
மேவுகல் யாணி போற்றி

யாவையும் ஈவாய் போற்றி
இலகுறு வளர்ச்சி தந்து
தாவரு சித்தி ஈயும்
தயாபரை போற்றி போற்றி. ''

2. ஸத்சதாநந்த ரூபிண்யை
ஸம்ஸாராரணயே நம :
பஞ்ச க்ருத்யை விதாத்ர்யை ச
புவனேச்வர்யை நமோ நம:

''சச்சிதா னந்த மேதன்
வடிவெனச் சார்ந்தாய் போற்றி
அச்சமார் பிறவிக் காட்டுக்கு
அனல்என இருப்பாய் போற்றி
இச்சகம் படைத்துக் காத்துச்
சங்கரித் தேம றைத்து
நச்சிய முத்தி ஈயும்
புவனேசை நற்ருள் போற்றி. ''

3. வித்யா த்வமேவ நநு புத்திமதாம் நராணும்
சக்திஸ் த்வமேவ கில சக்திமதாம் ஸதைவ |
த்வம் கீர்த்தி காந்தி கமலாமல துஷ்டிரூபா
முக்தி ப்ரதா விரதிரேவ மனுஷ்யலோகே.

''மதிநலம் பெற்ருே ருக்கு
வாய்த்தவக் கல்வி நீயே
பொதியுறு வன்மை யோர்க்கு
வல்லமை நீயே பூவில்
துதிபெறு புகழும் தேசும்
தூயதா மரையும் நீயே
விதியென முத்தி ஈயும்
விரதமேற் கொண்டாய் அன்ருே ?

4. த்ராதா த்வமேவ மம மோஹமயாத் பவாப்தேஸ்
த்வா மம்பிகே ஸததமேமி மஹார்த்திதே ச
ராகாதி பிர்விரசிதே விததே கிலாந்தே
மாமேவ பாஹி பஹு துக்ககரே ச காலே.

''பிறப்பெனும் கடலில் வீழ்ந்த
பேதையேற் கரணம் நீயே
மறப்பிலா துன்னை எந்த
நிலையிலும் வாழ்த்துவேன் காண்



ஸ்ரீ வடிவுடை அம்மன்
திருவொற்றியூர்

வெறுப்பொடு விருப்பம் மிக்கு
விதியினுல் வீழும் துன்ப
இறப்பெனக் கடையுங் காலே
என்னை நீ காத்தல் வேண்டும். ''

5. நமோ தேவீ மஹா வித்யே
நமாமி சரணெள தவ !
ஸதாக்ஞாந ப்ரகாசம் மே
தேஹி ஸர்வார்த்ததே சிவே.

"அன்னையே போற்றி வித்தை
யாயினை போற்றி நின்றன்
பொன்னவிர் மலர்த்தாள் போற்றி
பூசித்தார்க் கெல்லாம் ஈந்த
மன்னுறச் செய்ய வல்ல
மாதேவி போற்றி நாயேன்
பன்னிரு மெய்ஞ்ஞா னத்தைப்
படைத்திட அருளு வாயே. ''

ஸ்ரீ புவனேச்வரியைப் பற்றிய தோத்திரங்களுள் ஈண்டுக் காட்டப்பெற்றுள்ள இந்த ஐந்து தோத்திரங்களையும் பொருள் உணர்ந்து நியமத்துடன் காலை மாலை பாராயணம் செய்பவர்களுடைய சகல விருப்பங்களும் நிறைவேறும். குறிப்பாகக் கடன் நிவாரணமும், மனச் சாந்தியும் உண்டாகும். கன்னிப் பெண்களுக்கு விவாஹம் ஆகும்.

---

# 7. அறிவு நிரம்ப

## சத்தியதவன் உபாக்கியானம்

ஸ்ரீ தேவியை வழிபடுதற்குரிய திருநாமங்களுடன், பீஜாக்ஷரம் என்று வழங்குகின்ற ஓம்,க்லீம், ஹ்ரீம் போலுள்ள எழுத்துக்களையும் சேர்த்துக் கூறுதல் ஆன்றோர் மரபு. அந்த பீஜாக்ஷரங்களுள் சிலவற்றைக் கூறினாலும் பெரும்பயன் கிடைக்கும் என்பதை வலியுறுத்துவது கீழ்க்காணும் உபாக்கியானம் :—

கோசல தேசத்தில் தேவதத்தன் என்ற பிராமணன் ஒருவன் நெடுநாட்களாகப் பிள்ளை பேறு இல்லாமல் வருந்தினான். எனவே, அவன் மகப்பேற்றின் பொருட்டுத் தமஸா நதிக்கரையில் புத்திர காமேஷ்டி யாகம் செய்ய முற்பட்டான். அவன் ஹோம குண்டங்களை அமைத்தான்; மூன்று விதமான அக்னிகளை எழுப்பி

ஞன் ; தக்கவர்களைப் பிரம்மா, அத்வர்யு, ஹோதாவாக அமை தான் ; மகரிஷி கோபிலரை உத்காதரவாக (சாமகானம் பா படி) ஏற்பாடு செய்தான். வயது முதிர்ந்துவிட்ட காரணத்தா அந்த மகரிஷியால் மூச்சை இழுத்துச் சாமகானம் செய்யமுடி வில்லை. அதனால் கோபத்தினால் நிதானமிழந்த தேவதத்தன் அ முனிவரை நோக்கி, 'என்ன, அறிவிலியைப்போல இபபடி அப வரமாகக் கானம் செய்கின்றீரே!' என்று கேட்டுவிட்டான்.

தேவதத்தனுடைய இகழ்ச்சியுரையைக் கேட்ட அம்முனிவ கடுஞ்சினம் கொண்டு, என்னுடைய வயது முதிர்ச்சியை எண்ண மல் நீ என்னை அறிவிலி என்று இகழ்ந்து கூறினாய். எனவே உனக்கு அறிவிலியான புதல்வன் பிறப்பானாக' என்று சாப கொடுத்தார். முனிவரின் சாபமொழியைக் கேட்ட தேவதத்த நடுநடுங்கிப் பணிவுடன், 'சுவாமி, இப்படிச் சாபம் கொடுக்கலாமா சிராத்தத்தில்கூட அறிவிலியான பிராமணனுக்கு அன்னம் வேண்டுமானாலும் அளிக்கலாமேயன்றித் தானம் செய்ய கூடாதே ! அப்படியிருக்க என் குழந்தையின் கதி என்ன ?' என் கூறிக் கண்ணீர் விட்டுக் கதறினான்.

"நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்''

என்பதற்கிணங்க, முனிவரின் சினம் அவ்வளவில் தணிந்துவி டது. உடனே அவர், உன் மகன் சில ஆண்டுகளுக்குப்பிறகு சிறந் மேதை ஆவான்' என்று அருள் செய்தார். யாகம் முடிந்தது.

பிறகு, தேவதத்தனின் மனைவியான **ரோகிணி** கருவுற்று உரிய காலத்தில் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள் குழந்தையும் வளர்ந்தது. ஆனால், அக்குழந்தை பரம மூடனா இருந்தது. தன் மகன் முட்டாளாக இருக்தலைக் கண்ட தே தத்தன் பெருந்துன்பம் அடைந்து, மூடப்பிள்ளைகளைப் பெறுத சாவைவிடக் கொடியது. ஆதலின், இவனைப் பலரும் இகழ்ச் செய்வதைக் கண்டு வருந்துவதைக் காட்டிலும் இவனைக் காட்டி விடுவதே நலம்' என்று முடிவு செய்து, அப்பிள்ளையைக் காட்டிற் ஓட்டிவிட்டான்.

காட்டிலே அந்தச் சிறுவன் தன் மூடத்தனத்தை நினைந்த வருந்தி, தனக்கு ஒன்றும் தெரியவில்லையே என்று துக்கமடைந்து 'இனி நான் பொய்யே சொல்லமாட்டேன்' என்று விரதம் பூண் டான். உண்ணல், உறங்கல் என்னும் இரண்டை மட்டும் மே கொண்டு, பொய்யே கூருத காரணத்தால் அவனுக்குச் சத்தி **தவன்** என்று பெயர் அமைந்தது. பதினான்கு ஆண்டுகள் கழிந்தன அவனுடைய நல்வினைப் பயனாக நவராத்திரிக் காலம் வந்தது அது நவராத்திரிக் காலம் என்பது சத்தியதவனுக்குத் தெரியாது

இந்நிலையில் அக்காட்டில் ஒரு வேடன் எதிர்பாராத வண்ண ஒரு பன்றியை அம்பினால் எய்தான். அடிபட்ட பன்றி வேகமா ஓடிவந்து சத்தியதவன் வசித்து வந்த குடிசைக்குள் மறைந் கொண்டது. பன்றியைத் துரத்தி வந்த வேடன் ஆசிரமத்தில் இருக்கும் சத்தியதவனைப் பார்த்து, 'இங்கே ஒரு பன்றி வந்ததா? அதனைக் கொன்று சாப்பிடுவது எனது குலதர்மம். நான் பொய் சொல்லவில்லை. நீயும் பொய் சொல்லக்கூடாது' என்று வினவி னான். இதனைக் கேட்ட சத்தியதவன், "இங்கே பன்றி இருக்கிறது என்று கூறினால் சத்தியம் ஆகாது. ஏனெனில் அதனால் ஹிம்சை, ஏற்படுகிறது. வாய்மை எனப்படுவது பிற உயிர்களுக்குத் தீங்கு தராத சொல்லாக இருத்தல் வேண்டும் அன்றோ! இல்லை என்றாலோ இவன் பட்டினியாகப் போகும் பாவம் நம்மைச் சேரும். இந்தப் பன்றி உறுமுகிற 'ஹ்ரும் ஹ்ரும்' என்ற ஓசையோ என் உணர்ச்சிக்கு உள்ளாக்குகிறதே?" என்று எண்ணினான்.

அப்பொழுது நவராத்திரிக் காலம் என்று குறிப்பிட்டோம். நவராத்திரிக் காலத்தில் அம்பாளின் பீஜாக்ஷரத்தின் பகுதியான 'ஹ்ரும்' என்ற ஓசை சத்தியதவனின் காதில் விழ்ந்த காரணத் தால் அவனுக்கு உடனே ஞானம் உண்டாகிவிட்டது. எனவே, அவன் அவ்வேடனை நோக்கி, 'எவன் பார்க்கிறானோ அவன் சொல்லமாட்டான். எவன் சொல்கிறானோ அவன் பார்க்கமாட் டான். தன் வேலையிலேயே குறிப்புள்ள வேடனே, நீ அடிக்கடி என்ன கேட்கிறாய்?" என்று கேட்டான். அவ்வுரையைக் கேட்ட வேடன் ஒன்றும் பதில் சொல்லாமல் சென்றுவிட்டான். சத்தியதவன் பீஜாக்ஷர உச்சாரண மகிமையால் அறியாமை நீங்கிப் பெரும் புலமை பெற்றான். அவனுடைய பெற்றோர் இருவரும் வந்து பெருமகிழ்ச்சியுடன் அவனைத் தம் இருப்பிடத் திற்கு அழைத்துச் சென்றனர்.

பன்றி உறுமிய ஒலிக் குறிப்பை நவராத்திரிக் காலத்தில் கேட்ட மூடனான பிராமணச் சிறுவன் மிகப் பெரிய புலமை பெற்றான்! பீஜாக்ஷரத்தின் மகிமை இத்தகையது என்றால், அன்னையை நியமத்துடன் பூஜை செய்கின்றவர் அடையும் பாக்கி யங்களைக் கூறவும் இயலுமோ? தேவியைக் குறித்துச் செய்யப் படும் எந்த யக்ஞமும் மிகப் பெரும் பலனைக் கொடுக்கும் என் பதில் எந்தவிதமான கருத்து வேறுபாடும் இருக்கமுடியுமோ?

———

# 8. மனோரதம் நிறைவேற

### சசிகலா சுயம்வ

சூரிய வம்சத்திலே தோன்றிய துருவஸிந்து என் மன்னன் கோசல நாட்டை ஆண்டு வந்தான். அவன் வீர புகழும் உடையவன். அவனுக்கு மனோரமா என்னும் தர்மப னியும், லீலாவதி என்னும் காமக்கிழத்தியும் இருந்தனர். மன்ன இருவரிடமும் ஒத்த அன்பினனாய் ஒழுகிவந்தான். ஆண்டுகள் சென்றபின், லீலாவதி மிக்க அழகுடைய ஆண் குழந் யொன்றைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தை பிறந்த பத் நாளில் மனோரமாவுக்கும் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அர அவ்விரு குழந்தைகளுக்கும் ஜாத கர்மாக்களைச் செய்து முடி அவற்றிற்கும் முறையே சத்ருஜித், சுதர்சனன் என்று நாமகரண செய்வித்து, அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம் முத வற்றை முறைப்படி நடத்தி, கல்வியும் கற்பித்தான்.

இரு புதல்வர்களுள் சத்ருஜித் தோற்றப் பொலிவு உடை வனாய், மக்களோடு இனிமையாகப் பேசி எல்லோருடைய உள்ள தையும் தன் வசப்படுத்தும் இயல்புள்ளவனாய் விளங்கி சுதர்சனனோ சற்று சங்கோசமும், அடக்கமும் உடையவ இருந்தான். அதனால் அவனுக்கு மக்களுடைய தொட இல்லாமல் இருந்தது.

ஒரு சமயம் துருவஸிந்து காட்டிற்கு வேட்டையாடச் செ பொழுது, ஒரு சிங்கம் வெளிப்பட்டு அவனைக் கொல்ல முயன் அரசனும் தன் வலிமை முழுவதையும் காட்டி அச்சிங்கத்து போரிட்டான். முடிவில் சிங்கம் அம்மன்னனைக் கொன்றுவிட்ட

சிங்கத்தினால் துருவஸிந்து இறந்துவிட்ட செய்தியை அ மந்திரிகள் ஒன்றுகூடி, அரசனுடைய புதல்வர் இருவருள் யாரு முடிசூட்டுவது என்பது பற்றி ஆலோசித்தனர். இதற்கிடை தன் பேரனுக்கே முடிசூட்டச் செய்யவேண்டும் என்று சத் ஜித்தின் பாட்டனாகிய யுதாஜித் அங்கு வந்து சேர்ந்தான். அ நேரத்தில் தன் பேரனுக்கே முடி சூட்டவேண்டும் என்று சு சனனின் பாட்டனாகிய வீரசேனன் பெருமுயற்சி செய்தா மந்திரிகள் பலவிதமாக ஆலோசனை நடத்தி முடிவில் சுதர்ச னுக்கே முடி சூட்டவேண்டும் என்று தீர்மானித்தனர். மக்க மந்திரிகளின் தீர்மானத்தை ஆதரித்தனர்.

இவ்வாறு மந்திரிகளும் மக்களும் முடிவு செய்த பான்மை உணர்ந்த யுதாஜித் பெருங்கோபங் கொண்டான். அ வஞ்சகர்கள் பலரைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டு நி

மற்ற முறையில் போர் செய்யத் தொடங்கினன். வீரசேனனும் விடாப் பிடியாக நின்று யுதாஜித்துடன் போர் செய்தான் இரு திறத்தாருக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. போரில் பலர் வீழ்ந்தனர். இறுதியில் யுதாஜித் வஞ்சகமாகச் சுதர்சனனின் பாட்டனை வீரசேனனைக் கொன்று, அரசைக் கைப்பற்றிக்கொண்டான்;

நிகழ்ந்தவற்றை அறிந்த லீலாவதி, 'என் கணவர் இறந்தார். தந்தையும் கொலையுண்டார்; அரசும் பிறர் வசம் ஆயிற்று. இனி நான் இங்கிருந்தால் என்னுடைய ஒரே குழந்தையான சுதர்சனனுக்கு நிச்சயம் பெருங்கேடு உண்டாகும்' என்று எண்ணி, தன் மகனை அழைத்துக்கொண்டு இரவோடு இரவாக யாரும் அறியாதவாறு நகரை விடுத்து வெளியேறிவிட்டாள். அவள் காட்டில் நெடுந்தூரம் சென்றபொழுது, திருடர்கள் அவளை வழிமறிந்து, அவளுடைய ஆடைகளையும், ஆபரணங்களையும் கவர்ந்து சென்றனர். "பொருள் போனால் மீண்டும் பெறலாம். குழந்தையை இழந்துவிட்டால் என் செய்வது? நல்ல வேளை! குமாரன் பிழைத்தானே!" என்று எண்ணி அவள் அக்காட்டிலிருந்த பாரத்வாஜ முனிவரது ஆசிரமத்தை அடைந்தாள்.

ஆசிரமத்தில் மனோரமா பாரத்வாஜ முனிவருடைய திருவடிகளை வணங்கித் தனக்கு நேர்ந்த துன்பங்களைக் கூறி வருந்தினள். அவளது துக்க உரையைக் கேட்ட பாரத்வாஜர் அவளைத் தேற்றி அந்த ஆசிரமத்திலேயே தனது மைந்தனுடன் தங்கியிருக்குமாறு அவளுக்குக் கூறினர். மனோரமாவுக்கு நல்லதொரு புகலிடம் கிடைத்துவிட்டது. தன் குமாரன் நல்ல சூழ்நிலையில் இருப்பதால் சிறப்புடன் முன்னேறுவான் என்று கருதிய மனோரமா அன்னை பராசக்தியின் திருவடிகளைத் தியானித்தவாறே அங்கு வாழ்ந்து வந்தாள்.

யுதாஜித் தன் பேரனுகிய சத்துருஜித்திற்கு முடி சூட்டி வைத்துச் தன் நாட்டிற்குத் திரும்பிவிட்டான். மனோரமாவும், சுதர்சனனும் என்ன ஆனார்களோ என்று மக்கள் கவலைப்பட்டனர்.

தனது நாட்டை அடைந்த யுதாஜித்திற்கு மனோரமாவும் சுதர்சனனும் பாரத்வாஜ முனிவரின் ஆசிரமத்தில் இருக்கும் செய்தி தெரிந்தது. அவ்விருவரையும் கொன்றுவிட விரும்பிய அவன், துர்த்தரன் என்னும் வேடர் தலைவனின் துணையோடு, பெரும்படையுடன் பாரத்வாஜரின் ஆசிரமத்தை நோக்கிச் சென்ருன். அவனது வருகையைக் கேள்வியுற்ற மனோரமா விரைந்தோடிச் சென்று பாரத்வாஜருடைய திருவடிகளில் விழுந்தாள். "முனிவர் பெருமானே! என்னையும் என் அருமைக் குமாரனையும் கொல்ல யுதாஜித் வருகிருன். தாங்கள்தான் எங்களுக்கு உயிர்ப்பிச்சை தரவேண்டும்" என்று அழுது வேண்டினள். பாரத்வாஜரும் 'அஞ்சாதே' என்று அவளுக்கு அபயம் அளித்தார்.

பின்பு பாரத்வாஜர் பகையுடன் வரும் யுதாஜித்திடம் சென்று, 'யுதாஜித், நீ திரும்பிச் சென்றுவிடுவதுதான் நேர்மையானது' என்று அறிவுரை கூறினர். அந்த அறிவுரை கேட்ட யுதாஜித், தன் முதல் மந்திரியைக் கலந்து ஆலோசித்து, 'முனிவர்களது கோபம் பொல்லாதது. அவர்களைப் பகைக்கக்கூடாது. மேலும் சுதர்சனன் பரம ஏழையாக இருக்கிறன். அவனால் நம் பேரனுக்கு எந்தத் தீங்கும் நேரிடாது' என்று யோசித்து முடிவு செய்து, பாரத்வாஜருடைய அறிவுரைப்படியே தனது நகரத்திற்குத் திரும்பிவிட்டான்.

இந்நிகழ்ச்சிக்குப் பின் ஒரு நாள் அரசகுமாரனுகிய சுதர்சனன் ஏனைய முனிகுமாரர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தான். அப்பொழுது முனிகுமாரன் ஒருவன் சுதர்சனனை நோக்கி **'க்லீவனே, இங்கு வா'** என்று குறும்பாக அழைத்தான். அப்பொழுது அச்சொல்லின் முதலெழுத்தான **'க்லீ'** என்ற பீஜாக்ஷரம் சுதர்சனன் மனதில் ஆழமாகப் பதிந்து அவன் அந்த அக்ஷரத்தையே நினைத்து **'க்லீம், க்லீம்'** என்று பல முறை கூறிவந்தான். இவ்வாறு பதினெரு ஆண்டுகள் அவன் அந்த பீஜாக்ஷரத்தைப் பல கோடி முறைகள் ஜபித்துவிட்டான். அதனுல் அவனுக்கு நல்ல ஞானமும், பெருவலிமையும், சிறந்த தேஜஸும் உண்டாயின. சுதர்சனன் இவ்வாறு மிக நல்ல முறையில் வளர்ச்சி பெறுதலைக் கண்ட முனிவர் பெருமான் மகிழ்ச்சியுற்று அவனுக்குப் பலவகைப்பட்ட கலைகளையும் கற்பித்தார். அவன் பீஜாக்ஷரத்தை அடிக்கடி கூறிவந்த காரணத்தால் மகிழ்ச்சியுற்ற தேவி, சிவந்த ஆடையை உடுத்திய தன் உருவுடன் அவனுக்குக் காட்சியளித்தாள். அவனுக்குப் பெருவலிமை அமையுமாறு அருள் செய்து, சிறந்த ஒரு வில்லையும் கூரிய அம்புகளையும் வழங்கியருளி மறைந்தாள்.

ஒரு முறை காசி தேசத்து அரசனின் பணியாளர் சிலர் அவ்வழியே சென்றனர். அவர்கள் சுதர்சனனுடைய பேரழகையும் பெருவலிமையையும் கண்டு வியந்து, அவனைப்பற்றிக் காசி மன்னனின் மகளான **சசிகலை** என்பவளிடம் பெரிதும் புகழ்ந்து கூறினர்கள். சுதர்சனனைப் பற்றிய புகழுரைகளைக் கேட்ட சசிகலை அவனிடம் காதல் கொண்டுவிட்டாள். அவள் சுதர்சனனையே மணக்க விரும்பிப் பராம்பிகையைப் பிரார்த்தித்தாள். இயல்பாகவே சசிகலை தேவியிடம் ஒப்பற்ற பக்தி பூண்டவள். எனவே, தேவி ஒரு நாள் சசிகலையின் கனவில் தோன்றி, 'நீ சுதர்சனனையே கணவனுக ஏற்றுக்கொள். அதனுல் உனக்குச் சகல சௌபாக்கியங்களும் கிடைக்கும்' என்று கூறி மறைந்தாள்.

தான் கண்ட கனவினை நினைத்து சசிகலை பெருமகிழ்ச்சியடைந்தாள். தேவியின் கட்டளையை மனத்தில் கொண்டு சசிகலை ஓர் அந்தணனை அழைத்தாள்; சுதர்சனனுக்குத் தன் காதலைத் தெரிவிக்கும்படியும், தன் சுயம்வர காலத்தில் காசிக்கு

வந்து தான் சூட்டும் மணமாலையை ஏற்றுத் தன்னை மணந்து கொள்ளுமாறு விநயத்துடன் விண்ணப்பிக்கத் தூது விடுத்தாள்.

அவ்வாறே அந்தணனும் தூது சென்று, சுதர்சனனைக் கண்டான். சசிகலையின் காதலை எடுத்துரைத்தான். சுயம்வரத்திற்கும் வந்து சசிகலையை மணக்குமாறு வேண்டினான். சுதர்சனன் அது கேட்டு மகிழ்ந்து, தானும் அவளை மணக்க விரும்புவதையும், தான் சுயம்வரக் காலத்தில் காசிக்கு வருவதாகவும் அந்தணன் மூலமாகச் செய்தி அனுப்பினான்.

சுதர்சனனிடம் தூது சென்ற அந்தணன் திரும்பி வந்து, சுதர்சனனுடைய உயர்ந்த குணம், சிறந்த வலிமை, கட்டழகு வாய்ந்த உடல் ஆகியவற்றை அவன் சசிகலையினிடம் கூறி, அவன் சொல்லி விடுத்த செய்தியையும் கூறினான். சசிகலையும் சுதர்சனனை மணக்கும் நன்னாள் எந்த நாளோ என்று அந்நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். விரகதாபத்தால் அவளுடைய உடல் மெலிவுற்றது.

சுதர்சனன் விடாமல் பீஜாக்ஷர ஜபம் செய்து வந்தமையால் தேவி திருமகள் வடிவில் தோன்றி அவனுக்கு அருள் புரிந்தாள். அதனால் வேட அரசனாகிய துர்த்தரன் மறுநாள் அங்கு வந்து, சுதர்சனனுக்கு நான்கு குதிரைகள் பூட்டிய தேரும், வில்லும், அம்பறாத்தூணி முதலியனவும் கொடுத்துச் சென்றான். அம்பிகையின் திருவருளால் எல்லாம் நன்மையாக முடிதலை அறிந்து, சுதர்சனன் அம்பிகையைத் துதித்தவாறே இருந்தான். எப்பொழுதும் தன்னைக் கோடி வீரர்கள் சூழ்ந்து வருவது போன்ற தோற்றம் அவனுக்கு உண்டாகிக் கொண்டேயிருந்தது. இவ்வளவு சிறப்புகளும் காமபீஜ மந்திரத்தினால் விளைந்தன என்பதை அவன் மறக்கவேயில்லை.

தன் மகளான சசிகலை விரகதாபத்தால் உடல் மெலிதலை யுணர்ந்தான் காசி மன்னன். அவளுக்குத் திருமணம் நிகழ்த்த எண்ணினான். அரச கன்னியர் சுயம்வரத்தினால் கணவரைத் தேர்ந்தெடுப்பர். அந்தச் சுயம்வரம், பந்தயசுயம்வரம், வீரசுயம்வரம், இச்சா சுயம்வரம் என்று மூன்று வகைப்படும். காசி மன்னன் இச்சா சுயம்வரத்தை நடத்த எண்ணி, எல்லா மன்னர்களுக்கும் சுயம்வர ஓலை போக்கினான். மன்னர்கள் பலர் சுயம்வரத்திற்கு வந்து குழுமினர். தன் மகள் சுதர்சனனை விரும்புகிறாள் என்பதை உணர்ந்த காசி மன்னன் அவளை நோக்கி, 'குழந்தாய், நான் உன் தந்தை. உனது நலத்தில் நாட்டம் கொண்டவன் நான். எனவே, நான் சொல்வதைக் கேள். சுதர்சனன் மிகவும் ஏழை; நாட்டை விட்டுத் துரத்தப்பெற்றவன்; காட்டில் வாழ்பவன்; அவனுக்குப் பகைவர்கள் பலர் உள்ளனர். எனவே, நீ வேறு சிறந்த அரச

குமாரனை மணந்தால் சாலச் சிறந்தது' என்றான். அத சசிகலை, 'தந்தையே! தேவியின் திருவருளால் அவரைச் சூ எல்லாத் துன்பங்களும் அழிந்தொழியும். அவரையே கண நான் வரித்துவிட்டேன். இனி வேறொருவரைக் கணவனாக ம தினால் கருதுவது பாவம். எனவே நான் அவரையே மணப்பே என்று கூறினாள். தன் மகளின் மனவுறுதி கண்ட மன்னன் தே யின் கட்டளைப்படியே யாவும் நிகழும் என்று எண்ணி அத மேல் ஒன்றும் பேசாமல் இருந்துவிட்டான். 4. 5. 6.

சுயம்வர நாள் நிச்சயிக்கப்பட்டது. சசிகலை மீண்டும் அந்தணனை அழைத்து, 'சுதர்சனர் இருக்கும் இடத்திற்குச் செ லுங்கள்; கட்டாயம் சுயம்வரத்திற்கு வரும்படி நான் வேண் கொண்டதாக உரையுங்கள்; அவருக்கே நான் மாலையிடுவே என்னும் செய்தியை மறவாமல் கூறுங்கள்; சுயம்வரத்தி அவர் வராவிடில் என் உயிர் நில்லாது என்பதையும் தெளிவா சொல்லிவிடுங்கள்' என்று மொழிந்து, சுதர்சனனிடம் அ ஏவினாள்.

தூதராகச் சென்ற அந்தணர் சுதர்சனனிடம் சசி சொல்லி விடுத்தவற்றைக் கூறினார். சுதர்சனனும் சுயம்வ திற்குச் செல்ல நிச்சயித்தான். அவன் தன் அன்னையி தன் கருத்தைத் தெரிவித்தபொழுது அவள், 'குழந்தாய்! எளிய நிலையில் உள்ளோம். சுயம்வரத்திற்குப் பல தேசத்து அ குமாரர்கள் வந்திருப்பர். அவர்களுக்கு அரச மரியாதை கிடை கும். வறிய நிலையில் உள்ள நம்மை யாரும் மதிக்கமாட்டார் எனவே, நீ சுயம்வரத்திற்குச் செல்வது தக்கதன்று' என் கூறினாள். சுதர்சனனோ தன் உறுதி குன்றாமல், தன் தா நோக்கி, 'அம்மா உலகமாதாவாகிய பராசக்தியின் அ நம்மைக் காப்பாற்றும். கருணை கூர்ந்து என்னை ஆசீர்வதி அனுப்புங்கள்' என்று பணிவுடன் வேண்டினான். அது கே தாய் மனம் இசைந்து, தன் மகனை அதற்கு மேலும் தடு நிறுத்த விரும்பாதவளாய், வெற்றி தருதற்குரிய ஸ்ரீ ஜகதன்னை கவசத்தை துதித்து, வாழ்த்தியனுப்பினாள். அவள் கூறிய கவ வருமாறு :

## ஸ்ரீ தேவி கவசம்

1. அக்ரதஸ் தேம்பிகா பாது பார்வதீ பாது ப்ருஷ்டத:
வாராஹீ விஷமே பாது துர்கா துர்கேஷு கர்ஹிசித்
2. காளிகா கலஹே கோரே பாது த்வாம் பரமேச்வரீ
மண்டபே தத்ரமாதங்கி ததாஸௌம்யா ஸ்வயம்வரே ||
3. பவாநீ பூபமத்யே து பாது த்வாம் பவமோசனீ
கிரிஜா கிரிதுர்க்கேஷு சாமுண்டச த்வரேஷு

4. காமாகா காநநேஷ்வேவம் ரக்ஷது த்வாம் ஸநாதநீ
விவாஹே வைஷ்ணவி சக்தி : அவது த்வாம் ரக்ஷத்வஹ
5. பைரவி ச ரணே ஸௌம்ய சத்ருணும் வைஸமாகமே
பார்வதி பார்ச்வயே : பாது சிவா ஸர்வத்ர ஸாம்ப்ரதம் ।
6. ஸர்வதா ஸர்வதேவேஷு பாது த்வாம் புவனேச்வரீ
மஹாகாயா ஜகத்தாத்ரீ ஸச்சிதாநந்த ரூபிணி.

## தேவி கவசத்தின் விளக்கம்

1. அம்மைமுன் பக்கம் காக்க
அசலமா மகள்பின் காக்க
வெம்மைசார் நெறிவா ராகி
விரும்பியே காக்க கோட்டை
தம்மிலே துர்க்கை காக்க
சமரினில் காளி காக்க
சும்மைசால் மண்ட பத்தில்
மாதங்கி துணைந்து காக்க.

2. சுயம்வர மதனில் தேவி
சௌமிய காக்க சூழும்
வயமுடை அரசர் நாப்பண்
மன்னிய பிறவி என்னும்
துயர் தவிர் பவானி காக்க
துன்னுநாற் சந்திக் கண்ணே
மயர்விலாச் சமுண் டீச்சு
வரிநின்று காக்க காக்க.

3. கானகத் தினில்தொல் லோகாம்
காமகா என்னும் தேவி
ஈனம்அற் றிடவே காக்க
விவாதங்கள் எழுந்த காலே
ஆனவை ணவிதான் காக்க
அடர்தரு பகைஞர் மோதின்
மானமற் றடியில் விழ
வயிரவி காக்க காக்க.

4. இருபுறங் களிலும் தேவி
பார்வதி காக்க எங்கும்
தருசிவை யாம்சிற் சக்தி
தாங்குக ஞாலம் காப்பாள்
வெருவரு விசுவ ரூபி
மெய்யறிவு இன்ப மாகிப்
பெருவிலாது அருள்செய் அன்னை
புவனேசை என்றும் காக்க.

இந்தக் கவசத்தைக் கூறி அந்தத் தாய் மகனை வாழ்த்தி உலகன்னையைப் பக்தியுடன் எண்ணி அவனுக்கும் ஆசி கூறி

ஈண்டுள்ள ஸ்ரீ தேவீ கவசத்தைப் பாராயணம் செய் அன்பர்கள் ஸ்ரீ தேவியின் திருவருளால் தாம் விரும்பியவற் பெறுவார்கள். நம்பிக்கையும் பக்தியும் உறுதியாகக் கொ இதை ஓதினால் உறுதியாக நல்ல பயன் உண்டாகும்.

தன் அன்னையின் ஆசியைப் பெற்ற சுதர்சனன் ஸ்ரீ தேவி மனத்தில் தியானித்துக்கொண்டே காசிக்குச் சென்றான்; அ னுடைய அரண்மனையை அணுகி உள்ளே புகுந்து சுயம் மண்டபத்தைப் பார்த்தான். அங்கு பல தேசத்து அரச குமா களுக்கும் தனித்தனியே ஆசனங்கள் அமைக்கப்பெற்றிருந் ஏழையான சுதர்சனனுக்கும் அங்கு இடம் ஒதுக்கப்பெற்றி குமோ? அவனுக்கு அங்கே இடம் இல்லை. எனினும், சுதர்சன தான் சசிகலையின் கண்களுக்கு எளிதில் இலக்காகும்படி ஓரமான தனியிடம் ஒன்றை நாடி, அவ்விடத்திலேயே நின் கொண்டிருந்தான்.

அந்த மண்டபத்தில் அவனுடைய சகோதரனாகிய சத்ரு ஜித்தும், அவன் பாட்டனாகிய யுதாஜித்தும், வேறு பல அர களும் கம்பீரமாகத் தமக்குரிய ஆசனங்களில் அமர்ந்திருந்த

சசிகலை தன் தோழியருடன் சுயம்வர மண்டபத்து வந்தாள். சபையிலிருந்த பல தேசத்து மன்னர்களைப் பா தாள். அவர்களுக்கிடையே சுதர்சனனை அவள் காணவில் அதனால் ஏமாற்றம் அடைந்தவளாய் அவள் சபையின் புறம் யிருந்த இடங்களைப் பார்த்தாள். அப்பொழுது ஓர் ஓரமா நின்றுகொண்டிருந்த சுதர்சனன் அவளுடைய கண்களுக்கு புலனானான். அவ்வளவில் அவளது உள்ளம் குளிர்ந்தது. உடனே அவள் அவனை அணுகித் தன் கையில் வைத்திருந்த மாலை அவன் தோளில் சூட்டினாள்.

இந்நிகழ்ச்சியைக் கண்ட யுதாஜித், சத்ருஜித் முதலியோ ஏமாற்றமும் பொறாமையும் கொண்டு, சுதர்சனனுடன் போ செய்ய எழுந்தனர். அந்நிலையில் காசி மன்னன் எழுந் 'இப்பொழுது போர் வேண்டாம். நான் திருமணத்தை முடித்து விடுகிறேன். என் பெண் அவனை விரும்பி மாலையிட்டுவிட்டதால் அவனுக்கு அவளை மணம் செய்துகொடுப்பது என் கடமை யாகும். நான் திருமணத்தை முடித்தபின் நீங்கள் யாவரும் உங்கள் வலிமையைக் காட்டுங்கள்' என்று கூறி, சாஸ்திர முறைப் படி திருமணத்தை நடத்தி முடித்தான். தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர்.

திருமணம் நிறைவேறியதும் சுதர்சனன் தன் மனைவியாகிய சசிகலையைத் தேரில் ஏற்றிக்கொண்டு தன் இருப்பிடம் நோக்கிப் புறப்பட்டான். அப்பொழுது அவனை நாற்புறத்திலும் பகை அரசர்கள் சூழ்ந்துகொண்டு போரிடத் தொடங்கினர். அந்நிலையில் சுதர்சனன் சிறிதும் கவலையின்றி, சிங்கவாகனத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தேவி பராசக்தியைத் துதித்தான். உடனே ஸ்ரீ பராசக்தி அப்போர்க் களத்தின் மத்தியில் அவர்கள் கண்களுக்குத் தெரியும் வண்ணம் காட்சியளித்து, பகைவர்களையெல்லாம் க்ஷணப்பொழுதில் அழிக்க முற்பட்டாள், அஞ்சியோடியவர்கள் தவிர ஏனையோர் களத்தில் வீழ்ந்து இறந்தனர்.

இவ்வாறு ஸ்ரீ அம்பிகையின் அருளால் வீரவாகை சூடிய சுதர்சனன் மகிழ்ச்சியோடு தன் மனைவியான சசிகலையுடன் பாரத்வாஜ முனிவருடைய ஆசிரமத்தை அடைந்தான். அவ்வாறு அடைந்தவன் தன் மனைவியோடு முனிவரையும் தன் தாயையும் வணங்கி நின்ருன். முனிவரும் தாயும் அந்தத் தம்பதிக்கு மனம் குளிர்ந்து ஆசி புகன்றனர்.

பின்பு சுதர்சனன் தனது நாட்டை மீட்க விரும்பி, அந்நாட்டின் மீது படையெடுத்துச் சென்ருன். ஆனுல், அவன் சகோதரனுகிய சத்ருஜித் சமாதானம் செய்துகொள்ள முன் வந்தான். எனவே, சுதர்சனன் போர் செய்வதை நிறுத்தித் தன் நாட்டைப் பெற்றுச் சக்கரவர்த்தியாகப் பட்டாபிஷேகம் செய்து கொண்டான். நாட்டு மக்கள் மகிழ, சான்ருேர் புகழ அவன் சிறந்த முறையில் அரசாண்டு வந்தான்.

இவ்வாறு அரசாண்ட சுதர்சன மகாராஜன், தன் அரண்மனையில் அன்னை பரமேஸ்வரியைப் பிரதிஷ்டை செய்து, முறைப்படி விரிவாகப் பூஜை செய்யத் தொடங்கியதோடு, தன் மாமனுர் இல்லத்திலும் ஸ்ரீ பராசக்தியைப் பிரதிஷ்டை செய்வித்தான்; வீடுகள் தோறும் தேவீ பூஜை நடக்கச் செய்தான்; மண்டலங்களில் ஸ்ரீ தேவீ கதாகாலக்ஷேபம் நடத்தச் செய்தான். இவ்வாறு மக்களின் நெஞ்சிலும், நாக்கிலும் ஸ்ரீ தேவியின் திருநாமம் நிலவும்படிச் செய்து உலகன்னையின் புகழைப் பரப்பிய காரணத்தால் சுதர்சனனுடைய நாடு எல்லா வளங்களையும் பெற்றுப் புகழுடன் பொலிந்தது.

---



ஸ்ரீ துர்க்கை
கிடாத்தலைமேடு
(தஞ்சை மாவட்டம்)

# 9. ஸ்ரீ தேவியின் பேரருளைப் பெற

### நவராத்திரி

ஸ்ரீ தேவிக்கு மிக்க விருப்பமானது நவராத்திரிப் பெருவிழா. னைத்தும் தேவி மயம்' என்னும் உண்மையையும், 'அன்னைக்கு வுயிரினிடத்தும் சரிசமமான அன்பு உள்ளது' என்னும் ன்மையையும் எடுத்துக் காட்டவே இப்பண்டிகை எழுந்தது. பது நாட்கள் பகலும் இரவும் பூஜை செய்வதை 'நவராத்திர தம்' என்றும், ஒன்பது இரவுகள் மாத்திரம் பூஜை செய்வதை ராத்திரி விரதம்' என்றும் கூறுவர். இந்த இரண்டு வகையிலும் ராத்திரி விழாவை நடத்தலாம்.

உண்மையில் வருஷத்தில் நான்கு ☆நவராத்திரிகள் உண்டு. ந்த நான்கையும் அனுஷ்டித்தல் நல்லது. ஆனி மாத அமா ைசக்குப் பிறகு வரும் ஒன்பது நாட்களை ஆஷாட நவராத்திரி றும், புரட்டாசி அமாவாசைக்குப் பிறகு வரும் ஒன்பது நாட் ச் சாரத நவராத்திரி அல்லது மகா நவராத்திரி என்றும், தை தத்து அமாவாசைக்குப் பிறகு வழிபடுவதை மகா நவராத்திரி றும், பங்குனி மாதத்து அமாவாசைக்குப் பிறகு வருவதை ந்த நவராத்திரி என்றும் வழங்குவர். வருஷத்தில் இந்த ன்கையும் துர்வாஸ கல்ப முறையில் நடத்துவது சாலச் ந்தது.

நான்கு நவராத்திரிகளையும் அனுஷ்டிக்கமுடியாதவர்கள் த நவராத்திரியையும், வஸந்த நவராத்திரியையும் அனுஷ் தல் வேண்டும். அதுவும் இல்லாதவர்கள் சாரத நவராத்திரி றையேனும் சிரத்தையுடன் அனுஷ்டித்து நடத்தவேண்டும். ட்டாசியும் பங்குனியும் யமதர்மராஜனுடைய கோரைப் பற் என்று கூறுவர் பெரியோர். ஜீவராசிகள் அப்பற்களில் அகப் ாமல் இருக்க நவராத்திரி விரதத்தை மேற்கொள்ள வேண்டும் று அக்னி புராணம் கூறுகிறது.

அமாவாசையன்று நீராடி மகாலட்சுமி நல்வாழ்த்துடன் ாபந்தனம் செய்துகொண்டு, ஒன்பது நாட்களும் உதவி செய் ற 9, 7, 5, 3, 1 பிராமணர்களை வரிக்கவேண்டும். இவர்கள்

☆ "வன்ய நவராத்திரி" என்றும் ஒன்று உண்டு. இது கந்த கைகளைக் கொண்டு கானகத்தில் செய்வது. இதை நாரதர் ராமனுக்குக் கூடவே இருந்து நடத்தி வைத்தார் என்ற விபரம் ராம சரித்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

வேதாத்தியாயனம் செய்தவர்களாகவும், சாஸ்திரப் பயி
உடையவர்களாகவும், ஸ்ரீ தேவீ பூஜா துரந்தரராகவும் இருந்
வேண்டும்.

நவராத்திரியின் முதல் நாள் காலை மண்டப நிர்மா செய்க ; ஸ்ரீ அம்பிகையைப் பிரதிஷ்டை செய்து, கலசஸ்தாப செய்க ; பிறகு ஷோட சோபசாரத்துடன் மூன்று வேளைகளி பூஜை செய்க ; பூஜையெல்லாம் முடிந்தபிறகு உடம்பை ஓர காப்பதற்காக ஸ்ரீ அம்பாள் பிரசாதத்தில் சிறிது புசித் தரையில் படுத்து உறங்குக. நவராத்திரி ஒன்பது நாட்களி பகலில் ஸ்ரீ தேவீ பாகவத பாராயணமும், ஸூக்த பாராய களும் செய்யவேண்டும். மாலைக் காலங்களில் மகளி கொண்டு இன்னிசைப் பாடல்களைப் பக்தியுடன் பாடச் செ இரவுகளில் ஸ்ரீ தேவீ பாகவத உபந்நியாசத்தின் மூலம் அபீ சித்திப் பிரதாயகமாகிய ஸ்ரீ தேவீயின் புகழைப் பரப்பவேண்

(நவராத்திரி ஒன்பது நாட்களிலும் ஒன்பது வகையா அன்னம் ஒன்பது வகையான புஷ்பம், ஒன்பது வகையா அலங்காரம் என்று எல்லாம் ஒன்பதாக அமைவதுடன் ந தோறும் ஒன்பது சகஸ்ரநாமம் முறைப்படியும் அப்யுதத் ஒன்று பிராயச்சித்தத்திற்கு ஒன்று ஆகப் பதினொரு சக நாமார்ச்சனை செய்யவேண்டும். ஒவ்வொரு நாளும் இரண் வயதுப் பெண் குழந்தை முதல் முறையே பத்து வயதுப் பெ குழந்தை வரை ஒவ்வொன்ருகவோ, முதல் நாள் ஒன்று இரண் நாள் இரண்டு என்ற முறையாகவோ குமாரி பூஜை அவசி செய்யவேண்டும். இந்தப் பூஜையின் பயனை ஆதிசேஷனு அளவிட்டுக் கூறமுடியாது என்று நூல்கள் போதிக்கின்றன.)

| நாள் | வயது | பெயர் | பயன் |
|---|---|---|---|
| 1 | 2 | குமாரிகா | தரித்திரநாசம் |
| 2 | 3 | திருமூர்த்தி | தனதான்யவளம் |
| 3 | 4 | கல்யாணி | பகை ஒழிதல் |
| 4 | 5 | ரோகிணி | கல்வி வளர்ச்சி |
| 5 | 6 | காளிகா | துன்பம் நீங்குதல் |
| 6 | 7 | சண்டிகா | செல்வ வளர்ச்சி |
| 7 | 8 | ஸாம்பவி | க்ஷேம விருத்தி |
| 8 | 9 | துர்க்கா | பயம் நீங்குதல் |
| 9 | 10 | ஸுபத்ரா | ஸர்வ மங்களம் உண்டாதல் |

இந்த முறையில் பூஜை செய்யவேண்டும். நவராத் ஒன்பது நாட்களும் ஸ்ரீ அம்பிகையின் சந்நிதியில்,

1. அரிசி மா
2. கோதுமை மா
3. முத்து
4. அட்சதை
5. கடலை
6. பருப்பு
7. மலர்
8. காசு
9. கற்பூரம்

என்னும் ஒன்பது பொருள்களைக் கொண்டு,

| | | |
|---|---|---|
| 1. பொட்டு | 4. படிக்கட்டு | 7. திட்டாணி |
| 2. கட்டம் | 5. பறவையினம் | 8. பத்மம் |
| 3. மலர் | 6. தேவீ நாமம் | 9. ஆயுதம் |

ஆகிய கோலங்களைப் போடவேண்டும். நவராத்திரியின் ஒன்பது நாட்களிலும் சுமங்கலிகளுக்கும், கன்னிப் பெண்களுக்கும் நீராடுவ தற்காக,

| | | |
|---|---|---|
| 1. பச்சிலை | 4. கஸ்தூரிமஞ்சள் | 7. லாக்ஷாரஸம் |
| 2. பூலாங்கிழங்கு | 5. திரவியப் பட்டை | 8. கஸ்தூரிகாபத்ரம் |
| 3. சண்பகமொட்டு | 6. காசுக்கட்டி | 9. கோரோசனம் |
| 1. எண்ணெய் | 4. பன்னீர் | 7. நலங்கு மஞ்சள் |
| 2. மஞ்சள் | 5. சந்தனம் | 8. மருதோன்றி |
| 3. குங்குமம் | 6. வாசனைத் தைலம் | 9. புஷ்ப நீர் |

ஆகியவைகளை அளிக்கவேண்டும்.

நவராத்திரி நாட்களில் பெண்கள் எல்லோரையும் தேவி பாகவே பாவித்து,

| | | |
|---|---|---|
| 1. பாலா | 4. வதூ | 7. ஸுமங்கலீ |
| 2. குமாரி | 5. பிரௌடா | 8. தருணீ |
| 3. கன்யா | 6. முத்து | 9. மாதா |

என்றே பெயரிட்டு அழைத்துப் பிரார்த்திக்கவேண்டும்.

சக்தியுள்ளவர்கள் பல பெண்களை வீட்டுக்கு அழைத்து,

| | | |
|---|---|---|
| 1. பொன் | 4. பவளம் | 7. புஷ்பராகம் |
| 2. வெள்ளி | 5. வைடூரியம் | 8. மரகதம் |
| 3. முத்து | 6. கோமேதகம் | 9. வைரம் |

என்னும் நவரத்தினங்களைக் கொடுக்கலாம். சக்தியற்றவர்கள் அவ்வாறு அழைக்கப்பெற்ற பெண்களுக்கு,

| | | |
|---|---|---|
| 1. சோழி | 4. கிளிஞ்சல் | 7. அம்மானை |
| 2. குன்றிமணி | 5. செப்பு | 8. பந்து |
| 3. தட்டைப்பவளம் | 6. பதுமை | 9. கழற்சிக்காய் |

ஆகிய விளையாட்டுப்பொருள்களை அளிக்கலாம். ஒவ்வொரு நாளும் வீடு தேடிவரும் குமாரிகளுக்கும், சுமங்கலிகளுக்கும், பக்தியுடன் தன் கையால்,



ஸ்ரீ கஜலக்ஷ்மி
மன்னார்குடி
(தஞ்சை ஜில்லா)

புனுகு ...ன்று பருவச் கஜா 7. சாந்து
ஜவ்வாது பெரியோர்கள் தலாம் 8. ஸ்ரீசூர்ணம்
கஸ்தூரி ...க நாள்தே குமம் 9. மை

...கியவற்றை இடலாம்.

ஜகதன்னையின் பிரீதிக்காகக் காலை மாலை நேரங்களில் இசைப் ...டல்களைப் பாடலாம். அவை ஸ்ரீ தேவி சம்பந்தம் உடையவன ...க இருக்கவேண்டும். அப்படிப்பட்ட பாடல்களை,

| | | |
|---|---|---|
| தோடி | 4. பைரவி | 7. பிலஹரி |
| கல்யாணி | 5. பந்துவராளி | 8. புன்னாகவராளி |
| காம்போதி | 6. நீலாம்பரி | 9. வஸந்தா |

...ன்னும் ஒன்பது இராகங்களில் பாடச் செய்யலாம்.

| | | |
|---|---|---|
| மிருதங்கம் | 4. கோட்டு வாத்தியம் | 7. படகம் |
| புல்லாங்குழல் | 5. ஜல்லரி | 8. தும்மி |
| வீணை | 6. பேரி | 9. கோலாட்டம் |

...ன்னும் வாத்தியப் பின்னணிகளுடன் ஸ்ரீ தேவியின் பெருமையை ...டிக் காட்டலாம்.

நவராத்திரி நாட்களில் ஸ்ரீ அம்பிகைக்கு அடியிற்காணும் ...லர்களைக் கொண்டு மாலைகள் தொடுத்து அணிவிக்கலாம். சுகந்த ...ான தழைகளைக் கட்டுமாலையாகக் கட்டியும் சாத்தலாம் :—

| | | |
|---|---|---|
| மல்லிகை | 4. ஜாதி | 7. தாழம்பூ |
| முல்லை | 5. பாரிஜாதம் | 8. ரோஜா |
| சம்பங்கி | 6. செம்பருத்தி | 9. தாமரை |

...ன்னும் மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலையையும்,

| | | |
|---|---|---|
| வில்வம் | 4. கதிர்ப்பச்சை | 7. தும்பை இலை |
| துளசி | 5. விபூதிப்பச்சை | 8. பன்னீர் இலை |
| மரு | 6. சந்தன இலை | 9. மருக்கொழுந்து |

...ன்னும் தழைகளால் தொடுக்கப்பெற்ற மாலையையும் சாத் ...லாம்.

ஸ்ரீ லலிதா திரிபுரசுந்தரி தேவிக்கு உவப்பாகப் பெண் ...ழந்தைகளுக்கு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமாக,

| | | |
|---|---|---|
| வாழை | 4. கொய்யா | 7. பேரீச்சை |
| மா | 5. மாதுளை | 8. திராட்சை |
| பலா | 6. நாரத்தை | 9. நாவல் |

...ன்னும் பழங்களை அன்புடன் அளிக்கலாம்.



ஸ்ரீ ஸரஸ்வதீ
(ஸ்ரீ சாமுண்டீஸ்வரி கோயில்)
மைசூர்

பாலா என்று பருவச் சிறுமியை அன்னையின் வளர்ப்புப் புதல்வி என்று பெரியோர்கள் கூறுவர். எனவே, அத்தகைய சிறுமியின் மகிழ்ச்சிக்காக நாள்தோறும்.

1. சுண்டல் 4. பொறியல் 7. சூரணம்
2. வறுவல் 5. அப்பளம் 8. முறுக்கு
3. துவையல் 6. வடகம் 9. திரட்டுப்பால்

என்னும் பக்ஷியங்களைச் செய்து விநியோகம் செய்யலாம். இவ்வாறெல்லாம் செய்ய முடியாவினும், ஒவ்வொரு நாளும்,

1. வெண்பொங்கல் 5. ததியோதனம்
2. புளியோதனம் 6. தேங்காய்ச் சாதம்
3. சர்க்கரைப் பொங்கல் 7. எலுமிச்சம்பழச் சாதம்
4. கதம்பம் 8. பாயஸான்னம்
9. அக்கார அடிசில்

என்னும் பிரஸாதங்களை ஒவ்வொன்றாகச் செய்வித்து, அம்பிகைக்கு நிவேதனம் செய்யவேண்டும். கடைசி நாள் கடைசிப் பூஜையின்போது அம்பிகைக்கு சுத்தான்னம், இலை வடகம், வெண்ணெய், சுக்கு வெந்நீர் ஆகியவற்றை நிவேதனம் செய்வது ஸம்பிரதாயம். இப்படிச் செய்தால் அன்னையின் கிருபா கடாட்சம் நம்மீது பட்டு, நாம் பாவங்களினின்றும் விடுபடுவோம்.

1. நீலாயதாக்ஷி 4. விசாலாக்ஷி 7. பத்மாக்ஷி
2. காமாக்ஷி 5. ஜ்வாலாக்ஷி 8. வனஜாக்ஷி
3. மீனாக்ஷி 6. இந்திராக்ஷி 9. பங்கஜாக்ஷி

என்னும் பெயர்களின் சிறப்பை நினைக்கவேண்டும். இத்தகைய முறையில் நவராத்திரி ஒன்பது நாட்களும் கொண்டாடுகிறவர்கள் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகிறார்கள். நவராத்திரிப் பெருவிழா கொண்டாடப்பெறும் கோயிலும், வீடும், தெருவும், ஊரும் தூய்மை அடைகின்றன.

இப்படி நவராத்திரி நடக்கும் ஒன்பது நாட்களிலும் ஸ்ரீ தேவீ பாகவத ஸாரமான நவமங்களியைப் பாராயணம் செய்து, ஒன்பது முறை அன்னையை நமஸ்கரிக்கவேண்டும். இனிப்புப் பட்சணம் ஒன்பது, தாகம் தீர்க்கும் தீர்த்தம் ஒன்பது, உபசாரப் பொருள் ஒன்பது, அன்னையின் பூஜா விபாகம் ஒன்பது என்று நவநவமான முறைப்படி நவராத்திரி விழாவைக் கொண்டாடினால் எல்லோரும் ஸர்வமங்களம் அடைவார்களாம்.) பூர்வத்தில் ஸ்ரீ ராமபிரானும் அன்னையை நவராத்திரிக் காலத்தில் பூஜை செய்தார். இதனை ஸ்ரீ லலிதா திரிசதியில், "லக்ஷ்மணாக்ரஜ பூஜிதாயை நம:" என்று அர்ச்சனைமூலம் நாம் அறியலாம்.

———

# 10. பிரிந்தவர் சேர

## ஸ்ரீ ராம சரிதம்

இவ்வாறு நவராத்திரியின் மகிமையை அழகாகக் கூறிய சூத மகா முனிவரைப் பார்த்து ஏனைய முனிவர்கள், 'ஸ்ரீ இராமர் அம்பிகையைப் பூஜை செய்தார் என்று கூறினீர்களே. எப்பொழுது எப்படிப் பூஜை செய்தார் என்ற விவரத்தையும், ஸ்ரீ இராம பிரானின் சரிதத்தையும் கூறியருளவேண்டும்' என்று பிரார்த்தித்துக் கேட்கவே சூதமகா முனிவரும் சொல்லலானார்.

கோசல நாட்டில் அயோத்தி என்னும் பட்டணத்தை தலைநகராகக் கொண்டு தசரதச் சக்கரவர்த்தி ஆட்சி செய்து வந்தார். அவருக்குக் கௌசல்யை, கைகேயி, சுமித்திரை என்று மூன்று மனைவிமார் இருந்தும், குழந்தைகள் இல்லை. எனவே, தசரதர் ரிஷ்ய சிருங்க முனிவரை வரவழைத்து, புத்திரகாமேஷ்டி யாகம் செய்வித்து, அந்த யாகத்திலே கிடைத்த பிரசாதத்தைத் தம் மனைவிமார்க்குக் கொடுத்து உண்ணச் செய்தார். அதன் பயனாக அந்த மூன்று மனைவிகளும் ஸ்ரீ ராமர், லக்ஷ்மணர், பரதர், சத்ருக்னர் என்னும் நான்கு புத்திரர்களைப் பெற்றனர். அதனால் அவர் நான்கு வேதங்களால் பிரகாசிக்கும் பரம்பொருளைப் போலத் திகழ்ந்தார்.

தசரதர் தம் குழந்தைகள் நால்வர்க்கும் உரிய காலத்தில் கல்வி கற்பிக்கச் செய்து, உபநயனமும் செய்வித்தார். ஏறத்தாழப் பதினாறு வயது வந்த அளவில் ஸ்ரீ ராமருக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்று தசரதர் நினைத்தபொழுது, அங்கே கௌசிக முனிவர் எழுந்தருளினார். அவர் இராமரையும், லக்ஷ்மணரையும் தம்முடன் அனுப்புமாறு தசரதரை வேண்டிப் பெற்று, அவ்விருவரையும் தம்முடன் அழைத்துச் சென்று, அவ்விருவருக்கும் பலா, அதிபலா என்னும் மந்திரங்களை உபதேசம் செய்து, அவர்களைக் கொண்டு தாடகையை வதம் செய்வித்தார். பிறகு இராமர் மாரீசனைத் துரத்தி, சுபாகுவைக் கொன்று அம்முனிவர் செய்த யாகத்தைப் பாதுகாத்து, அகலிகைக்குச் சாப விமோசனம் அளித்து, சிவனுடைய வில்லை ஒடித்துச் சீதாபிராட்டியைத் திருமணம் செய்துகொண்டு, பரசுராமரைக் கர்வ பங்கம் செய்து அயோத்தியை அடைந்தார்.

அதன்பின் தசரதர் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யக் கருதினார். அப்பொழுது கூனியின் தூண்டுதலால் கைகேயி வரம் கேட்க, இராமர் லக்ஷ்மணருடனும், சீதாபிராட்டியுடனும் காட்டுக்குச் சென்றுவிட்டார். இராமரது பிரிவாற்றாமையால் தசரதர் உயிர் நீத்தார். அதன்பின் தன் மாமன் வீட்டிலிருந்து திரும்பிய பரதர் தசரதருக்குரிய ஈமக்கடனைச் செய்து முடித்து, ராஜ்யத்தை

இராமரிடமே கொடுப்பதற்காகக் காடு நோக்கி வந்தார். வழி பரதர் குகனுடைய பக்தியைக் கண்டு பரவசம் அடைந்து சித் கூடம் சென்று, நாட்டிற்குத் திரும்பி வருமாறு இராம பிரார்த்தித்தார். அதற்கு இராமர் உடன்படவில்லை. என பரதர் இராமபிரானுடைய பாதுகைகளைப் பெற்று, நந் கிராமம் சேர்ந்து, பாதுகா பட்டாபிஷேகம் செய்து, இராம வரவை எதிர்பார்த்து, அதுவரை பாதுகைகளின் பிரதிநிதியா தன்னைக் கருதி நாட்டை ஆண்டுவந்தார்.

சித்திரகூடத்தில் எழுந்தருளிய இராமர் அங்கிருந்து தம்பி னும், மனைவியுடனும் புறப்பட்டுச் சென்று வழியில் விராதனை வ செய்து, சரபங்கர் முதலியோருடைய ஆசிரமங்களுக்குச் சென் வந்தனை வழிபாடுகளைச் செய்து, பஞ்சவடியில் தங்கினார். அ இராமருடைய வடிவழகில் ஈடுபட்ட சூர்ப்பணகையை லக்ஷ்ம மானபங்கம் செய்தார். பின்பு இராமர் கர தூஷணாதிக கொன்றார். சூர்ப்பணகையினால் விவரம் அறிந்த இராவ சீதையினிடம் தீராக் காதல் கொண்டான். அவன் மாரீசனை மானாகப் போகச் செய்து, இராமரைச் சீதையிடமிருந்து பி தான். பின்பு அவன் பஞ்சவடிக்குச் சென்று, சீதையை வ கமாகக் கவர்ந்து இடைவழியே தடுத்த ஜடாயுவை வீழ் இலங்கையை அடைந்து, தனது அசோகவனத்தில் பிராட்டி சிறை வைத்துத் தன்னை மணக்குமாறு வற்புறுத்தலானான்.

இராமர் மாயமானைக் கொன்று திரும்பி வந்து லக்ஷ்மண பார்த்து, விவரம் அறிந்து, ஆசிரமத்தில் சீதையைக் காணா அழுது புலம்பி வீழ்த்தப்பட்ட ஜடாயுவின் மூலம் ஓரளவு உ யறிந்தார். பின்னர் அவர் ஜடாயுக்குத் தம் கையால் ஸ காரம் செய்து, கபந்தனுக்கு மோட்சம் அளித்தார். பின்பு ச சபரியினிடம் சென்று, அவள் செய்த பூஜைகளை ஏற்று, அவள் மொழி மூலமாகச் சுக்கிரீவனைப்பற்றி அறிந்து, அவனுடன் நட் கொள்வதற்காக லக்ஷ்மணனுடன் கிஷ்கிந்தை நோக்கிச் சென்

அநுமான் எதிர்கொண்டு இராம லக்ஷ்மணர்களைச் சந் தார்; பின்பு இராமர் சுக்கிரீவனை அடைந்து, தம் வலிமை காட்டி அவனை நம்ப வைத்து நட்புக் கொண்டார்; அதன் அவனை வாலியுடன் போருக்கு அனுப்பினார்; தாரை தடுத் கேளாமல் போருக்கு வந்த வாலியை ஒரே அம்பினால் வீழ் வாலிக்குத் தான் அபராதி என்பதை உணரவைத்து, ச யளித்து பின்பு லக்ஷ்மணனைக் கொண்டு சுக்கிரீவனுக்குப் பட பிஷேகம் செய்வித்தார். சுக்கிரீவன் சுகமாகக் கார் காலத் மனைவியாருடன் கழித்து வந்தார்.

இந்த நிலையில் சீதையின் பிரிவாற்றாமையால் இராமர் தும் வருந்தினார். அப்பொழுது அங்கு நாரத முனிவர் வந்

ந்த முனிவரை இராமர் வரவேற்று, தன்னுடைய வருத்தத்துக் ரிய காரணத்தைக் கூறி, 'முனிபுங்கவரே, எனது துன்பம் நீங்கு ா ?' என் மனைவியை நான் மீண்டும் பெறுவேனு ? அதற்கு வழி து ?' என்று வினவினர். அவ்வளவில் நாரதர்' 'தேவியின் வராத்திரி மகோற்சவத்தை நடத்துவீராக' என்றார். அதற்கு ராமர், 'மலையில் இந்நிலையில் என்ன செய்யமுடியும்? எப்படி வராத்திரியைக் கொண்டாடமுடியும்?' என்று கேட்டார். அவ் ரை கேட்ட நராதர், 'வன்ய நவராத்திரி என்று ஒன்று உண்டு. அது கந்த மூலிகைகளைக் கொண்டு செய்வது. அதனால் முனிவர் ளும் பிதுர்க்களும் மகிழ்ச்சி அடைகின்றனர். அதனைச் செய்க' ன்று கூறி, கூடவேயிருந்து, அதனை நடத்தித் தந்தார்.

நவராத்திரி இவ்வாறு கொண்டாடப்பெற்றவுடனே, இராமர் ஊக்கத்துடன் சுக்கிரீவனை வருவித்தார். சீதையைத் தேட அநு மானை அனுப்பினர். அநுமாரும் இராமரின் கணையாழியைப் பெற்றுச் சென்று, சீதையைத் தேடிக் கண்டு கணையாழியைச் சேர்ப்பித்து, பிராட்டியார் தந்த சூடாமணியை இராமரிடம் ஸமர்ப்பித்தார். பின்பு இராமர் தன்னைத் தேடிவந்த இராவணன் தம்பி விபீஷணனுக்கு அடைக்கலம் தந்தார். கடலில் அணை கட்டினர்; கடும்போர் புரிந்து இராவணன் முதலியோரைக் கொன்றார். சிதாபிராட்டியாரை அடைந்தார். விபீஷணனுக்கும் பட்டாபிஷேகம் செய்வித்தார்.

பிறகு இராமர் புஷ்பக விமானத்தில் பிராட்டியாருடன் அமர்ந்து பாரத்வாஜ ஆசிரமம் அடைந்து, விருந்துண்டு, அநுமான் மூலம் பரதருக்கு முன்னதாகச் செய்தி அனுப்பி, அயோத்தியை அடைந்தார். இந்திரனுக்கு அஷ்டவஸுக்கள் அபிஷேகம் செய்வித்ததுபோல வசிஷ்டர் முதலிய முனிவர்கள் இராமருக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து மகிழ்ந்தனர். ஸ்ரீ ராமர் 11,000 ஆண்டுகள் யாதொரு குறைவுமின்றி அரசு புரிந்தார். இராம ராஜ்யத்தில் நோய் இல்லை; வறுமை இல்லை; பஞ்சம் இல்லை; காலத்தில் மழை பெய்தது. உலகமெல்லாம் ஸ்ரீ ராமரைப் புகழ்ந்தது.



# 11. பெரும் புண்ணியப் பயன் பெற

## ஸ்ரீ தேவீ ஸ்து

ஸ்ரீ தேவீ பாகவதத்தில் உள்ள பல சுலோகங்களும், ஸ்தோ ரங்களும் மிக்க பயனைத் தரத் தக்கவை. ஸ்ரீ மகாவிஷ்னு அவற்றை அருளினராதலால் இந்தத் தோத்திரங்கள் மி பொருட்சிறப்பு உடையன. இவற்றைப் பாராயணம் செய்பவர் பெரும் புண்ணியப் பயனைப் பெறுபவர் :—

1. ஊர்ணநாபாத் யதாதந்து : விஸ்புலிங்கா: விபாவஸோ:
   ததா! ஜதத் யதேதஸ்யா: நிர்கதம்தாம் நமாம்யஹம்.
2. யந்மாயா சக்தி ஸம்லப்தம் ஜகத்ஸர்வம் சராசரம்
   தாமசிதாம் புவநாதிதாம் ஸ்மராம: கருணார்ணவாம்.
3. யதக்ஞாநாத் பவோத்பத்தி: யத்க்ஞாநாத் பவநாசநம் : ]
   ஸம்வித்ருபாம்ச தாம்தேவீம் ஸ் மராம: ஸா ப்ரசோதயா
4. மஹாலக்ஷ்ம்யை ச வித்மஹே ஸர்வசக்த்யைச தீமஹி
   தந்நோ தேவீ ப்ரசோதயாத்
5. மாதர்நதா: ஸ்ம புவநார்த்தி ஹரே ப்ரஸீத
   மந்நோ விதேஹிகுரு கார்யமிதம் தயார்த்ரே
   பாரம்ஹரஸ்வ விந்ஹத்ய ஸுராரி வாக்கம்
   மஹ்யா மஹேச்வரி ஸதாம் குரு சம் பவாநி ||

## (இதன் விளக்கம்)

1. சிலந்திவாய் தனிலி ருந்து
   திகழ்நுண் ணூல் வருதல் போல
   இலங்கிய தீயி னின்றும்
   பொறிபல எழுதல் போல
   நலங்கிளர் தன்மாட் டிந்த
   ஞாலமா தியஅண் டங்கள்
   தலங்கொளத் தோற்று விக்கும்
   தாய்இணை யடிகள் போற்றி.
2. இயங்குவ நிற்ப வாக
   எய்திய உலகம் யாவும்
   தயங்குதன் மாயா சக்தி
   யந்நிலே தனைப் படுத்தி

வயங்கிய அண்டங் கட்கோர்
தலைவியாய் மங்கா தோங்கி
முயங்கிய அருளின் வாரி
ஆனவள் மொய்தாள் போற்றி.

3. தன்னுடைய பெருமை தேராப்
பேதையர் சன்ன நோயில்
மன்னுறத் தன்னைத் தேர்ந்தார்
வளர்பிறப் பிலராய் இன்பம்
துன்னுற அருளி ஞானச்
சோதியாய் விளங்கும் ஞாலத்(து)
அன்னையின் கமலத் தாளை
அகங்குழைந்(து) இறைஞ்சு கின்றோம்.

4. அத்தகு தேவி யாங்கள்
அவலப்புன் னெறியில் சேரா(து)
ஒத்தநன் னெறியே சேர
உய்த்தருள் செய்க அன்னாள்
வித்தகத் திருவே என்றும்
வியன்சர்வ சக்தி என்றும்
நத்தியாம் போற்று கின்றோம்
நன்னெறி காட்டு தற்கே.

5. அன்னையே போற்றி ஞாலத்(து)
அல்லலை ஒழிப்பாய் போற்றி
துன்னிய எம்பால் அன்பு
சுலவஅவ் வுணர்த் தேய்த்து
நன்னிலப் பொறைதீர்க் கின்ற
நாயகி போற்றி நல்லோர்க்கு
உன்னரு மின்பம் ஈயும்
ஒளிமலர்க் கண்ணாய் போற்றி.

---

# 12. ஸகல நன்மைகளையும் பெற

## ஸ்ரீ கிருஷ்ண சரிதம்

முன் அத்தியாயத்தில் ஸ்ரீ தேவீ ஸ்துதிகளைப் படித்தீர்கள். இத்தகைய தேவீ ஸ்துதிகளைக் கேட்ட முனிவர்கள் சூதமா முனிவரைப் பார்த்து, 'ஸ்வாமி, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் தந்தையாக இருந்தும் வசுதேவருக்குச் சிறைத்தண்டனை ஏன் கிடைத்தது? அவருக்கு ஏன் புத்திர சோகம் உண்டாயிற்று?' என்று கேட்டனர். அதற்குச் சூதமா முனிவர், 'முனிவர்களே,

எப்படியிருந்தாலும் வசுதேவர் மாயைக்கு உட்பட்டவர் அல்லவா? ஸ்ரீ தேவியின் அருளைப் பெற்றிருந்த காரணத்தால் தான் அவர் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்கே தந்தையானார். கிருஷ்ண பரமாத்மாவின் சரிதம் மிகப் புண்ணியம் வாய்ந்தது. அதைக் கேட்டவர்களுக்கு ஸ்ரீ தேவியின் அருள் கட்டாயம் கிடைக்கும் என்றார். உடனே முனிவர்கள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் சரிதத்தைச் சொல்லியருளுமாறு சூதமா முனிவரைப் பிரார்த்தித்தனர். அவரும் அதற்கு இணங்கி, ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் புண்ணிய சரிதத்தைச் சொல்வராயினர்.

மதுரை நகரில் கம்ஸன் தன் தங்கையாகிய தேவகிக்குத் திருமணம் செய்வித்து தம்பதிகளை அழகியதொரு தேரில் ஏற்றித் தானே ஓட்டி ஊர்வலம் வந்துகொண்டிருந்தான். அவ்வாறு அவன் வரும்பொழுது வானத்திலிருந்து, 'அடே! எவளைப் பெருமையாகத் தேரில் ஏற்றி வருகின்றாயோ அவள் வயிற்றிலிருந்து பிறக்கும் எட்டாவது ஆண்குழந்தை உன்னைக் கொல்லும்' என்று அசரீரி வாக்கு எழுந்தது. அந்த உரையைக் கேட்ட கம்ஸன் வெகுண்டு வாளை உருவித் தன் தங்கையையும் அவளது கணவரையும் அப்போதே வெட்ட முற்பட்டான். அந்நிலையில் தேவகியின் கணவராகிய வசுதேவர் யுக்தியாகப் பேசி அவனது சினத்தைத் தணித்தார். அதனால் ஓரளவு சினந் தணிந்த கம்ஸன், அவ்விருவரையும் அப்பொழுது கொல்லாமல் சிறையில் இட்டான்.

தேவகிக்குப் பிறந்த ஆறு குழந்தைகளையும் கம்ஸன் கொன்றான். ஏழாவது குழந்தை மாயமாய் மறைந்தது. எட்டாவது குழந்தையைக் கர்ப்பத்தில் தாங்கிய தேவகி பிரசவ காலம் நெருங்கியபொழுது வருந்தினாள். அந்நேரத்தில் கம்ஸன் காவலைப் பலப்படுத்தினான். ஆடி மாதத்தில், தேய் பிறையில், அஷ்டமி திதியில், ரோகிணி நட்சத்திரத்தில் இரவு மணி 12-க்கு தேவகிக்குக் கண்ணன் பிறந்தான்.

பிறந்த குழந்தையின் அழகைக் கண்டாள் தேவகி. "ஐயோ! இந்த அழகுக் குழந்தையையும் கம்ஸன் கொன்று விடுவானே! என செய்வேன்?" என்று பெரிதும் வருந்தினாள். அப்பொழுது அங்கு அசரீரி வாக்கு ஒன்று எழுந்தது. அந்த வாக்கில் அமைந்திருந்த கட்டளைக்கேற்ப அங்கிருந்த காவலாளிகள் தூங்கலாயினர். கதவுகள் தாமே திறந்துகொண்டன. வசுதேவர் தாமே அக்குழந்தையைத் தூக்கிக்கொண்டு யாரும் அறியாமல் நந்தகோபருடைய கோகுலத்திற்குப் பயணமானார். இடையில் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்த யமுனா நதியிலும் வெள்ளம் குறைந்து வழியமைந்திருந்தது. வசுதேவர் குழந்தையைக் கோகுலத்திற்கு எடுத்துச் சென்று, அங்கு யசோதையினிடம் கொடுத்து, அவள் கொடுத்த மாயாமயமான பெண்குழந்தையை எடுத்துக்கொண்டு சிறைக்குத்

திரும்பினர். அவர் சிறைக்குள் நுழைந்தவுடன் வாயிற் கதவுக
தாமே முன்போல் மூடிக்கொண்டன. காவலர்களும் விழித்து
கொண்டனர்.

மாயக் குழந்தையின் அழுகையொலி எழுந்தது. கம்ஸ
விழித்தெழுந்து ஓடிவந்தான் ; குழந்தையை வலியப் பறித்து
கொல்ல முயன்ருன். குழந்தையோ கம்ஸனுக்கு ஓர் உ
கொடுத்துவிட்டு வானவீதியில் சென்று, ' உன்னைக் கொல்பவ
நந்தகோகுலத்தில் வளர்கிருன். என்னை உன்ருல் கொல்
முடியாது ' என்று கூறி மறைந்தது. கம்ஸன் செய்வதறியா
மனம் வருந்தி அவன் மனை சேர்ந்தான்.

நந்தகோபர் தமக்குக் குழந்தை பிறந்ததை எண்
மஹோற்சவம் கொண்டாடினர். ஜாதகர்மம், நாமகரண
முதலியன குழந்தைக்குச் செய்வித்து, அவர் உயர்ந்த தான
களைச் செய்தார். வசுதேவர் அங்கே விடுத்துச் சென்
குழந்தைதான் கண்ணன். குழந்தை இவ்வாறு கோகுலத்தி
சீரும் சிறப்புமாக வளர்ந்து வந்தான்.

கண்ணனைக் கொல்லக் கம்ஸன் பல அசுரர்களை அனுப்
ருன். அவ்வாறு அனுப்பப்பெற்ற பூதகி, சகடாசுரன், வத்ஸ
சுரன், கபித்தாசுரன், பகாசுரன் முதலியோர்களைக் கண்ண
கொன்ருன். பின்பு கண்ணன் காளீயமர்த்தனம், கோபி
வஸ்திராபகரணம், கோவர்த்தனோத்தாரணம் முதலிய வியக்க
தக்க செயல்களைச் செய்தான். இவற்றையெல்லாம் கேள்
யுற்ற கம்ஸன் மிகவும் அச்சமும் கோபமும் அடைந்தான்
கண்ணனே பால், தயிர், வெண்ணெய் முதலியவற்றை
திருடி உண்டு, பசுக்களை மேய்த்து இடையர்களின் துன்பங்களை
தீர்த்துச் சிறந்த பெயருடன் விளங்கினன்.

இந்நிலையில், கம்ஸனின் உத்திரவுப்படி அக்ரூரர் கண்ண
மதுராபுரிக்கு அழைத்துச் சென்றனர். கண்ணன் பலரா
னுடன் மதுரைக்கு வந்து சேர்ந்தான். அங்கு குவாலயாபீட
என்னும் அரச யானையைக் கொன்று, முடிவில் கம்ஸனையு
கொன்ருன்.

பிறகு கண்ணன் கல்வி பயின்ருன் ; சிறப்பாக ஆட்சி புரி
தான் ; ஜராசந்தனின் தொல்லை தாங்காமல் துவாரகைக்கு
சென்று குடியேறினன் ; குசேலருக்கு அருள் செய்தான் ; ருக்மிணி
முதலிய எட்டு நங்கையரை மணந்தான் ; பாண்டவர்களுக்கு
பலவித உதவிகளைச் செய்து போரில் அர்ச்சுனனுக்குக் கீதோ
தேசம் செய்து, பந்துமித்திரர்களுடன் நீண்ட நாட்கள் ஆட்
செய்தான்.

இந்தக் கிருஷ்ண சரிதத்தைக் கேட்பதால் பாலாரிஷ்ட
நீங்கும் ; பகைவர் ஒழிவர்; அன்பும் வலிமையும் உண்டாகும்
எல்லா நன்மைகளும் கிடைக்கும்.

---

# 13. வேண்டுகோள் நிறைவேற

## மகிஷாசுர வதம்

ஸ்ரீ தேவீ மகாத்மியம், ஸ்ரீ தேவீ பாகவதம் போன்ற நூல்களில் உள்ள வியக்கத்தக்க புண்ணிய சரித்திரங்களில், இந்த மகிஷாசுரவதம் என்பது தலைசிறந்தது. கதை பெரிது, பவித்திரமானது.

பொதுவாக மனிதனுக்கு மூன்று குணங்கள் உண்டு. அவை சத்துவம், ராஜசம், தாமசம் என்பவை. அவற்றுள் தாமச குணம் மிகவும் இழிந்தது. கரிய நிறம், இருட்டு வேளை, பழஞ்சோறு, மந்தபுத்தி, தூக்கம், சோம்பல், கொட்டாவி முதலியவை அந்த தாமச குணத்தின் இயல்புகள். ஒரு ஜீவனுக்கு ஞானம் குறைந்து, தாமச குணம் தலைதூக்கும் போதெல்லாம், அன்னை பராசக்தி வந்து, அந்தக் குணத்தைக் குலைத்து, உயர்ந்த சத்துவ குணத்தை அந்த ஜீவனுக்கு அருளித்தன்னை நினைக்கச் செய்கிறாள். அதுவே மகிஷாசுர வதத்தின் உட்கருத்தாகும்.

முன்னொரு காலத்தில் தநு என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ரம்பன், கரம்பன் என்னும் பெயர் வாய்ந்த புதல்வர்கள் இருவர் இருந்தனர். அவ்விருவருள் கரம்பன் என்பவன், தீர்த்தத்தில் மூழ்கி மாபெருந் தவம் இயற்றினன். ரம்பனோ பஞ்சாக்கினியின் நடுவில் நின்று தவம் செய்யலானான். கரம்பனுடைய தவத்தின் வேகத்தை உணர்ந்த இந்திரன் முதலை உருக்கொண்டு நீரில் மறைந்து வந்து, கரம்பனை இழுத்துச் சென்று கொன்றுவிட்டான், அதனை உணர்ந்து ரம்பன், மிகக் கடுமையாகத் தவஞ் செய்து, தன் தலையையே வெட்டி ஆகுதி செய்ய முயன்றான். அதனை மெச்சிய அக்னிதேவன், ரம்பனுக்கு காட்சியளித்து, தற்கொலையின் கொடுமையை விளக்கி, அவனுக்கு ஒப்புயர்வற்ற மகன் உண்டாகுமாறு வரம் அளித்து மறைந்தான்.

விதியை யாராலும் வெல்ல முடியாதன்றோ? காமத்திற்குக் கண்ணில்லை என்பர். இவற்றிற்கு இணங்க, ரம்பன் முன்பு பருத்துக் கருத்த பெண் எருமை ஒன்று வந்தது. ரம்பன் அதனைப் புணர, விரும்பவே, அதுவும் இச்சையோடு அதற்கு இசைந்தது. அதனால் அந்தப் பெண் எருமை கருத் தரித்தது. அந்நிலையில் ஓர் எருமைக்கடா அந்தப் பெண் எருமையை விரும்பியது. அது கண்ட ரம்பன், அதனைக் அக்கடாவினின்றும் காப்பாற்ற விரும்பி, அந்த எருமையுடன் பாதாளம் புகுந்தான். கடாவோ விடவில்லை. ரம்பனுக்கும் கடாவுக்கும் பெரும்போர் நடந்தது. போரின் முடிவில் ரம்பனைக் கடா கொன்றுவிட்டது. அதனை அறிந்த பெண் எருமை, ரம்பனோடு உடன்கட்டை ஏறத் துணிந்து, சிதையில் ஏறியது. அப்போது அதற்கு ஓர்



உள்கோட்டை

ஸ்ரீ துர்கை

(திருச்சி)

ஆண் குழந்தை பிறந்தது. அவ்வாறு பிறந்த குழந்தையே மகிஷன் என்னும் அசுரன் ஆவான்.

பிறக்கும்பொழுதே மகிஷன், தேவர்களிடம் பகைமை கொண்டு அவர்களை ஒழிக்கவும், அதற்கேற்ற பலம் பெறவும் விரும்பி, பிரம்மதேவனைக் குறித்துக் கடுந்தவம் இயற்றினான். பிரம்மா அவனுக்குப் பிரத்தியட்சமாகி, தேவையான வரத்தை வேண்டுமாறு கூறினார். அதற்கு மகிஷன், 'பெண்களைத் தவிர வேறு யாராலும் நான் மரணம் அடையக்கூடாது' என்று வரம் கேட்டான். பெண்ணால் தனக்கு மரணம் நேராது என்ற உறுதியினாலேயே அவன் அவ்வாறு வரம் கேட்டான். பிரம்ம தேவரும் அவன் விரும்பிய வரத்தை அளித்து மறைந்தார்.

வரத்தைப் பெற்ற மகிஷன் மிகச் செருக்கு உடையவனாய் யாவரையும் வென்று இந்திரனுடன் போர் தொடுக்க விரும்பி தன் விருப்பத்தை ஒரு தூதுவன் வாயிலாகச் சொல்லி விடுத்தான். அத்தூதன் இந்திரனிடம் சென்று, மகிஷனுடைய வீரப் பிரதாபங்களைக் கூறி, அவனிடம் சரணடையுமாறு இந்திரனுக்கு அறிவுரை கூறினான். இந்திரனோ, அந்த அறிவுரையைக் கேளாமல், மகிஷனது பிறவியைப் பரிகசித்து, 'புல் தின்கின்றவன் அமுதபானம் செய்பவனோடு போர் புரியமுடியுமா ? அவனை உயிர் பிழைத்துப் போகச் சொல்' என்று கூறி விடுத்தான். இந்திரன் கூறிய அறிவுரையைத் தூதுவனும் மகிஷனிடம் கூறினான்.

இந்திரனின் இகழ்ச்சியுரையைக் கேட்ட மகிஷன் கடுங் கோபம் கொண்டு தேவர்களுடன் போர் புரியத் தொடங்கினான். பிரகஸ்பதியினிடம் ஆலோசனை செய்த இந்திரன் தானும் போர் செய்ய விரும்பி பிரம்மா, திருமால் ஆகியோரின் துணையையும் பெற்று, மகிஷனுடன் பெரும்போர் தொடர்ந்தான். போர் மிகவும் பயங்கரமாக நடந்தது. போரில் தேவர்கள் தோற்று ஓடினர். இந்திரனோ அஞ்சி ஓடி ஒளிந்துகொண்டான். ஏனைத் தேவர்களை விடாமல் துரத்திப் பிடித்த அசுரப்படை வீரர்கள், அவர்களையெல்லாம் மகிஷனின் முன்கொண்டு வந்து நிறுத்தினர். அவ்வாறு நிறுத்தப்பெற்ற தேவர்களை மகிஷன் தனக்குக் குற்றேவல் புரியும் பணிவிடையாளர்களாக அமைத்துக் கொண்டான். பின்பு அவன் ஐராவதத்தின்மீது ஏறிக்கொண்டு, தன் தலைநகரத்தை அடைந்தான்.

தோற்று ஓடி மறைந்த இந்திரன் மகிஷனை வெல்வதற்கு வழி அறியாமல் கலங்கினான். பின்பு அவன், பிரம்மா முதலியோரைக் கலந்து ஆலோசித்தான். முடிவில் யாவரும் சிவபிரானைத் துதித்தனர். கருணாமூர்த்தியும் நீலகண்டனுமாகிய சிவபெருமான், அம்பிகையைப் போருக்கு அனுப்பலாம் என்று

போசனை கூறினர். அதன்படியே யாவரும் பராசக்தி அன்புடன் துதித்தனர். அவர்களது துதியைக் கேட்டு மகிழ் அன்னையும் அவர்களுக்குக் காட்சி கொடுத்தார்.

அன்னையைக் கண்ணுற்ற யாவரும் அத்தேவியின் அழகை தேஜசையும் கண்டு பலவாறு துதித்தனர். பின்பு மகிஷாசுர கொல்ல உதவியாக இருக்கும் என்று எண்ணி அவர்கள் தமக் உரிய தெய்வப் படைகளைத் தேவியிடம் அளித்து, மகிஷ கொல்லுமாறு வேண்டி, மேலும் மேலும் துதித்தனர்.

தேவியும் மகிழ்ந்து, அவர்களைப் பார்த்து, 'தேவர்க அச்சம் வேண்டா. நான் மகிஷாசுரனைக் கொல்வேன்' என் அருள் செய்தார். பின்னர் அம்பிகை, சிங்க வாகனத்தில் ஏ கொண்டு, சிறிது தூரம் சென்று, மிகவும் பயங்கரமாகக் கர்ஜ செய்தார். அந்தக் கர்ஜனையைக் கேட்ட அசுரர்கள் நடுந கினர். மகிஷன் தன் மந்திரிகளுள் ஒருவனைத் தேர்ந்தெடு 'நீ தேவினியிடம் செல். நயமாகவும் பயமாகவும் பேசி என் ஏப்படியாவது தேவி மணந்துகொள்ளும்படி செய். இ சொற்களைச் சாதுர்யமாகப் பேசினால் இணங்கிவிடுவாள்' என் சொல்லி அனுப்பினன்.

மகிஷனுடைய ஏவலை மேற்கொண்ட மந்திரி புறப்ப வந்து தேவியைக் கண்ணுற்றான்; அவ்வளவில் அவன், தே யின் வீரத்தையும், துணிவையும், வலிமையையும், மிடுக்கை கண்டு கலங்கி, செய்வதறியாமல் நின்றான். தேவி அவ பார்த்து, 'நீ யார்? எங்கு வந்தாய்? பயப்படாமல் கூறு' என் அதற்குள் மந்திரி ஒருவாறு தெளிந்து, மனத்தைத் திடப்படுத் கொண்டு, 'நான் மகிஷனுடைய மந்திரி. எங்கள் அர பெருமையைத் தாங்கள் கேள்விப்பட்டீர்கள். அவர் தங்க திருமணம் செய்துகொள்ள விரும்புகிறார். அதனால் தங்களுக் பரம சுகங்கள் ஏற்படும். தயைசெய்து தடை சொல்லா தங்கள் உடன்பாட்டைத் தெரிவியுங்கள்' என்றான்.

மந்திரியின் உரையைக் கேட்ட பராம்பிகை கைகொ நகைத்து, 'அடடே! என்ன வார்த்தை சொன்னாய்? எருமை மந்திரி என்பது சரியாக இருக்கிறது. விவாதத்திற் விவாகத்திற்கும் இருசாராரும் சரிசமமாக இருத்தல் வேண் அதுதான் அழகு. நான் பரமேசுவரருடைய பத்தினி. ருக்குள் நானும், எனக்குள் அவருமாக இருக்கிறோம். யோர்க்குத் தனித்தனியே ஆண் பெண் உருவமாகக் கா யளிப்போமேயன்றி, நாங்கள் இருவரும் ஒருவரே. எங்க பற்றிய உண்மையை வேதம் கூறும். இதை நீ உன் த

னிடம் சொல். ஓடிவிடு. உன்னை மன்னித்தேன்' என்று கூறி விடுத்தார்.

மந்திரி அஞ்சி நடுநடுங்கியவாறு வந்து மகிஷனுக்கு அறிவுரைகள் பல கூறினன். மகிஷனே அவற்றைக் கேட்டும், "விநாசகாலே விபரீத புத்தி" என்ற வாக்கியத்திற்கு இணங்க, அன்னையின்மீது அடங்காக் காமம் கொண்டு, மந்திரிகளின் மந்திராலோசனைப்படி வேறு வழியின்றி, அன்னையுடன் போர் புரியத் தீர்மானித்தான்.

போர் தொடங்கியது 'பயங்கரமான போர் அது. இதுவரை அதுபோன்று போர் நடந்ததில்லை. போரில் அரசர்கள் பலர் மடிந்தனர். தாமிரன், சிட்க, அசிலோமன் போன்ருேரும் இறந்துபட்டனர். மகிஷாசுரனே தேவியுடன் போர் செய்ய முன் வந்தான். மகிஷனுக்கும் தேவிக்கும் விரவாதம் நடந்தது. மகிஷன் தேவியின்மீது தீராக் காமம் கொண்டு, 'அழகியே, நீ என்னைப் பலவாறு பழித்தாய். நான் அவை எல்லாவற்றையும் மன்னித்து மறந்துவிட்டேன். என்னை மணப்பாயாக' என்ருன். அத்தகைய தகாத சொல்லைக் கேட்ட தேவி, 'அடா, எருமையே ! விருப்பம் இல்லாதவளை மணப்பதால் என்ன சுகம்? நீயோ எருமை; நானே தேவ மகள். மேலும் நான் ஒருவருடைய மனைவி. உன்னை வதம் செய்வதற்காக நான் வந்திருக்கிறேன். இந்நிலையில் தகாத உரை பேசிக்கொண்டிருக்கிருய். எடு படையை. தொடங்குக போரை' என்று கூறி விர முழக்கம் செய்தார். மகிஷனும் வேறு வழியின்றிப் போர் செய்தான்.

தேவிக்கும் மனுஷனுக்கும் கடுமையான போர் நடைபெற்றது. மகிஷன் பல மாயப்போர்களை நிகழ்த்தியும் தோல்வியே அடைந்தான். காலம் நீடிப்பதைக் கண்டு தேவர்கள் கலங்கினர். அவ்வளவில் அன்னை பராசக்தி அடக்கமுடியாத சினங்கொண்டு, அவனைக் கீழே தள்ளி மூர்ச்சிக்கச் செய்தார். அவன் மூர்ச்சை தெளிந்து மீண்டும் போருக்கு வந்தபொழுது, தன் சக்ராயுதத்தால் அவனது தலையை அறுத்து வீழ்த்தினர். சக்ராயுதம் அதோடு நில்லாமல் ஏனைய அசுரர்களையும் வீழ்த்தத் தொடங்கியது. எஞ்சிய அசுரர்கள் ஓடி ஒளிந்தனர். தேவர்கள் அன்னையைக் கண்டு, 'மகிஷாசுரனைக் கொன்ற மகேசுவரியே, நமஸ்காரம்' என்று சொல்லிப் போற்றி வணங்கினர்.

பின்பு தேவர்கள் யாவரும் ஒன்றுகூடி, தமக்காக அன்னை செய்த பேருதவியை எண்ணி, அப்பிராட்டியைப் பின்வருமாறு துதித்தனர் :—

1. மேதாஸி சாந்திரஸி சாந்திரபி ப்ரஸித்தா
புத்திஸ் த்வமேவ விசதார்த்தகரீ நராணும் |
ஸர்வம் த்வமேவ விபவம்புவந த்ரயேஸ்மின்
ஹத்வா ததாஸிபஜதாம் க்ருபயா ஸதைவ ||

2. லீலா சரித்ரம் ஜகதாம்பிகாய :
ரக்ஷாந்விதம் தேவ மஹாமுநீநாம் |
ஸம்ஸார வார்த்தேஸ் தரணம் நராணும்
கதம் க்ருதக்ஞாஹி பரித்யஜேயு : ||

## இவற்றின் விளக்கம்

1. புந்தியும் நீயே பொலியொளி நீயே
பொருந்திய சாந்தியும் நீயே
உந்திய அறிவாய் இலகுமக் கட்கு
ஞானமா உணர்ச்சியூட் டுவையே
அந்தரம் புவிகீழ் என்னுமூ வுலகும்
ஆயினை போற்றின வாக்கு
வந்துறு பகையை அழித்தருள் ஈவாய்
வாழியெம் அன்னைநீ வாழி.

2. தேவரை முனிவர் தங்களைக் காக்கும்
சீரிய கரப்பெனப் பொலியும்
தேவியாம் சகத்தின் அன்னைதன் ஆடல்
திப்பிய சரித்திரம் மக்கள்
மேவிய பிறவிக் கடலினைக் கடந்து
வியன்கரை ஏறிடச் செயுமேல்
யாவரே நன்றி யறிவுடை யோரில்
இக்கதை வேண்டகி லாதார் ?

இத்தகைய மகிஷாசுர சரிதத்தைப் பாராயணம் செய்வ சிரவணம் செய்வது, அம்பிகையின் திருவுருவத்தை வணங்கு என்பன போலும் செயல்கள் சென்ற பிறவியின் புண்ணி பயனுகவே அமையும்.

மகிஷாசுர வதத்திற்குப் பிறகு சும்பநிசும்ப வதம் மகாக யின் தோற்றம், காளியின் கோரமான போர், சாமுண்டீசுவரிய எல்லையற்ற பராக்கிரமம் முதலியவை யாவும் தேவீ பாகவ தில் பரக்கப் பேசப்படுகின்றன. அவற்றைப் பின்பு விளக்கி ளோம்.

இப்பகுதியில் சப்த மாதாக்களின் பெருமை, பெயர், அ களால் விளையும் தீமைகள், அவற்றிற்குரிய பரிகாரங்க அவற்றிற்குரிய சாந்திகள் போல்வன விரிவாகக் கூறப்

ருள்ளன. சம்சாரிகளுக்கு இவை மிகவும் அவசியமாதலின், சப்த மாதாக்களின் தன்மைகளைச் சிறிதே விளக்குவோம் :

## சப்த மாதாக்கள்

1. அபிராமி : தோலிற்குத் தலைவி ; இவளது சினம் மிகுந்தால் சொறிநோய் உண்டாகும். வெட்டிவேர் விசிறியினால் விசிறி, விபூதி அணிந்து, பிட்டும் சர்க்கரைப் பானகமும் நிவேதனம் செய்து, ஏழைகட்கு விநியோகித்தால் அன்னை சாந்தம் அடைவாள்.

2. மகேசுவரி : நிணத்திற்குத் தலைவி ; இவள் சினமுற்றால் வெட்டுக்காயம் ஏற்படும். குறுவேர் விசிறியினால் விசிறிக் குங்கு மார்ச்சனை செய்து, சுண்டலும் நீர்மோரும் ஏழைகட்கு அளித்தால் நலம் பெறலாம்.

3. கௌமாரி : இரத்தத்திற்குத் தலைவி ; கோபம் அடைந்தால், பசுக்களுக்குக் கோமாரி என்ற நோய் ஏற்படும். பனையோலை விசிறியினால் விசிறி, எலுமிச்சம்பழ ரஸமும், எலுமிச்சம் பழச் சாதமும் படைத்தால் குணம் அடையும்.

4. நாராயணி : சீழிற்குத் தேவதை ; சீற்றமுற்றால் விஷக்கடி ஏற்படும் ; சீழ் பெருகும். தென்னை ஓலையால் விசிறி, பட்டினி இருந்து, பன்னீர் தெளித்துப் பாயசம் நிவேதனம் செய்து பாலர்களுக்கு அளிப்பின் பாங்காகும்.

5. வாராகி : எலும்பின் தேவதை ; சினமுறின் வாதபித்தாதிக்கியம் ஏற்படும். மயில் தோகை விசிறியால் விசிறி, பிரார்த்தனை செய்து, வெள்ளரிக்காயும், முறுக்கும் நிவேதனம் செய்து எல்லோருக்கும் விநியோகத்தால் குணம் பெறுவது உறுதி.

6. ருத்திராணி : சதையின் தேவதை ; சினங்கொண்டால் அம்மை பெருகும். அன்னையின் சந்நிதியில் தங்கி சாமரம் விசிச் சந்தனம் பூசிப் பலாச்சுளை படைத்தால் அன்னை இரங்குவாள் என்று பெரியோர் நம்புகின்றனர்.

7. காளி : நரம்பின் தலைவி ; சீற்றம் கொண்டால் கிராமக் கலகம் உண்டாகும். காளியின் கதையைக் கேட்டும், கவரிமான் விசிறியால் அன்னைக்கு விசிறியும், தயிர் அபிஷேகம் செய்தும், அவல் சேமியாவால் ஆகிய திண்பண்டத்தை நிவேதனம் செய்து ஏழைகளுக்கு அளித்தும் துதித்தால் அன்னை மனம் குளிர்வாள்

---

# 14. பந்தபாசங்களும், கவலையும் நீங்

## ஸ்ரீ புவனசுந்தரி மகாத்மிய

முன் காலத்தின் சுரதன் என்னும் அரசன் தனது நாட்டை நல்ல முறையில் ஆண்டுவந்தான். அப்பொழுது அயல் நாட்டை ஆண்டு வந்த மிலேச்சர்கள் திடீரென்று சுரதனின் நாட்டை வளைத்து முற்றுகையிட்டுத் தாக்கினர். போரில் சுரதன் தோல்வி அடைந்தான். அதனால் மனம் நொந்த சுரதன், யாவரையு விடுத்துக் காட்டை அடைந்து, அங்கு எழுந்தருளியிருந்த சுமேத என்ற முனிபுங்கவரைக் கண்டு வணங்கித் தன் குறையைக் கூ வருந்தினான். அதற்கு அந்த முனிவர் அவனை நோக்கி, 'அர அஞ்சாதே, இனி உனக்குத் துன்பம் இல்லை. ஆயினும் என் போலவே நீயும் இலையை உண்டு இங்கேயே அமைதியுடன் இ என்று பணித்தார். சுரதனும் அவ்வாறே அவ்விடத்தில் நிம் யாகக் காலம் கழித்து வந்தான்.

ஒரு நாள் சுரதன் பொழுது போக்கிற்குக், காலாரச் சிறி தூரம் நடந்து சென்றான். அப்பொழுது வழியில் பெறுப்புணர் சியுடன் இருந்த சமாதி என்ற வைசியனைப் பார்த்து, 'நீ ஏ கலக்கம் கொண்டிருக்கிறாய்? வருந்தாதே. நடந்ததைச் சொல் என்று வினவினான். அதற்கு அந்த வைசியன், 'நான் ஒரு செட் ஏராளமான செல்வம் எனக்கு உண்டு. புதல்வர்கள் பலரு எனக்கு உள்ளனர். ஆனல், அவர்கள் பேராசையால் என் அடித்துத் துரத்திவிட்டனர். அதனல்தான் நான் மனங்கல அமைதியிழந்து வருகிறேன்' என்றான். சுரதன் அவ்வணிக அழைத்துக்கொண்டு முனிவரிடம் வந்து, அவனது வரலாற்ை யும் கூறினான்.

சுரதன் கூறுபவற்றைக் கேட்ட முனிவர் மனம் இரங்கி, அ் விருவரையும்நோக்கி, 'வருந்தவேண்டா; இவ்வுலகம் மாயையா மூடப்பெற்றது. மாயையாகிய இருளினல் மக்கள் யாவரும் கவ யினல் துன்புறுகின்றனர். ஒருவனுக்குப் பணம் இருக்கிற ஆனல் அதைத் தன்னல் காப்பாற்றமுடியவில்லை என்பா அவன். மற்றொருவன் தன் குடும்பத்தைக் காப்பாற்றப் பண இல்லை என்பான். இத்தகைய பந்த பாசங்களும், மனக்கவலையு நீங்கவேண்டுமானல் தேவீ பூஜை செய்யவேண்டும். ஸ்ரீ தே பூஜையினல் நிறைவேருத ஒன்றும் இல்லை. ஆதலின் அத்தே யின் பல வடிவங்களினல் ஸ்ரீ புவனசுந்தரி என்னும் திருப்பெய கொண்ட அன்னையைப் பூஜை செய்வது சாலச் சிறந்தது. பூஜை கேற்ப அர்ச்சனை, அர்ச்சனைக்கேற்ப ஹோமம், ஹோமத்தி

கேற்பத் தானதருமம் முதலியவற்றைச் செய்யவேண்டும் இப்படிச் செய்யும் பூஜையின் சிறப்பைக் கூறி எல்லை காண முடியாது. நீங்கள் இருவரும் வேறு சிந்தனை இல்லாமல், இந்தப் புவனேச்வரி மந்திரத்தை ஜபித்தால் மன நிறைவு உண்டாகும்' என்று கூறி, அவர்களுக்குப் புவனேசுவரி மந்திரத்தை உபதேசித் தருளினர்.

உலகத்தில் உள்ள பெண் வடிவங்களையெல்லாம் நம் தாயின் வடிவமாகக் கருதுதல் என்னும் கொள்கையை விளக்குவது அந்த மந்திரம். அந்த மந்திரத்தை அரசன் இடைவிடாமல் சொல்லி, தேவியைக் குறித்து கடுந்தவம் செய்தான். தேவி வரவில்லை. ஆனால் அரசன் தளராமல், 'தேவி எனக்குக் காட்சி கொடுக்காவிட்டால் என் உயிரையே போக்கிக்கொள்வேன். என்று சொல்லி மீண்டும் மந்திரங்களைக் கூறித் தவம் செய்ய லானன். அந்நிலையில் தேவி அவனுக்குக் காட்சி கொடுத்து அருள் செய்தாள். இழந்த நாடும் அவனுக்குத் திரும்பக் கிடைத்தது. இவ்வாறு புவனேசுவரி மந்திரத்தைச் சொல்லிவந்த வணிகனும் தான் இழந்த பொருள்களை மீண்டும் பெற்றான். இவ்விதமாக அவ்விருவரும் தேவியின் பக்தர்கள் ஆயினர். பின்பு அவர்கள், இவ்வுலகப் பற்றுகளை ஒழித்து தீர்த்த யாத்திரை செய்து முக்தி அடைந்தனர்.

---

# 15. கலியுகத்தின் கேடுகளிலிருந்து தப்ப

### யுக தர்மம்

ஒருவன் எவ்வளவு படித்தாலும், எத்தனை உபதேசம் பெற்றாலும், எவ்வித முயற்சி செய்தாலும், காலம் ஒத்து வராவிடில் எத்தகையப் பயனையும் அடையமாட்டான். இந்தக் கலியுகம் மிகவும் பாவம் வாய்ந்தது. மக்கள் கலங்கிய மனத்துடன் இருப்பார்கள்; பாவம் செய்வதில் ஆசையுடையவர்களாக இருப்பார்கள்; வேத விதிகளையும், வேத கர்மாக்களையும் விட்டவர்களாக இருப்பார்கள். இத்தகைய உண்மையை உணர்ந்து, இந்த நிலையிலும் உலக மக்களைக் கரையேற்றுவதற்காகவே ஸ்ரீ தேவீ பாகவதம் எழுந்தது. யுகத்தின் கொடுமையை ஒருவாறு புள்ளி விவரங்களுடன் ஸ்ரீ தேவீ பாகவதம் கூறுகிறது. யுகத்துக்கு யுகம் புண்ணியம் குறைந்து, பாவம் பெருகுதலைக் கீழ்க்காணும் அட்டவணையிலிருந்து உணரலாம்:—

 


| | கிருதயுகம் | திரேதாயுகம் | துவாபரயுகம் | கலியுக |
|---|---|---|---|---|
| உயரம் அடி | 24 | 18 | 12 | 6 |
| வயது | 400 | 300 | 200 | 100 |
| சுகம் | 12 | 9 | 6 | 3 |
| துக்கம் | 6 | 12 | 18 | 24 |
| ஆசை | 5 | 10 | 20 | 50 |
| புண்ணியம் | 8 | 6 | 4 | 2 |
| பாவம் | 2 | 4 | 6 | 8 |
| சிற்றின்பம் | ஜாமம் | முகூர்த்தம் | கடிகை | நிமிஷம் |

முன் யுகங்களில் மக்கள் தம் தாயைப் பரிபாலனம் செய்வா இக் கலியுகத்தில் தம் மாமியாரைப் பரிபாலனம் செய்வ மக்களின் செயல்களைப் பின்வருமாறு தேவீ பாகவத கூறுகிறது :—

| முன்யுகங்களில் | கலியுகத்தில் |
|---|---|
| பசுக்கள் | நாய் |
| சகோதரர்கள் | மைத்துனர்கள் |
| தன் மனைவி | பரதாரம் |
| ஸத் கதை | வீண் வம்பு |
| க்ஷேத்திராடனம் | சூதாட்டம் |
| யாகம் | நாசவேலை |

இவ்வாறு கலியுகத்தில் உண்டாகும் மாறுதல்களை எவ்வள காலத்திற்குமுன் எத்தனை உண்மையாகத் தேவீ பாகவதம் கூ யுள்ளது ; அதனை நினைக்கும்பொழுது அந்த திவ்ய நூலினிட நமக்கு எவ்வளவு பக்தி உண்டாகிறது! கலியின் கொடுமையா நாயும், கீழ்மக்களும் தொட்டதைச் சாப்பிடும் ஆசை மக்களுக் வந்துள்ளது. பெண்களின் கதையைக் கேட்பதிலும், பெ களின் சூழ்நிலையில் வாழ்வதிலும், பெண்களைத் தரிசன செய்வதிலும் ஆண்களுக்கு இந்த யுகத்தில் விருப்பம் உள்ளத மக்கள் மதுபானத்தில் ஆர்வம் கொண்டுள்ளனர். யாவருக்கு மறதி அடிக்கடி ஏற்படுகிறது. அற்டர்களின் கூட்டுறவையும் பயனற்ற பேச்சையும் பலர் விரும்புகிறார்கள். சுருதி, ஸ்மிருதி புராணங்கள், தேவாலயம் முதலியவற்றில் மக்களுக்கு நம்பிக்கை இல்லை. மனிதனுக்கு நாளுக்கு நாள் ஆயுள் குறைகிறது புதிய புதிய நோய்கள் வருகின்றன. அவற்றைப் போக்க புதி புதிய மருந்துகள் தேவைப்படுகின்றன. கலியுகத்தில் மக்க யாவரும் பிறரிடம் சந்தேகம் கொள்கின்றனர் ; இப்படிப்பட் கலியுகத்தின் கேடுகளிலிருந்து தப்புவதற்கு ஒரே வழி ஸ்ரீ தே யிடம் பக்தி செலுத்துவதேயாகும்.

# 16. கன்னிப் பெண்கள் விரும்பிய கணவரைப் பெற

## ஏக வீர உபாக்கியானம்

மனிதன் எவ்வளவு பாபங்களைச் செய்தாலும், ஸ்ரீ தேவியைச் சரணடைந்தால் போதும். அவன் செய்த பாவங்கள் யாவும் நீங்கும். ஸ்ரீ தேவி தனது அருளால் எல்லாப் பாவங்களையும் போக்கி விடுவாள். தேவியின் திருநாமத்தால் போக்கமுடியாத பாவமே இல்லை.

முன் ஒரு சமயம் ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ லக்ஷ்மீ தேவி மகிழ்ச்சியுடன் அமர்ந்திருந்தாள். அப்பொழுது சூரியனின் மைந்தனாகிய தேவந்தன் என்பவன் உச்சை சிரவம் என்னும் குதிரையின்மீது ஏறி அங்கே வந்தான். திருமகள் அக்குதிரையைக் கண்டு, 'நம்மோடு பிறந்த இந்தக் குதிரை எவ்வளவு அழகாக உள்ளது' என்று தன்னை மறந்து வியப்பில் ஆழ்ந்தாள். அந்நேரத்தில் திருமால் லக்ஷ்மீயைப் பல முறை அழைத்தும் அவள் திரும்பிப் பார்க்கவில்லை. அதனால் சினங்கொண்ட திருமால், 'நீ குதிரையைக் கண்டு மோகம் கொண்டதால் குதிரையாகப் பிறப்பாய்' என்று சாபம் கொடுத்தார். அது கேட்ட ஸ்ரீ லக்ஷ்மீ தேவி திடுக்கிட்டாள்.

திருமால் இட்ட சாபத்தினால் லக்ஷ்மீ தேவி அக்கணமே இமய மலைச்சாரலில் ஒரு பெண் குதிரையாகத் தோன்றிவிட்டாள். எனினும் அவள், பழைய நினைவுடன் திருமாலை அடையவேண்டிச் சிவபிரானைப் பூஜை செய்து வந்தாள். திருமாலும் சிவபிரான் விருப்பப்படியே ஓர் ஆண் குதிரையாகத் தோன்றி, அப்பெண் குதிரையைச் சேரவே ஓர் அழகிய ஆண் குழந்தை பிறந்தது. பிறந்தவுடன் குழந்தையை அங்கேயே விடுத்துத் திருமாலும் லக்ஷ்மீ தேவியும் சென்றுவிட்டனர். லக்ஷ்மீ தேவியின் பெண் குதிரை உருவமும் மாறிவிட்டது. தனியே விடப்பட்ட குழந்தையோ தன் கட்டை விரலை வாயில் வைத்துச் சுவைத்துக் கொண்டிருந்தது.

இஃது இவ்வாறு இருக்க, துர்வசு என்ற பக்தி சிரேஷ்டன் திருமாலைக் குறித்துத் தவம் செய்து, தனக்கு ஒரு புத்திரன் வேண்டும் என்று பிரார்த்தித்தான். அதற்குத் திருமால் அவனை நோக்கி, 'நீ இப்பொழுது சென்றால் கங்கைக் கரையில் உனக்கு ஓர் அழகிய குழந்தை கிடைக்கும். அதனை எடுத்துச் சென்று உன்

மைந்தனைப் போற்றி வளர்ப்பாயாக' என்று அருள் செய்தா
அது கேட்டுப் பெருமகிழ்ச்சி அடைந்த துர்வர்சு, கங்கை
கரைக்கு விரைந்து சென்றான். பேரழகுடன் அங்குக் கிடந்த
குழந்தையை எடுத்துக்கொண்டு அரண்மனை சேர்ந்தான். த
மனைவியை அழைத்து, 'திருமாலின் அருளால் கிடைத்த புதல்வ
இவன், பெற்றுக்கொள்' என்று சொல்லி. அக்குழந்தையை மனை
யிடம் கொடுத்தான். அவளும் பரிவுடன் அம்மகனை வா
அணைத்து உச்சிமோந்து, அன்புடன் வளர்க்கலானாள். அம்ம
னுக்கு ஏகவீரன் என்று பெயரிடப்பட்டது.

குழந்தைக்குச் செய்யவேண்டிய யாவும் முறைப்படி செய்ய
பெற்றன. குழந்தையாகிய ஏகவீரன் எல்லா வித்தைகளையு
கற்றுத் தேர்ந்து, அரச பாரத்தைச் சுமப்பதற்கேற்ற கட்டி
காளையாகத் திகழ்ந்தான். இப்படிச் சிறந்து விளங்கிய ஏகவீர
அரசன் அமைச்சர்களிடம் காட்டி, 'நல்லமைச்சர்களே! இவனு
குப் பட்டம் கட்டிவிட்டு, நான் வானப்பிரஸ்தாசிரமம் ஏற்று வன
துக்குச் செல்கிறேன். என்னிடம் காட்டிய மதிப்பையும் பரிவை
யும் நீங்கள் இவனிடம் காட்டவேண்டும்' என்று கூறினான். பின்
அவன் அரச பதவியில் உள்ள பொறுப்புக்களையெல்லாம் ஏ
வீரனுக்கு விளக்கிக் கூறிவிட்டு, அவனுக்குப் பட்டாபிஷேக
செய்வித்து, தன் மனைவியுடன் காட்டிற்குச் சென்றுவிட்டான்.

ஏகவீரன் அரசனாகி மிக்கத் தோற்றப் பொலிவுடன் துன
பின்றி அரசாட்சி நடத்திவந்தான். ஒரு நாள் அவன் குதிரையே
நெடுந்தூரம் சென்றுவிட்டான். வழியில் அவன் ஒரு தாமரை
தடாகத்தைத் கண்டான். அக்குளக்கரையில் ஓர் அழகிய பெ
அழுதுகொண்டிருந்தாள். அவளைப் பார்த்த ஏக வீரன் மிகவ
வருத்தமுற்று, அவளை நோக்கி, 'பெண்ணே, நீ ஏன் அழுகிறா
உனக்கு உற்ற குறை யாது? சொன்னாயானால் யான் அக்குறை
யைத் தீர்த்துவைப்பேன். நான் அரசன். என்னால் உனக்கு உத
செய்யமுடியும்' என்று கூறினான். அவ்வுரை கேட்ட அம்மங்கை
சிறிது துயரம் நீங்கிச் சொல்லலானாள் :—

"அரசே, உன் ஆட்சிக்கு உட்படாத வேறொரு நாட்டி
ரைப்பியன் என்னும் மன்னன் ஆட்சி புரிகிறான். அவனுக்கு ரு
ரேகை என்னும் மனைவி இருக்கிறாள். அவள் அழகிலும் செல்வ
திலும் சிறந்தவள். எனினும், அவளுக்குக் குழந்தைப் பேறு கிட
வில்லை. அதனால் அவள் வருந்தித் தன் கணவனிடம், 'நாத
நமக்குப் பிள்ளைப் பேறு இல்லை. அக்குற்றம் என்னைச் சார்ந்த
இக்குறை தீர நாம் என்ன செய்யலாம்?' என்று கேட்டா
அவ்வரசன் சான்றோர்களைக் கலந்து யோசித்துப் புத்திரகாமேஷ்
யாகம் செய்தான். அப்பொழுது அந்த யாககுண்டத்திலிருந்
மின்னற்கொடி போலும் ஓர் அழகிய பெண் குழந்தை தோ

றியது. யாகத்தைச் செய்துவைத்த குரு அக்குழந்தையைத் தூக்கி மன்னனிடம் கொடுத்து, 'அரசே ! இப்பிறவியில் உனக்கு இப் பெண்தான் கொடுத்துவைத்தது. சிலாக்கியமானவளும், யாகத் தீயில் தோன்றியவளுமான இப்புத்திரியை நீ புத்திரனாகவே கருதி வளர்ப்பாயாக' என்று கூறினர். மன்னனும் மகிழ்ந்து, பராசக்தி யின் திருவருளாலேயே அப்பெண் குழந்தை கிடைத்தது என்று எண்ணி, அப்பெண்ணுக்கு ஏகாவளி என்று பெயரிட்டு வளர்த்து வந்தான்.

இப்படியிருக்கும்பொழுது, ஒரு நாள் முனிவர் ஒருவர் அங்கு வந்து, "இப்பெண்ணை மகாவிஷ்ணுவின் மகனான ஏகவீரன் மணப்பான்" என்று கூறிச் சென்றார். அன்று முதல் அந்தப் பெண் தனக்கு ஏக வீரனே கணவன் என்று கருதினாள். பலவகைப்பட்ட விளையாட்டுக்களில் மனம் சென்றாலும் அவள் தாமரைக் குளத் தையும், தாமரை மலர்களையும் கண்டால் மிக மகிழ்ச்சி அடை வாள்; குளத்தில் மூழ்கித் தாமரை மலர்களைச் சூடி மகிழ்வாள். இந்தக் குளம் மிகவும் ரமணீயமாக இருப்பதாலும், ஆயிரக்கணக் கான தாமரை மலர்கள் இருப்பதாலும் ஏகாவளி இங்கு வந்தாள். அந்த அரசனது மந்திரியின் குமாரியாகிய நானும் அவளுடன் வந்தேன். வந்த இடத்தில் காலகேது என்னும் ராட்சஸன் என் தலைவியமான ஏகாவாளியைப் பலவந்தமாகத் தூக்கிச் சென்றுவிட் டான். நானும் அவனை விடாமல் பின்தொடர்ந்தேன். அவன் பாதாள உலகில் ஏகாவளியைச் சிறை வைத்து அவளுக்குத் துணையாக என்னை ஏற்படுத்தி, அவளது மனத்தை மாற்றுமாறு எனக்குக் கட்டளையிட்டான். என்ன செய்வதென்று புலப்படாமல், நான் வருந்திக்கொண்டிருந்தேன். என் தலைவியோ எல்லாத் துக்கங்களையும் போக்கும் ஸ்ரீ புவனசுந்தரி தேவியைத் தியானம் செய்துவந்தாள்.

"நேற்றிரவு அன்னை ஏகாவளியின் கனவில் தோன்றினாள். அன்னை அவளை நோக்கி, 'உன் தோழியை நாளை அக்குளக் கரைக்கு அனுப்பு. உன்னை மணக்குப்போகும் ஏகவீரன் அவ்விடம் வருவான். அவன் உன் தோழியின்மூலம் உனது நிலையை அறிந்து இங்கு வந்து, காலக்கேதுவைக் கொன்று உன்னை மீட்பான்' என்று கூறியருளினாளாம். ஏகாவளியின் ஏவலால் நான் இங்கு வந்து காத்திருக்கிறேன். அம்பிகையின் மந்திரத்தை இடைவிடாமல் நான் ஜபித்துக்கொண்டிருந்தேன். அதன் பயனாகவே தாங்கள் வந்திருக்கிறீர்கள். தாங்களே ஏகவீரர் என்று கருதுகிறேன். என் தலைவியையும் என்னையும் ராட்சஸனிடமிருந்து விடுவியுங்கள்" என்று விளக்கமாகக் கூறி வேண்டினாள்.

ஏகாவளி என்னும் பெயரைக் கேட்டவுடனேயே ஏகவீரன் அவள் தனக்காவே பிறந்தவள் என்று உறுதி கொண்டு, எல்லை

யற்ற காதலுடன், பவானி தேவியின் பீஜாட்சரத்தை உச்சரித்து கொண்டே அத்தோழியுடன் பாதாள உலகம் சென்ருன்.

அந்தச் சமயத்தில், தன்னை மணந்துகொள்ளுமாறு ஏகாவளியைக் காலகேது கெஞ்சிக்கொண்டிருந்தான். ஏகாவளியோ 'நீ அரக்கன், உனக்கு க்ஷத்திரிய தர்மம் தெரியாது. ஒரு பெண் தனக்கு உரியவன் என்ற ஒருவனை வரித்துவிட்டால், அப்பெண் வேருெருவனுக்கு மனைவியாகக் கூடாது. நான் ஏகவீரனை விரும்பி விட்டேன். என் தந்தையும் அதற்குச் சம்மதம் கொடுத்துவிட்டார். எனவே, நான் ஏகவீரனைத்தான் மணப்பேன். அவர் வந்து உன்னைக் கொல்லுவதற்குமுன் நீ என்னை எனது அரண்மனையில் சேர்த்துவிடு' என்று அரக்கனிடம் உறுதியாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

இந்த நிலையில் தூதர் ஓடோடி வந்து, காலகேதுவை நோக்கி "தலைவ, பூவிலகத்திலிருந்து தங்களோடு போர் செய்ய ஒரு வீரன் வந்துள்ளான். அவனைப் பார்த்தால், அவன் நம்மை வெற்றி கொண்டுவிடுவான் என்று தோன்றுகிறது' என்றனர். அவ்வுரை கேட்ட காலகேது பெரும் சீற்றத்துடன் போருக்குப் புறப் பட்டான். ஏகவீரனுக்கும் காலகேதுவுக்கும் கடும்போர் நடந்தது. போரில் காலக்கேது கொல்லப்பட்டான்.

பின்பு ஏகவீரன் ஏகாவளியைப்பார்த்து, 'பெண்ணே, ஸ்ரீ புவன சுந்தரி தேவியின் கிருபையால் நீ எனக்குக் கிடைத்தாய்' என்று கொஞ்சியவாறு அவளருகில் வந்தான். அவ்வளவில், அவள் "அன்பே, நாம் உடனே என் தந்தையிடம் சென்று நிகழ்ந்ததைக் கூறுவோம். அவரே முன்னின்று என்னைத் தங்களுக்குத் திருமணம் செய்துவைப்பார். அப்பொழுதுதான் பொன்மலர் மணம் பெற்றதைப்போல் இருக்கும்' என்று கூறி வேண்டினுள்.

ஏகவீரனும் அப்பெண்ணின் வேண்டுகோளுக்கு இசைந்தான். தேவபக்தனுகிய ஏகவீரன் தக்கவாறே நடப்பான் அன்ருே அவன் ஏகவாளியையும், தோழியையும் அவர்களது நாட்டுக்கு அழைத்துச் சென்று, அரசனிடம் அவர்களை விடுத்து, நிகழ்ந்த வற்றைக் கூறினுன். மன்னன் மனமகிழ்ந்து உடனே ஏகவீரனுக்கு ஏகாவளியைச் சிறப்புடன் திருமணம் செய்துகொடுத்தான். தம்பதிகள் ரதியும் மன்மதனும் போலக் காட்சியளித்தனர். ஏகாவளி பின்பு தன் கணவனுடன் அவனுடைய ராஜ்யத்தை அடைந்து மகிழ்ச்சியுடன் இல்லற வாழ்க்கை நடத்தினுள். அவர் களுக்குக் கிருதவீரியன் என்னும் ஆண் குழந்தை பிறந்தது. ஸ்ரீ தேவியின் பேரருளால் மாபெறும் மகிழ்ச்சியுடன் இனிமையாக வாழ்ந்தனர்.

---

## நாரத மாயை

உலகில் எல்லோரும் மாயைக்கு உட்பட்டவர்களே. ஸ்ரீ ஜகன் மாதாவின் கிருபையால் மட்டும் மாயை விலகுமேயொழிய, மற்றென்றால் ஒழியாது. இவ்வுலகம் முழுவதும் மாயையால் மூடப்பெற்றிருக்கிறது என்னும் உண்மையை நாம் மறந்து விடுகிறோம். மாயையின் வலிமையை விளக்க வருவதுதான் பின்வரும் கிளைக் கதை :

ஒரு சமயம் இந்திரலோகத்திற்கு நாரதர் வந்தார். இந்திரன் அவரைத் தக்கபடி உபசரித்து வரவேற்று, 'பெரியீர், தங்களைக் கூட மாயை பற்றுமா?' என்னும் ஒரு ஐய வினாவை எழுப்பினான். அதனைக் கேட்ட நாரதர், கைகொட்டிச் சிரித்து, 'ஸ்ரீ பராம்பிகையைத் தவிர யாவரும் மாயைக்கு உட்பட்டவர்களே. நான் மாயையால் பட்ட துன்பத்தைச் சொல்கிறேன் கேள்' என்று சொல்லிப் பின்வருமாறு கூறலானார்:

"நானும் அவித்தையின் வாசனையினால் என்னை மாயை நெருங்காது என்று எண்ணிக்கொண்டிருந்தேன்; அவ்வாறே சொல்லிக் கொண்டும் திரிந்தேன். ஒரு நாள் நான் என் நண்பர் பர்வதர் என்பவருடன் க்ஷேத்திராடனம் செய்யச் சென்றேன். இருவரும் செல்லுங்கால் எங்கள் மனத்தில் கருத்து வேறுபாடு தோன்றினால் அதை வெளிப்படையாகச் சொல்லிவிட வேண்டும் என்னும் உறுதியை நாங்கள் மேற்கொண்டோம். இருவரும் சஞ்சமம் என்னும் பட்டணத்தை அடைந்தோம். மழைக்காலம் தொடங்கியது. சாதுர்மாசியத்தை அங்கேயே நடத்தலாம் என்று அந்த நேரத்தில் அரசன் எங்களிடம் விண்ணப்பித்துக்கொண்டான். நாங்களும் அதற்கு இசைந்து அங்கேயே தங்கினோம். அவனுடைய ஒரே மகளான **தமயந்தி** என்பவள். எங்களுக்குப் பணிவிடைகள் செய்துவந்தாள்.

"உள்ளத்தை உருக்கும் என் இன்னிசை அமுதத்தைக் கேட்டு அவள் மகிழ்ந்து இன்புற்ற, எனக்கு அதிகப் பணிவிடைகள் செய்து, தன் அன்பு கலந்த பார்வையை என்மீது செலுத்தினாள். இதனைப பர்வதர் அறிந்து தடுத்தார். தடுத்தும் எங்கள் இருவருக்கும் பரஸ்பர அன்பு பெருகியது. அதுகண்ட பர்வதர், எனக்குக் குரங்கு முகம் உண்டாகும்படி சபித்தார். நான் அவரை ஊர் ஊராக அலையும்வண்ணம் சபித்தேன். அவர் எங்கோ சென்று விட்டார். நான் தமயந்தியை மணந்துகொண்டேன். எங்களுக்குக் குழந்தைகள் பல பிறந்தன.

"பர்வதர் பல நாடுகளைச் சுற்றிய பிறகு என்னையும் என் பெருங்குடும்பத்தையும் பார்த்து மனம் மிகவும் இரங்கினார். தனது சாபத்தையும் நீக்கிக்கொண்டார். எனக்குப் பழைய முகம் வந்துவிட்டது. எனினும், குடும்பப் பாரம் என்னை அழுத்தியது. அந்தத் தொல்லையைப் பொருமல் நான் என் மனைவியை மட்டும் அழைத்துக்கொண்டு உல்லாசப் பிரயாணத்தை மேற்கொண்டேன். வழியில் என் மனைவிக்குத் தண்ணீர்த் தாகம் உண்டாயிற்று. அதனைத் தணிக்கும்பொருட்டு, அவளை ஓரிடத்தில் இருத்தி தீர்த்தப் பாத்திரத்துடன் நான் ஒரு குளத்தை அடைந்தேன். குளத்தைப் பார்த்ததும் அதில் நீராடவேண்டும் ஆசை எனக்கு எழுந்தது. என்ன ஆச்சரியம்! குளத்தில் நீராடி எழுந்தவுடன் கட்டழகு மங்கைபாக நான் மாறிவிட்டேன்.

"எனக்கும் அச்சம் உண்டாயிற்று. என்ன செய்வதென்று புரி படாமல் நான் நின்றுகொண்டிருந்தேன். அப்பொழுது அவ் வழியாக வந்த மன்னன் ஒருவன் என்னைக் கண்டு மோகித்து எனக்குச் சர்வாங்கசுந்தரி என்ற பெயரிட்டு என்னை மணந்து கொண்டான். பிறகு அவன் என்னைத் தனது நாட்டுக்கு அழைத்துச் சென்றான். அவன் மூலமாக எனக்குப் பல குழந்தைகள் பிறந்தன. தாயாராகிய நான் ஓய்வு வேண்டிக் குழந்தைகளை விடுத்துத் தனியே ஒரு காட்டை அடைந்தேன். அங்கே பழைய குளத்தைக் கண்டேன். உடனே எனக்குப் பூர்வஞானம் உண்டா யிற்று. மிக்க வேதனையுடன் நான் அழுதேன். தேவ முனிவனாக இருந்த நிலை மாறியதற்காக அழுவதா? மனிதப் பெண்ணாக மணந்ததற்காக அழுவதா? குழந்தைகளைப் பெற்றதற்காக அழுவதா? அவைகளைப் பிரிந்ததற்கு அழுவதா? பெண்ணாக மாறி எனக்கும் அவனுக்கும் பிறந்த குழந்தைகளை நினைத்து அழுவதா? பிரிந்த மனைவிக்கு அழுவதா? ஒன்றும் புரியாமல் மாயையில் மூழ்கி வருத்தத்துடன் கூக்குரலிட்டு அழுதேன். எனது நிலையைக் கேட்டு சிரித்துக்கொண்டே அங்கு வந்த கண்ணபிரான் அக்குளத் தில் மீண்டும் மூழ்குமாறு என்னிடம் கூறினர். நானும் அவ்வாறே மூழ்கினேன். மூழ்கி எழுந்தவுடன் நான் பழையபடி நாரதன் ஆனேன். மாயையை நீக்கி முன்போல் ஞானியானேன்.

இப்படி நான் பெருந்துன்பப்பட்டிருப்பதால், மாயையை வெல்வது எளிதன்று என்னும் உண்மையை உணர்ந்தேன்.

இவ்வாறு நாரதர் மாயையால் தாம் பட்ட பாட்டை இந்திரனுக்குக் கூறினர்.

முனிவர்களையே மயக்கும் இந்த மாயை நம்மீது படாதிருப்பதற்கு ஒருவழி உண்டு என்று ஸ்ரீ வித்யா உபாசகர்கள் உரைத் துள்ளனர். அந்த ஒரே வழி, அடியிற்காணும் சுலோகத்தைப் பாராயணம் செய்வதுதான். ஸ்ரீ வித்யா உபாசகர்கள் அந்த

சுலோகத்தைப் பாராயணம் செய்துவருகிறார்கள் நாமும் அவ்வாறு செய்வோமாக, இதோ இருக்கிறது, சுலோகம் :

" ப்ரஸீத விச்வேச்வரி விச்வப் ரஸீதே
ப்ரஸீத விச்வேச்வரி வேதரூ பிணி
ப்ரஸீத மாயாமயி மந்த்ர விக்ரஹே
ப்ரஸீத ஸர்வேச்வரி ஸர்வ ரூபிணி. "

---

## 18. சோதனைகளில் வெற்றியும் சீரிய தாம்பத்ய வாழ்க்கையும் பெற

### ஸுகன்யோபாக்கியானம்

சூரிய குலத்தில் சர்யாதி என்னும் ஒரு மன்னன் தோன்றி நாட்டை முறைப்படி ஆண்டு வந்தான். அவனுக்கு மனைவியர் 4000 பேர்கள் இருந்தும் ஒரு குழந்தைகூடப் பிறக்கவில்லை. அதனால் வருந்திய மன்னன், ஸ்ரீ பராசக்தியான அம்பிகையை உருக்கமாக வேண்டிப் பிரார்த்தித்தான். அதன் பயனாக அவனுக்கு ஒரே ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதுபற்றி அவன் பெருமகிழ்ச்சி அடைந்தான்; விழாக்கள் பல செய்தான்; குழந்தைக்குச் சுகன்யை என்னும் அழகிய பெயரைச் சூட்டினான். சுகன்யை ஸ்ரீ லலிதா தேவியின் அருளால் நன்கு வளர்ந்து மணப் பருவத்தை அடைந்தாள்.

சர்யாதி தன் மகளுக்கு நல்ல கணவன் வாய்க்கவேண்டும் என்று அன்னை பவானியை வேண்டிவந்தான். ஒரு முறை அவன் கார்த்திகை மாதத்தில் நெல்லி மரத்தடியில் துர்க்கா பூஜை நடத்துவதற்காகத் தன் பரிவாரத்துடனும், மனைவி, மகள் ஆகியோருடனும் காட்டிற்குச் சென்றான். பூஜை முடிந்ததும் எல்லோரும் தத்தம் விருப்பப்படி உலாவச் சென்றனர். சுகன்யையும் தன்னுடைய தோழியருடன் உலாவச் சென்றாள்.

அங்கே ஸ்ரீ தேவீ உபாசகரான சியவன முனிவர் அம்பிகையைக் குறிந்து நெடுங்காலமாகத் தவம் செய்துகொண்டிருந்தார். நீண்ட காலமாக ஒரே பீடத்தில் அமர்ந்திருந்ததால் அவரைச் சுற்றிலும் மேலும் கீழும் புற்று கிளம்பி மறைந்துவிட்டது. ஆனால் கூர்ந்து நோக்குவோருக்கு அவருடையகண்கள் மட்டும் ஒளியுடன் உள்ளே தெரிந்தன. இயற்கையியேயே சுறுசுறுப்பும், குறும்புத் தன்மையும் பெற்றிருந்த சுகன்யை, குச்சி ஒன்றை எடுத்து, புற்றில் அமைந்திருந்த துவாரத்தின் வழியாக உள்ளே தெரிந்த ஒளி மிக்க கண்களை அறியாமையால் குத்திவிட்டாள். அதனால்

முனிவருடைய கண்கள் இரண்டும் குருடாகிவிட்டன. அவர் வ தாங்கமாட்டாமல், 'ஹே மாதா' என்று குரல் எழுப்பினார். பு விருந்து ஓசை எழும்பியதும் உண்மை உணராத சுகன்யையு தோழியரும் அஞ்சி ஓடிவிட்டனர்.

இவ்வாறு அந்தத் தவமுனிவருக்கு இழைக்கப்பெற்ற அ சாரத்தினால் அங்கிருந்த எல்லோருக்கும் மலஜல விசர்ஜ செய்யமுடியாமல் போய்விட்டது. இதனால் எல்லோருடை வயிறுகளும் பருத்துவிட்டன. யாவரும் பெருந்துன்பம் அடை தனர். முனிவர் தவம் செய்து வந்த செய்தியையும் அவருக் இழைக்கப்பெற்ற அபசாரத்தினாலேயே எல்லோருக்கும் அ தகைய துன்பம் வந்துற்றது என்னும் செய்தியையும் பெரிய களின் வாயிலாகக் கேட்டறிந்த மன்னன் விரைந்து சென் புற்றைக் கலைத்தான்; இழைக்கப்பெற்ற தீங்கினை உணர்ந்தான் தன் மகளே அத்தகைய தீங்கைச் செய்தவள் என்று அறிந்து, அ மகளுடன் முனிவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங் மன்னிப்புக் கேட்டான்.

முனிவர் அரசனை நோக்கி, 'அரசே, நானோ முதிய இப்பொழுது குருடனும் ஆகிவிட்டேன். உன் மகளை நீ எனக் மனைவியாக்கினால், உங்களைப் பற்றியிருக்கும் சாபம் நீங்கு நீங்கள் யாவரும் சுகம் அடைவீர்கள்' என்றார். அதைக் கேட் மன்னன் மயங்கி விழுந்தான். பின்பு அவன் தெளிந்து எழுந் 'நம் குழந்தையின் அழகும், இளமையும், வயதும், செல்வ எங்கே! கிழத்தனமும், குரூரமும் ஏழ்மையும் கொண்ட இ எங்கே! இருவருக்கும் எப்படித் திருமணம் செய்விப்பது? எ செய்வது?' என்று நினைந்து வருந்தினான்.

அப்பொழுது சுகன்யை தன் தந்தையிடம் வந்து, 'அப்ப வருந்தாதீர்கள். தவறு செய்தவள் நான். அதற்கேற்ற தண் டனையை நான் அடையத்தான் வேண்டும். நான் இந்த முனிவரு வாழ்க்கைப்படுகிறேன். என் வாழ்க்கையைப்பற்றித் தாங்க கவலைப்படவேண்டாம். நான் தெளிந்த மனத்துடனேயே இ முடிவுக்கு வந்திருக்கிறேன். எதையும் தாங்கும் மனவுறு எனக்கு உண்டு. நான் இந்த முனிவரின் பத்தினியாக இருப்பேன்' என்று துணிவுடன் கூறினாள். வேறு வழி புலப்ப மையால் மன்னன் தன் அருமை மகளை அந்த முனிவருக் திருமணம் செய்துகொடுத்தான். திருமணம் முடிந்தவுட அங்கிருந்தோரைப் பற்றியிருந்த சாபமும் நீங்கியது. தா தன் பெண்ணைப் படுகுழியில் தள்ளிவிட்டதாகக் கருதிய மன் னும் வருத்தத்துடன் தன் இருப்பிடம் சேர்ந்தான்.

சுகன்யை தன்னை ஒரு ரிஷி பத்தினியாகக் கருதினாள். முனி களுடைய நடை, உடை பாவனைகளைப் பின்பற்றி ஒழுகின

யாவ வியந்து புகழும்படி தன் கணவராகிய முனிவருக்கு முழு
மன ன் பணிவிடைகள் செய்து வந்தாள். சியவன முனிவர்
அவ பலவிதங்களில் சோதனை செய்து பார்த்தார். ஆனால்,
சுக அச்சோதனைகளில் எல்லாம் வெற்றி பெற்று சாணை
...ணியாக மாசில்லா மாணிக்கமாகத் திகழ்ந்தாள்.

ஒ விதமாகச் சுகன்யையைச் சோதித்துப் பார்த்த பின்னரும்,
உண முடிவாக ஒரு பெருஞ் சோதனை நடத்த விரும்பினர்.
அலைந் அவர் அசுவினி தேவதைகளை நினைத்தார். தேவதைகள்
புட்டியும் வந்து, நீராடச் சென்ற சுகன்யையை அழைத்தனர்.
நமக்க அவர்களைத் தன் ஆசிரமத்துக்கு விருந்துண்ண அழைத்
இவர அசுவினி தேவதைகளும் ஆசிரமத்தை அடைந்து, சியவனர்
யாகு லயிலேயே தம்மை மணக்கும்படி சுகன்யையை வேண்
டினர். சுகன்யை தன் கணவரின் முகத்தை நோக்கினாள்.
அப்போது மூவரும் ஒரே வடிவத்தோடு காட்சி அளித்தனர்.
கற்பிற்சிறந்த சுகன்யை, ஸ்ரீ அம்பிகையைத் தியானித்தவாறே மலர்
மாலையை எடுத்து வீசினாள். அம்மாலை உண்மைச் சியவனரின்
கழுத்திலேயே விழுந்தது. அசுவினித் தேவதைகள் அதைக் கண்டு
மகிழ்ந்து, சியவனரை இளைஞராக ஆக்கி, அவருடைய கண்களை
யும் குணப்படுத்திச் சென்றனர். சியவனரும், அசுவினி தேவதை
களுக்கு யாகத்தில் அவிர்ப்பாகம் தருவதாகக் கூறி, அவர்களைத்
தொழுதார். அசுவினி தேவதைகள் தம் இருப்பிடம் சென்றனர்.

பல்லாண்டுகளுக்குப் பிறகு ஒரு நாள், சுகன்யையின் தந்தை
யாகிய சர்யாதி மன்னன் தன் மகளைக் காணும் ஆர்வத்தோடு
அங்கு வந்தான். ஆசிரமத்துக்கு நெடுந்தூரத்தில் வரும்பொழுதே
கண்டான். தன் மகள் கற்பிழந்தவள் என்று கருதி மயங்கி
வீழ்ந்தான். தன்னைக் காணவந்த தந்தை மயங்கி விழுந்
ததைக் கண்ட சுகன்யை விரைந்தோடினாள். தந்தை மயங்கி
விழுந்ததற்குரிய காரணத்தை ஊகித்து உணர்ந்தாள்; தந்தை
யின் மயக்கத்தைத் தெளியவைத்தாள்; நிகழ்ந்தவற்றையெல்
லாம் விரிவாக அவனுக்குக் கூறினாள். உண்மையை உணர்ந்த
மன்னன் களிப்புக் கடலில் மூழ்கினான்; முனிவரின் கால்களில்
வீழ்ந்து நாட்டிற்கு வருமாறு அழைத்தான். அவரும் அதற்கு
உடன்பட்டு, அரசனுடன் அவனது நாட்டிற்குச் சென்றார்.

அந்நாட்டில் சியவன முனிவர் மன்னனைக் கொண்டு ஸ்ரீ தேவீ
சம்பந்தமான யாகம் ஒன்றைச் செய்வித்து, அந்த யாகத்தில்
அசுவினி தேவர்களுக்கு அவிர்ப்பாகம் தந்தார்; அதைத் தடுத்த
இந்திரனுக்கும் தண்டனை கொடுத்தார்.

சியவன முனிவரும் சுகன்யையும் ஜகன்மாதாவின் தனிப்
பெருபாசர்களாக விளங்கி நாள்தோறும் ஸ்ரீ தேவீ பூஜை நடத்தி,

தேவியின் திருக்கதையைப் பலருக்கும் சொல்லிக்கொண்டு நெடுங்காலம் வாழ்ந்தனர்.

---

# 19. பாவம் நீங்க

## திரிசங்கு உபாக்கி

சூரிய குலத்து அரசர்களுள் ஒருவன் அருணன்; அவனுக்கு சத்தியவிரதன் என்னும் மகன் பிறந்தான். விதிவசத்தால் மந்த புத்தியுடையவனாயும், பேராசை கொண்டவனாயும் தான். அவனால் நாட்டு மக்களுக்கும் பல தீமைகள் உண்டாயின. எனினும் அரசகுமாரன் என்பதால் மக்கள் அரசனிடம் எதுவும் கூறாமல் பொறுத்துக்கொண்டிருந்தனர். ஒரு நாள் ஒரு பிராமணன் வீட்டில் திருமணம் நடைபெற்றது. அந்த மணப் பெண்ணைச் சத்தியவிரதன் பலாத்காரம் செய்தான். இதைக் கேள்வியுற்ற அரசன், கடுங்கோபங்கொண்டு, தன் மகன் என்றும் பாராமல், நீதிமுறைப்படி அவனைத் தன் நாட்டை விட்டு வெளியேற்றி, சக்கிலிப்பாளையத்தில் வசிக்கும்படி செய்தான். அங்கே சத்திய விரதன் அம்பைக் கையில் கொண்டு வசித்து வந்தான். அரசனுடைய குலகுரு வசிஷ்டர். அவர்மீது சத்தியவிரதனுக்குக் கடுங்கோபம் உண்டாயிற்று. தன் தந்தையின் செயலை அவர் தடுத்து நிறுத்தவில்லையே என்பது தான் அவனுடைய கோபத்துக்குக் காரணம்.

அருணன் நல்ல ஒரு புதல்வனைப் பெறுவதற்காகத் தவம் செய்ய விரும்பிக் காட்டை அடைந்தான். அவனது நாட்டில் பன்னிரண்டு ஆண்டுகள் மழையே பெய்யவில்லை. அதனால் நாடு முழுவதும் பஞ்சம் தலைவிரித்தாடியது. அந்த நாட்டில் கௌசிகர் என்னும் முனிவர் வாழ்ந்து வந்தார். அவரால் அந்தப் பஞ்சத்தில் தம் மனைவியையும், மக்கள் பலரையும் காப்பாற்றமுடியவில்லை. அதனால் அம்முனிவர் அவர்களை நாட்டிலேயே விடுத்துத் தவம் புரியச் சென்றுவிட்டார்.

கௌசிக முனிவரின் மனைவியோ தன் குழந்தைகளைக் காப்பாற்ற வழியறியாமல் தவித்தாள். அந்நிலையில், அக்குழந்தைகளில் ஒன்றை விற்றுவது ஏனையக் குழந்தைகளைக் காப்பாற்றலாம் என்னும் எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று. அதன்படியே அவள் தன் குழந்தைகளுள் ஒன்றைக் கயிற்றில் கட்டி, அதை விற்பதற்காக இழுத்துச் சென்றாள். அக்குழந்தை பெருங்குரலில்

...து. குழந்தையின் அழுகுரலைக் கேட்டு, சக்கிலிப்பாளையத் ...ாழ்ந்து வந்த சத்தியவிரதன் வெளியில் வந்தான்; முனிவரது ...யிடமிருந்து செய்தியை அறிந்தான்; தானே எல்லாக் ...தைகளையும் ரிஷிபத்தினியையும் காப்பாற்றுவதாக ஒப்புக் ...டான்; அதன்படியே காப்பாற்றியும் வந்தான்.

ஒரு நாள் சத்தியவிரதனுக்கு உணவு ஏதும் கிடைக்கவில்லை. உணவுக்காக அவன் பல இடங்களில் அலைந்தான். அலைந்தவனுடைய கண்ணில் வசிஷ்டர் ஆசிரமத்தில் கட்டப் புட்டிருந்த பசு தென்பட்டது. அவன், 'இந்த வசிஷ்ட முனிவர் நமக்காக நம் தந்தையிடம் பரிந்து பேசவில்லை. அதற்காக இவரது பசுவைக் "கொன்றுவிடுவதே" இதற்குத் தக்க தண்டனை யாகும்' என்று எண்ணி, அவ்வாறே அப்பசுவைத் திருடிச் சென்று அதைக் கொன்று, அந்த மாமிசத்தைக் குழந்தைகளுக்குக் கொடுத்துத் தானும் உண்டான். பசு மாமிசம் என்பதை அறியா மல் யாவரும் அதை உண்டுவிட்டனர்.

நிகழ்ந்ததை அறிந்த வசிஷ்ட முனிவர் கடுஞ்சீற்றம் கொண்டு 'அடா மூடா, பிராம்மண புத்தினியை அபகரித்தாய்; தந்தையின் கோபத்திற்கு ஆளானாய்; இன்று பசுவையும் கொன்றாய். உனக்கு மூன்று கொம்புகள் முளைப்பதாக; பயங்கரமாக பிராணிபோலத் திரிவாயாக' என்று சத்தியவிரதனுக்கு சாபம் கொடுத்தார். அவ் வளவில் அவனுக்கு மூன்று கொம்புகள் முளைத்தன. அன்று முதல் அவனை யாவரும் திரிசங்கு என்று பெயரிட்டு அழைக்கலாயினர்.

மூன்று கொம்புகளைப் பெற்ற திரிசங்கு பெருந்துன்பம் அடைந்து அங்குமிங்கும் அலைந்தான். அப்பொழுது அவன் தனது நல்வினைப் பயனால் ஒரு முனிவரை அணுகினான். அவர் அவனுக் கும் காமபீஜ மந்திரத்தை உபதேசித்தார். திரிசங்கும் அன்று முதல் விடாமல் அம்மந்திரத்தை ஜபித்துவந்தான். ஜபம் ஏற ஏற அவனது பாவம் குறைந்து வந்தது. இதற்குள்ளாக நாட்டில் அவரது தந்தை இறக்கும் நிலையில் உள்ளார் என்று செய்தி வந்தது. உடனே அவன் தன் தந்தையைச் சென்று கண்டான். தந்தை அம்மகனை அருகில் அழைத்துச் சிறந்த அறிவுரைகளைக் கூறிவிட்டு இறந்துபோனான்.

திரிசங்கு தன் தந்தையின் அறிவுரைகளின்படியே நடக்க லானான். அவன் விடாமல் அம்பிகையின் ஜபத்தைச் செய்து கொண்டு, பகவதி பூஜையைச் செய்து வந்தான். இவற்றின் பய னாக திரிசங்குவின் கோர உருவம் நீங்கியது. அவன் பழைய படியே தனது அழகான முகத்தைப் பெற்று விளங்கினான்.

நாட்கள் பல சென்றன. திரிசங்கு தனது ராஜ்யத்தைத் தன் மகனாகிய அரிச்சந்திரனுக்கு அளித்துவிட்டு, தான் தன் சரீரத்துடன்

சுவர்க்கம் செல்ல விரும்பினன். எனவே, அவன் வசிஷ்டரிடம் தன் விருப்பத்தை விண்ணப்பித்துக்கொண்டான். அம்முனிவர் அவனைப் பார்த்து, ‘இவ்வுடலுடன் சுவர்க்கம் போவது முடியாத காரியம். அதனால் நன்மையும் உண்டாகாது’ என்று மறுத்துவிட்டார். அது கேட்ட திரிசங்கு, ‘குருவே, நெடுங்காலமாகவே தங்களுக்கு எண்ணிடம் நல்ல எண்ணமில்லை. நான் மற்றொருவரை நாடி, என் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறேன்’ என்றான். அவ்வுரை கேட்ட வசிஷ்டர் சினந்து சண்டாளன் ஆகும்படி அவனைச் சபித்தார். திரிசங்குவும் உடனே சண்டாளனாக மாறி விட்டான். அதனால் திரிசங்கு வெட்கமும் துக்கமும் அடைந்து நாட்டைவிட்டு வெளியேற முற்பட்டான். அப்பொழுது அவனுடைய மைந்தனாகிய அரிச்சந்திரன், ஏதேனும் அதற்குப் பரிகாரம் செய்யலாம் என்று கூறித் தன் தந்தையைத் தடுத்து நிறுத்திப் பார்த்தான். ஆனால் திரிசங்குவோ, அதற்கு இசை யாமல், அரிச்சந்திரனுக்கு முடிசூட்டுமாறு தன் மந்திரிகளுக்குக் கூறிவிட்டுக் காடு சென்றான்.

இந்நிலையில் தவத்தை முடித்துத் திரும்பினர் கோசிக முனிவர். தம் குழந்தைகளையும், மனைவியையும் பஞ்சகாலத்தில் சத்திய விரதனாகிய திரிசங்குவே காப்பாற்றினன் என்பதை அம்முனிவர் தனது மனைவியிடமிருந்து அறிந்தார். அவருக்குத் திரிசங்குவி னிடம் மதிப்பு உண்டாயிற்று. அவர் திரிசங்குவை அழைத்து, நன்றியறிதல் உணர்ச்சியுடன், ‘உனக்கு என்ன வேண்டும் கேள்! தருகிறேன்’ என்றார். உடனே திரிசங்கு ‘முனிசிரேஷ்டரே, நான் சுவர்க்கத்தை அடைய விரும்புகிறேன்’ என்று கூறினன்.

திரிசங்குவின் வேண்டுகோளைக் கேட்ட கோசிகர் உடனே ஒரு யாகத்தைத் தொடங்கி, அவனைச் சுவர்க்கத்திற்கு அனுப்ப முயன்றார். ஆனல், அவர் விருப்பப்படி திரிசங்குவைச் சுவர்க்கத் திற்கு அனுப்பமுடியவில்லை. எனினும், முனிவர் தளரவில்லை அவர் ‘என் தவம் முழுவதையும் இழந்தாலும் கவலையில்லை. இவனைச் சுவர்க்கத்தில் ஏற்றியே தீருவேன்’ என்று உறுதி கொண்டார்; வானத்தில் தனியே ஓரிடத்தை சுவர்க்கமாகத் தம் தவ வலிமையால் படைத்தார்; திரிசங்குவை அந்த இடத் தில் இருக்கச் செய்தார். திரிசங்குவும் அவ்விடத்திலேயே இருந்து புகழ் பெற்றான்.

———

## அரிச்சந்திர உபாக்கியானம்

தன் தந்தையாகிய திரிசங்கு கோசிகர் என்னும் விசுவாமித்திரரது அருளால் தனியாக அமைந்த சுவர்க்கத்தில் இருக்கிருர் என்று அறிந்த அரிச்சந்திரன் மகிழ்ச்சியுடன் தன் அரசியலை நடத்திவந்தான். அவனது மனைவியான சந்திரமதி தன் பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையாக வாழ்ந்து வந்தாள். அரசன் தனக்குப் புத்திரபாக்கியம் கிட்டாமையால் மனம் வருந்தித் தன் குல குருவாகிய வசிஷ்டரை அணுகி, 'முனிபுங்கவரே, நான் பிள்ளையில்லாப் பாவியாகத்தான் வாழவேண்டுமா?' என்று வருத்தத்துடன் கேட்டான். அதற்கு முனிவர், 'மன்னவ, வருத்தம் வேண்டாம். வருண பகவானைக் குறித்து நீ ஒரு யாகம் செய். அவரது அருளால் ஒரு மகன் பிறப்பான்' என்று கூறினர். அரிச்சந்திரனும், வசிஷ்டரையே ஆசாரியராக வரித்து, வருண பகவானைக் குறித்து மிகவும் சிரத்தையுடன் யாகம் செய்தான்.

யாகம் நிறைவேறிய அளவில், வருண பகவான் தோன்றி, 'அரசனே, உனக்கு நல்ல ஒரு மகனைத் தருகிறேன். ஆனால், பிறந்தவுடன் நீ யாகம் இயற்றி, அவனை எனக்குத் திருப்பி தருதல் வேண்டும்' என்று கூறினர். அரிச்சந்திரனும் வேறு வழியின்றி அதற்கு இசைந்தான்.

நாளடைவில் அரசனின் தேவி கருப்பமுற்ருள். உரிய காலத்தில் அவள் வயிற்றிலிருந்து அழகான ஓர் ஆண் குழந்தை பிறந்தது. மன்னன் மகிழ்ச்சியடைந்தான். குழந்தை பிறந்துவிட்டதை அறிந்த வருண பகவான், அரிச்சந்திரனிடம் வந்து, குழந்தையைத் தனக்குத் தருதற்குரிய யாகத்தைச் செய்யுமாறு சொன்னர். அரசனே, பிள்ளைப் பாசத்தால் வஞ்சனையாக 'குழந்தைக்கு இன்னும் தீட்டுப் போகவில்லை. அவன் தாயும் சுத்தமாகவில்லை. இந்த ஆசௌசம் நீங்கிய பிறகு தருகிறேன்' என்று கூறினன். இப்படியே அன்னப் பிராசனம், கர்ணவேதனம், சூரிய தரிசனம், அப்தபூர்த்தி, சௌளம், உபநயனம் என்பனவற்றைக் காரணம் காட்டி, 'யாகத்துக்கு உரிய பொருள் தூய்மை உடையதாக இருக்கவேண்டும். இவன் இன்னும் தூய்மையைப் பெறவில்லை' என்று சாக்குப் போக்குச் சொல்லி, மன்னவன் வருண பகவானை அனுப்பிக்கொண்டிருந்தான். இறுதியில் வருண பகவான் அரிச்சந்திரன் தம்மை ஏமாற்றுகிருன் என்பதையறிந்து, 'அடுத்த முறை ஸமாவர்த்தனம் முடிந்ததும் கொடுத்துவிடவேண்டும்' என்று கண்டிப்புடன் கூறிவிட்டுச் சென்ருர்.

வருண பகவான் கண்டிப்புடன் கூடிய இம்மொழிகளை அரிச்சந்திரனின் மைந்தனாகிய லோகிதாசன் கேட்டுக்கொண்டிருந்தான். அம்மகன், 'இனி நாம் இங்கிருப்பின் நம் தந்தை நம்மை இவருக்குக் கொடுத்துவிடுவார். இருவரும் அடுத்த முறை என்னை பெறுமல் செல்லமாட்டார். எனவே, நான் எங்கேனும் ஓரிடத்திற்கு ஓடிவிடவேண்டும்' என்று சிந்தித்து, ஒருவரிடமும் கூறாமல் காட்டிற்குள் ஓடி ஒளிந்துவிட்டான்.

தாம் சொல்லிச் சென்றபடியே வருண பகவான் உரிய காலத்தில்' அரிச்சந்திரனிடம் வந்து, புத்திரனைக் கேட்டார். அரிச்சந்திரனே தன் மகன் காணமற் போய்விட்ட செய்தியைக் கூறினன். அது கேட்ட வருண பகவான் வெகுண்டு, 'மன்னனே, உனக்கு ஜலோதரம் என்னும் நோய் உண்டாகக் கடவது' என்று சாபம் கொடுத்து மறைந்துவிட்டார்.

அரிச்சந்திரன் பிள்ளையைப் பிரிந்தும், சாபத்தால் உண்டான நோயினால் பீடிக்கப்பட்டும் மிகத் துன்பமுற்றான். இறுதியாக அவன் முனிவரைக் கலந்து ஆலோசித்து, யாரிடமேனும் ஒரு பிள்ளையை விலைக்கு வாங்கி வருணனுக்குக் கொடுத்து, சாபத்தைப் போக்கிக்கொள்ளலாம் என்று தீர்மானித்தான். விலைக்கு யார் பிள்ளையைத் தருவார்கள் என்று அவன் தேடலானான். அப்பொழுது மூன்று பிள்ளைகளையுடைய ஒரு பிராமணனை அரசன் சந்தித்து, அப்பிள்ளைகளுள் ஒருவனை விலைக்குக் கேட்டான். பிராமணனும் பொருளாசையால் அதற்கு இசைந்து, 'மூத்த பிள்ளை எனக்கு வேண்டும். மற்ற இருவருள் ஒருவனை நீ வாங்கிக் கொள்' என்றான். அதற்குள் அப்பிள்ளைகளின் தாய் குறுக்கிட்டு 'எனக்குக் கடைசிப் பிள்ளையின்மேல் மிகுந்த ஆசை. அவனை விலைக்குத் தரக்கூடாது' என்றாள். எனவே, அந்தப் பிராமணன் தனது நடுப்பிள்ளையை அரசனுக்கு விற்றுவிட்டான்.

அந்த நடுப்பிள்ளையுடன் அரிச்சந்திரன் தனது இருப்பிடத்தை அடைந்து, யாகம் செய்ய முற்பட்டு, பிள்ளையை யூபஸ்தம்பத்தில் கட்டினான். சுனச்சேபன் என்னும் அப்பிள்ளை வாய்விட்டுக் கதறி யழுதான். இரக்கத்திற்குரிய அப்பிள்ளையை வெட்ட யாரும் முன் வரவில்லை. மீண்டும் பணத்தாசையால் அப்பிள்ளையை வெட்ட அவனது தந்தையே முன்வந்தான். இக்கொடிய காட்சியைக் கண்ணுற்ற விசுவாமித்திர முனிவர் மனம் இரங்கி, அப்பிள்ளையை நோக்கி, 'குழந்தாய், அஞ்சாதே. நான் உனக்கு ஒரு மந்திரத்தை உபதேசம் செய்கிறேன். அதனை நீ பல முறை ஜபித்துக் கொண்டே இரு. வருண பகவான் உன்னை விட்டுவிடுவார்' என்று கூறி, அந்த மந்திரத்தை அவனுக்கு உபதேசம் செய்தார்.

யாகம் தொடங்கியது. பிராமண குமாரன் தான் உபதேசம் பெற்ற மந்திரத்தை ஜபித்துக்கொண்டேயிருந்தான். அதனு

மகிழ்ச்சியுற்ற வருண பகவான் அங்குக் காட்சி கொடுத்தார். அரசனது தானத்தைப் பெற்ருர். அச்சிறுவனை விடுதலை செய்து விட்டு மறைந்தார். இந்நிகழ்ச்சியைக் கண்ணுற்ற யாவரும் பெரு மகிழ்ச்சி உற்றனர்.

இவ்வாறு சூதமாமுனிவர் அரிச்சந்திரனுடைய கதையைச் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது, அதைக் கேட்டுக் கொண்டிருந்த முனிவர்களுள் ஒருவர், 'முனி சிரேஷ்டரே, உண்மையில் இந்த பிராமண குமாரனுக்கு யார் தந்தை?' என்று வினவினர். ஏனை முனிவர்களுள் சிலர், "பெற்றவளே தந்தை?" என்றனர். வேறு சிலர் 'வாங்கியவனே தந்தை' என்றனர். சிலர் "வருண பகவானே தந்தை' என்றனர். இவற்றையெல்லாம் கேட்ட சூதமாமுனிவர் அவை யாவும் உண்மை அல்ல. எப்பொழுது பெற்றவன் பணத்துக்குப் பிள்ளையை விற்றுவிட்டானே அப்பொழுது அவன் தந்தையல்லன். எப்பொழுது அரிச்சந்திரன் தான் வாங்கிய பிள்ளையைக் கொல்லத்துணிந்தானே அப்பொழுது அவனும் தந்தையல்லன். வருண பகவான் அச்சிறுவனின் ஜபத்திற்காக மகிழ்ந்து மன்னித்தாரேயன்றி, அருளால் அன்று. ஆதலின் வருண பகவானும் அப்பிள்ளைக்குத் தந்தையல்லர். காரணம் ஏதுமின்றி, அப்பிள்ளையைக் காப்பாற்றிய விசுவாமித்திரரே அப்பிள்ளைக்குத் தந்தையாவார்' என்று எடுத்து வினவினுர். பின்பு அவர் கதையைத் தொடர்ந்து கூறலாயினர்:-

வருண பாவகனுக்குரிய யாகம் இவ்வாறு முடிந்தபிறகு விசுவாமித்திரர் இந்திரலோகம் சென்ருர். காட்டுக்குச் சென்று மறைந்திருந்த லோகிதாசனும் திருப்பிவிட்டான். அரிச்சந்திரன் மிகவும் மகிழ்ச்சியுடன், இராஜசூய யாகம் செய்து, தன் குல குருவான வசிஷ்டருக்கு ஏராளமான சம்பாவனைகள் கொடுத்து மகிழ்ந்தான்.

பிறகு வசிஷ்டரும் இந்திரலோகம் சென்ருர். அங்கு வசிஷ்டர் அரிச்சந்திரனைப் பலவாறு புகழ்ந்து பேசினுர். விசுவாமித்திரர் வசிஷ்டரின் கூற்றை மறுத்தார். இரு முனிவர்களும் நெடுநேரம் வாக்குவாதம் புரிந்தனர். முடிவில் விசுவாமித்திரர், 'அரிச்சந்திரனை நான் பொய்யன் ஆக்குகிறேன்' என்று சபதம் செய்து, பூவுலகம் வந்து சேர்ந்தார்.

இவ்வாறு சபதம் செய்துவிட்டு வந்த விசுவாமித்திரர், அரிச்சந்திரனை அடைந்து, தாம் செய்யும் யாகத்திற்குப் பொருள் தருமாறு கேட்டார். அவன் பெரும் பொருளை அம்முனிவருக்குத் தானமாக வழங்கினுன். முனிவர் அதனைப் பிறகு தேவையான பொழுது பெற்றுக்கொள்வதாகச் சொல்லிச் சென்றுவிட்டார். பிறகு அவர் மற்ருெரு முறை அவனிடம் சென்று அவனது நாட்

டையே தானமாகப் பெற்றார். அதன் பின்னர் அவர், முன் அவன் தமக்கு அளித்து, தாம் பிறகு பெற்றுக்கொள்வதாக சென்ற பொருளைக் கேட்டார். நாட்டினையே தானமாக அளித் பிறகு அவனிடம் பொருள் ஏது ? ஆனால் முனிவர் விடவில் அரிச்சந்திரன் காசி நகரில் தன் பிள்ளையையும், மனைவியையு பிறகு தன்னையும் விற்றுத் தமக்குரிய பொருளைத் தரும் செய்தார். அரிச்சந்திரன் சுடுகாட்டில் பணியாற்றினா இந்நிலையில் லோகிதாசன் பாம்பு தீண்டி இறக்கவே, அவனை சுடுகாட்டில் எரிப்பதற்கு சந்திரமதி வந்தாள். பிணத்தை எ பதற்குப் பொருள் தரும்படி தன் மனைவியையே அரிச்சந்திர வற்புறுத்தினான். அவள் அதற்குரிய பொருளைத் தன் யஜமா னிடம் பெற்று வரச் சென்றபொழுது, வழியில் அரசனுடை ஏவலர் அவள்மீது கொலைப்பழி சுமத்தினர். அதனால் அவளுக் அரசன் மரண தண்டனை விதித்தான்.

தன் மனைவிக்கு விதிக்கப்பட்ட மரணதண்டனையை நிறை வேற்றும் பொறுப்பு அரிச்சந்திரனுக்கே வந்து சேர்ந்தது. த மனைவியைத் தானே வெட்ட நேரும் தீவினைக்கு வருந்திய அரி சந்திரன், தன் வாய்மையைக் காப்பதற்காகத் தன் மனைவி வெட்டக் கைவாளை ஓங்கினான். அப்பொழுது விசுவாமித்தி அங்கே தோன்றி, "அரிச்சந்திரா, உன் மனைவியை ய வெட் தீவினை உனக்கு வந்துவிட்டதே! எனக்கு நீ தந்த நாட்டை 'நா தரவில்லை' என்று சொல்லிவிடு. நான் உன் நாட்டைத் திருப்ப தருகிறேன். உன் மனைவியையும், இறந்த மகனையும், இழ செல்வங்களையும் நீ திரும்ப அடைவாய்.'' என்றார். ஆனால் அ சந்திரன் அம்முனிவரை நோக்கி, "முனிவரே, எல்லாவற்றை இழந்ததற்கும் நான் கவலைப்படவில்லை. எது நேர்ந்தாலும் நா பொறுத்துக்கொள்வேன். ஆனால், என் வாய்மையை மட்டும் நா இழக்கமாட்டேன். வாய்மையைக் காப்பதற்காக என் மனை இறந்தாலும் துக்கப்படமாட்டே ன்'' என்று சொல்லித் தன் மனை யின்மீது வாளை வீசினான்.

என்னே வியப்பு! அரிச்சந்திரன் வீசிய வாள் அவனது மனை யாகிய சந்திரமதியின் கழுத்தில் மலர் மாலையாக மாறி விழுந்த தேவர்கள் யாவரும் அங்குக் காட்சிக் கொடுத்தனர். அரிச்ச ரனைப் போற்றி அவனுக்கு ஆயுள், ஆரோக்கியம், பலம், புகழ், அ செல்வம் முதலியவற்றையும் கொடுத்து வாழ்த்துக் கூறிச் செ றனர். குலகுருவான வசிஷ்டர் அரிச்சந்திரனை வாயார வா தினார். அந்நிலையில் விசுவாமித்திரர், 'எனது சோதனையால் அ சந்திரன் புடமிட்ட பொன்போல் ஒளிவிடுகிறான்' என்று சொல் அவனை வாழ்த்திச் சென்றார்.

மகனாகிய லோகிதாசனோடும், மனைவியாகிய சந்திரமதியோ டும் அரிச்சந்திரன் நெடுங்காலம் உண்மை நெறியில் நி

தனது நாட்டை ஆண்டு வந்தான். இத்தனை மங்களத்திற்கும் காரணம் காசித்தலத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் விசாலாக்ஷியம்மையே ஆவார் என்பதை அரிச்சந்திரன் பெரியோர்களின் வாயிலாக உணர்ந்தான். எனவே, அவன் விசாலாக்ஷியம்மைக்கு நித்ய, பக்ஷ, மாச, பிரம்மோத்ஸவங்களை நடத்தி மகிழ்ந்தான்.

---

# 21. ஸகல ஸௌபாக்யங்களும் பெற

## ஸ்ரீ தேவீ பூஜை

ஸ்ரீ ஜகதாம்பிகை அன்னையைப் பூஜை செய்வதற்குப் பல வகைப்பட்ட முறைகள் சொல்லப்பெற்றிருக்கின்றன. நாம் நம்மால் முடிந்தவரையில் பெரியோர் காட்டும் முறையில் பூஜை செய்யலாம். சுக்கிலபக்ஷப் பிரதமை முதல் பூர்ணிமை வரையில் சொல்லப்பட்டிருக்கும் முறையைப் பின்பற்றினால் நிச்சயமாகப் பலன் கிடைக்கும். ஒவ்வொரு மாதத்திலும் பூஜை செய்கின்ற உபாசகர்கள் தேவியை அடியிற்காணும் வடிவங்களில் அலங்காரம் செய்தோ மனத்தில் இருத்தியோ பூஜை செய்வார்களாக :—

| | மாதம் | அன்னையின் வடிவம் | நிவேதனப் பொருள் |
|---|---|---|---|
| 1. | சித்திரை | மங்களா | பலாப்பழம் |
| 2. | வைகாசி | வைஷ்ணவீ | மாம்பழம் |
| 3. | ஆனி | மாயா | வாழைப்பழம் |
| 4. | ஆடி | காலராத்ரி | கொய்யாப்பழம் |
| 5. | ஆவணி | துரத்யயா | நாவல்பழம் |
| 6. | புரட்டாசி | மகாமாயா | நாரணம் |
| 7. | ஐப்பசி | மாதங்கி | மாதுளை |
| 8. | கார்த்திகை | காளி | பேரீச்சம்பழம் |
| 9. | மார்கழி | கமலாசனி | வெண் பொங்கல் |
| 10. | தை | சிவா | இளந்தேங்காய் |
| 11. | மாசி | ஸஹஸ்ரசரணா | வடை |
| 12. | பங்குனி | ஸர்வமங்களரூபிணி | அதிரசம் |

இந்த முறைப்படி நிவேதனம் செய்யவேண்டும். ஒவ்வொரு நாள் பூஜையிலும் "ஹே காமாக்ஷி, ஹே சங்கரி, ஹே காம்யரூபா, கருணாகரி, கங்காதரி, மீனாக்ஷி, விசாலாக்ஷி, மாதா, சிவா,



ஸ்ரீ அம்பாள்
கன்னியாகுமரி

மம மங்களம் தேஹி" என்று அழைத்து உருக்கமாகப் பிரார்த்தனை செய்யவேண்டும். நமது பூஜை மிகச் சிறியது என்ற எண்ணம் வளரவேண்டும்.

திதிகளில் கீழ்க்காணும் விதத்தில் நிவேதனம் செய்தால் கிடைக்கக்கூடிய பலன்கள் பின்வருமாறு சொல்லப்படுகின்றன :—

| திதி | நிவேதனப் பொருள் | கிடைக்கும் பலன் |
|---|---|---|
| 1. பிரதமை | நெய் | ரோக நிவர்த்தி |
| 2. துவிதியை | சர்க்கரை | ஆயுள் விருத்தி |
| 3. திருதியை | பால் | துக்க நிவர்த்தி |
| 4. சதுர்த்தி | பழம் | புத்தி வளர்ச்சி |
| 5. பஞ்சமி | பட்சணம் | விக்ன நிவர்த்தி |
| 6. சஷ்டி | தேன் | ஞாபக சக்தி |
| 7. ஸப்தமி | வெல்லம் | தேக காந்தி |
| 8. அஷ்டமி | இளந்தேங்காய் | குளிர்ச்சி |
| 9. நவமி | பொரி | இகத்தில் சுகம் |
| 10. தசமி | ரஸான்னம் | கிரகப்பீடை நிவர்த்தி |
| 11. ஏகாதசி | சத்துமா | முனிவர் அனுக்ரஹம் |
| 12. துவாதசி | பாயசம் | விஷ்ணுவின் அருள் |
| 13. திரயோதசி | அவல் | அம்பாள் பிரீதி |
| 14. சதுர்த்தசி | கடலை | வீர்ய விருத்தி |
| 15. பூர்ணிமை | தயிர் சாதம் | ஞான வளர்ச்சி |

மேற்காட்டியவற்றைச் சிலர் முன் பின்னாக மாற்றிக் கூறுவர். ஆசாரமே பிரதானமாதலின், வீட்டு வழக்கத்தையோ பெரியோர் சொற்களையோ பின்பற்றுக.

கிழமைகள்தோறும் அன்னைக்கு உகந்த நிவேதனங்களைச் செய்து வழிபடுவதும் சிறந்தது. அவை வருமாறு :—

| கிழமை | நிவேதனப் பொருள் |
|---|---|
| 1. ஞாயிறு | சர்க்கரைப் பொங்கல் |
| 2. திங்கள் | பால் சாதம் |
| 3. செவ்வாய் | வெண் பொங்கல் |
| 4. புதன் | சாகான்னம் (கதம்பம்) |
| 5. வியாழன் | ஹரித்ரான்னம் (எலுமிச்சம்பழ அன்னம்) |
| 6. வெள்ளி | பால் பாயசம் |
| 7. சனி | திந்திரிணி அன்னம் அல்லது நாளிகேரான்னம் (புளியோதனம் அல்லது தேங்காய்ச் சாதம்) |

அம்பாளுக்குத் திலான்னம் நிவேதனம் செய்வது வழக்கமன்று.

ஜகதன்னையை நட்சத்திரங்களைக் கொண்டு பல் பட்சணங்களுடன் பூஜை செய்வதும் உண்டு. அந்த வி வருமாறு :—

| நட்சத்திரம் | | நிவேதனப் பொருள் |
|---|---|---|
| 1. | அச்வதி | முறுக்கு (சஷ்குலி) |
| 2. | பரணி | அப்பம் (அபூபம்) |
| 3. | கார்த்திகை | வடை (மாஷாபூபம்) |
| 4. | ரோகிணி | ஜிலேபி (மதுசக்ரம்) |
| 5. | மிருகசீரிஷம் | ஹல்வா (கிருதபூரகம்) |
| 6. | திருவாதிரை | பொரி (லாஜம்) |
| 7. | புனர்பூசம் | பாயசம் |
| 8. | பூசம் | |
| 9. | ஆயில்யம் | லட்டு (லட்டுகம்) |
| 10. | மகம் | அதிரஸம் (குளாபூபம்) |
| 11. | பூரம் | தயிர்க்கட்டி (ததிகூர்ச்சம்) |
| 12. | உத்திரம் | இலைவடகம் (வடபக்ரம்) |
| 13. | ஹஸ்தம் | தேன்கூட்டு (மதுசூரணம்) |
| 14. | சித்திரை | பழரஸம் (மதிரா) |
| 15. | சுவாதி | தயிரேடு (ததிரஸம்) |
| 16. | விசாகம் | வெண்ணெய் (நவநீதம்) |
| 17. | அனுஷம் | பாஸந்தி (கிலாடம்) |
| 18. | கேட்டை | திரட்டுப்பால் (க்ஷீரலட்டுகம்) |
| 19. | மூலம் | மிளகு வடை (மரிசஅபூபம்) |
| 20. | பூராடம் | பேரீச்சம்பழம் (கர்ஜூரி) |
| 21. | உத்திராடம் | கொழுக்கட்டை (மோதகம்) |
| 22. | திருவோணம் | இட்லி (பலிகரம்பம்) |
| 23. | அவிட்டம் | தோசை (தண்டுல சக்ரம்) |
| 24. | சதயம் | அவியல் (சாகா பூர்ணம்) |
| 25. | பூரட்டாதி | வறுவல் (சுஷ்க சாகம்) |
| 26. | உத்திரட்டாதி | அவல் (தர்ப்பணம்) |
| 27. | ரேவதி | கருப்பஞ்சாறு (இக்ஷுஸாரம்) |

இந்த முறைப்படி உபாசகர்கள் நியாயமான பொ விரும்பி, தகுந்த முறையில், ஆசார நியமத்துடன் பூ செய்தால் வேண்டியதைப் பெற்று மகிழ்ச்சியுடன் வாழலாம்.

———

# 22. மாங்கல்ய பலம் பெற, கன்னிப் பெண்களுக்குக் கல்யாணம் நடக்க

**பஞ்ச சக்திகள்**

சக்தி ஒருத்தியே. ஆனால், உலகில் வாழும் ஜீவகோடிகள் ...வதற்காக அந்தச் சக்தி ஐந்து பெரிய உருவங்களாகப் பிரிந்து ...மை அளிக்கின்றார்கள். அத்தகைய உருவங்கள் முறையே ...) ஸ்ரீ துர்க்கா தேவி, (2) ஸ்ரீ லக்ஷ்மீ தேவி, (3) ஸ்ரீ சரஸ்வதி தேவி ...) ஸ்ரீசாவித்திரி தேவி (5) ஸ்ரீராதா தேவி என்று அழைக்கப்படும். ...த்தகைய ஐந்து உருவங்களின் இயல்புகளையும், அளிக்கும் ...ன்மைகளையும் கீழே விளக்குவோம் :—

## 1. ஸ்ரீ துர்க்கா தேவி

அன்பர்களுக்கு அருள் புரியும்பொருட்டுக் கணேசனுக்குத் ...யாக விளங்குகிறாள். சிவபிரான் காதலியாகவும், விஷ்ணுவின் ...யையாகவும், பூரண பிரம்ம ஸ்வரூபிணியாகவும், பற்றினவரைப் ...துகாக்கும் தேவியாகவும், வேண்டிய யாவும் வழங்கும் அன்னை ...கவும்,ஸித்தர்களின் தலைவியாகவும் இருப்பவள் இப்பெருமாட்டி. ...், தாகம், ஒளி, சோம்பல், தயை, கருத்து, சாதி, பொறுமை, ...மை, ஞானம், மகிழ்ச்சி செல்வம், வீரம், மாயை ஆகியவற்றிற்கு ...திதேவதை இவளே. கிருஷ்ணசிருதையாகவும், நாராயணியாக ...வும் காட்சியளிப்பவள் இப்பெருமாட்டி.

## 2. ஸ்ரீ லக்ஷ்மீ தேவி

சுத்த சத்துவ உருவம் உடையவள். எல்லாச் செல்வங்களும் ...டையவள். அவற்றுக்கெல்லாம் தலைவி,சர்வமங்களை, திருமாலின் ...ன்புக்குரியவள், கற்பிற் சிறந்தவள் ஆகிய இப்பிராட்டி சுவர்க்க ...க்ஷ்மி, ராஜலக்ஷ்மி, கிருகலக்ஷ்மி, சோபாலக்ஷ்மி, ப்ருத்விலக்ஷ்மி, ...ந்தானலக்ஷ்மி, தயாலக்ஷ்மி, ஆனந்தலக்ஷ்மி என்று எண் வேறு ...வினளாகவும் போற்றப் பெறுகின்றாள்.

## 3. ஸ்ரீ சரஸ்வதி தேவி

தூய ஆடை அணிந்து, புத்தி, கல்வி, வாக்கு ஆகியவைகளுக் ...க் தலைவியாய், வீணை ஏந்திய கையளாய் வெண்தாமரையில் ...ழுந்தருளி, தன்னைப் போற்றுபவர்களின் அறியாமையை ஒழிப்ப ...ன் இத்தேவி. இவள் பிரம்மாவின் அன்புக்கு உரியவள்;

இசையின் தலைவி ; சாஸ்திர ஆராய்ச்சிக்கு விற்பன்னை ; எல்லா தொழில்களுக்கும் தலைவி ; பரிமளமான பச்சைக்கற்பூரம் போன்ற தேககாந்தி உடையவள் ; சச்சிதானந்த வடிவுடையவள் ; கிருஷ்ண பரமாத்மாவை ரத்தினங்களால் பூசிக்கின்றவள். இந்தப் பிராட்டி தன்னை அடைந்தவருடைய அஞ்ஞானத்தை அகற்றுபவளாக காட்சி அளிக்கின்றாள்.

## 4. ஸ்ரீ சாவித்திரி தேவி

பிராம்மணர் முதலியோர் ஸந்தியாவந்தனம் செய்யும்பொழு பிரத்தியக்ஷ தேவதையாகவும், வேதத்தின் உட்பொருளாகவு சுத்த ஸத்வ மூர்த்தியாகவும், காயத்ரி சாவித்ரி தேவதையாகவு ஆனந்த ஸ்வரூபியாகவும், எண்ணிய அளவில் விரும்பத்தக் வடிவம் கொள்பவளாகவும், ஸமஸ்த கல்யாண பரம்பல அளிப்பளாகவும், யோகிகளது உபாசனையில் சுழிமுனை நா சூடேறுமல் காப்பாற்றுபவளாகவும், பிரம்ம தேஜசுடன் கூடிய ளாகவும் இருந்து, யாருக்கும் நன்மை செய்கிறாள் இந்தத் தேவி

## 5. ஸ்ரீ ராதா தேவி

பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்னும் பஞ்சப் பிராணன்களுக்கும் தலைவியாகவும், அன் வடிவமாகவும், செல்வத்துக்குத் தலைவியாகவும், அழகி களஞ்சியமாகவும், ஆதியாகவும், அனுதையாகவும், பூலோக தலைவியாகவும், கிருஷ்ண பரமாத்மாவிடம் எல்லையற்ற பிரேமை உடையவளாகவும், கோபிகா வேஷத்தைக் கொண்டவளாகவு இருப்பவள் ; நிர்க்குணையாகவும், நிச்சிந்தையினளாயும் உள் வள் ; எப்போதும் ஸந்துஷ்டையாகவும், பக்தர்களுடைய மனோ பீஷ்டத்தை நிறைவேற்றுபவளாகவும் இருந்து, கிருஷ்ணாமிர்த தில் மூழ்கியவளாய்த் திகழ்கிறாள்.

மேலே குறிப்பிடப்பெற்றுள்ள துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வ சாவித்திரி, ராதா என்ற ஐம்பெருஞ் சக்திகளினின்று முறை (1) ஸ்ரீ கங்கா தேவி, (2) ஸ்ரீ துளசி தேவி, (3) ஸ்ரீ மனஸா தேவி (4) ஸ்ரீ சஷ்டி தேவி, (5) ஸ்ரீ மங்கள சண்டிகா தேவி என்பவர்க அவதரிக்கின்றனர். அவர்களுடைய இயல்புகள் வருமாறு :—

## 1. ஸ்ரீ கங்கா தேவி

இப்பெயருடைய ஒன்பது தேவிகள் இருக்கின்றனர். எனினு எவளுடைய பெயரை உச்சரித்தால் எல்லாப் பாவங்களு

ங்குமோ, எவரிடம் மூழ்கினுல் உயர்ந்த புண்ணியங்கள் டைக்குமோ, எவர் பரமசிவனின் சடையில் அமர்ந்து அப் ரமேச்வரனுக்குக் கங்காஜடாதரன் என்னும் பெயரை ஏற்படுத் னரோ அந்தக் கருணைமயமான கங்கை மூன்று உலகத்திலும் ர்த்த வடிவமாக இருந்து எல்லோருக்கும் அனுக்கிரகிக்கிருள்.

## 2. ஸ்ரீ துளசி தேவி

சந்திரனையும் பாலையும் போலும் வெண்ணிறம் உடையவள் ளசி தேவி. இத்தேவி நிர்மலை ; அகங்காரம் அற்றவள் ; எல்லா யாய்களையும் தீர்ப்பவள் ; திருமாலின் மனைவி ; அடியவர்களின் றைகளைப் போக்குபவள் ; எப்போதும் திருமாலின் திருமார்பில் லையாக ஒளிர்பவள் ; எல்லாப் பண்டங்களையும் தூய்மைப் டுத்துகிறவள். இந்தத் தேவி தன்னைப் போற்றுபவர்களுக்கு ல்ல பலனை வழங்குகிருள்.

## 3. ஸ்ரீ மனஸா தேவி

சங்கரருடைய பிரிய சிஷ்யை ; அனந்தன் சகோதரி ; ாகாபரண பூஷிதை ; நாகமாதா ; நாகசயனி ; நாகவாகினி. ப்படிப்பட்ட தேவியின் வடிவம் எப்பொழுதும் உபாஸனைக்கு ரியது.

## 4. ஸ்ரீ சஷ்டி தேவி

பிரகிருதியின் ஆருவது அம்சமாகத் தோன்றி, முருகனுக்கு கந்த நாளாய், சம்பத் வடிவமாகக் காட்சியளிக்கிருள். இத் தவியை ஓராண்டு பூஜிக்கவேண்டும். ஆருவது நாளிலும், இருபத்தோராம் நாளிலும் இவளை சிரத்தையுடன் பூஜிக்க வண்டும்.

## 5. ஸ்ரீ மங்கள சண்டிகா தேவி

மிகவும் உயர்ந்த அவதாரம். இத்தேவி எல்லையற்ற அழ டையவள் ; பக்தர்களுக்கு உறுதியாக வரங்களை அளிப்பவள் ; ாங்கல்ய பலத்தை வலியத் தருகின்றவள். சாவித்திரி தேவிக்கு ங்கல வாழ்வை அளித்த பரமகருணமூர்த்தி இத்தேவி. கணவன் நோயுற்றிருக்கும்பொழுதும், ஆபத்தில் இருக்கும்பொழுதும்

மாங்கல்ய பிட்சை விரும்பும் சுமங்கலிகளும், கல்யாணம் ஆகாத கன்னிப்பெண்களும் இந்தத் தேவதையை மனத்தில் எண்ணி,

"மங்களே மங்களாதாரே மாங்கல்யே மங்களப்ரதே
மங்களார்த்தம் மங்களேசி மாங்கல்யம் தேஹி மேஸதா"

என்னும் தோத்திரத்தைத் தினமும் 21 முறைகள் கூறி அன்னையை வழிபட்டு, நாற்பத்தொரு நாட்கள் பூஜை செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் சுமங்கலிகளுக்கு மாங்கல்ய பலம் சித்திக்கும்; கன்னிப் பெண்களுக்கு நல்ல இடத்தில் கல்யாணம் நடைபெறும்.

---

# 23. சகல கலையறிவுகளும் அடைய

### ஸ்ரீ சரஸ்வதி பூஜை

ஸ்ரீ துர்க்கைமுதலிய ஐந்து சக்திகளிலிருந்து, அம்சருபமாகவும், கலாருபமாகவும் காளி, வசுந்தரை, கங்கை, சஷ்டி, மங்கள சண்டி, துளசி, நித்திரை, ஸ்வதாஸ்வாஹா, தக்ஷிணை என்னும் தேவதைகள் தோன்றினர். இவர்களைத் தவிர துர்க்கை, ராதா, சரஸ்வதி போலும் பெரிய சக்திகளும் தோன்றினர். 'அவர்களுள் ஸ்ரீ மகா சரஸ்வதியைப்பற்றியும், அவரது பூஜையைப்பற்றியும் இங்கே பார்ப்போம் :

சரஸ்வதி தேவி விஷ்ணுவுக்குப் பிரீதியுடையவளாகக் காட்சியளிக்கிருள்; பிரம்ம பத்தினியாக விளங்குகிருள். மாசி மாதம் சுக்கிலபட்சம், பஞ்சமி அவரது பூஜைக்கு உயர்ந்த காலம். புரட்டாசி மாதம், சுக்கிலபட்சத்து நவமியும், அஷ்டமியும் மிகச் சிறந்தவை. மண்டப நிர்மாணம் செய்து, அம்பிகையை ஆவாஹணம் பண்ணி, உயர்ந்த முறையில் பூஜை செய்து, அர்ச்சனைகள் புரிந்து, நிவேதனம் செய்து, கற்பூர ஹாரத்தி முடித்துத் தான தர்மங்களைச் செய்தபின், குமாரி, சுமங்கலி, ஸுவாஸினி, தம்பதி பூஜைகளைச் செய்யவேண்டும். வெண்ணெய், தயிர், பால்போளி, லட்டு, கரும்பு, கருப்பஞ்சாறு, பாகு, வெல்லம், மது, மோதகம், போளி, வடை, பலவகை அன்னங்கள் ஆகியவற்றை தேவிக்கு நிவேதனம் செய்யவேண்டும்.

இந்தப் பூஜையில் பீஜாட்சரத்துடன், சரஸ்வதி கவசத்தை முறைப்படி பாராயணமும் செய்தால் மிக உயர்ந்தது. அந்தக் கவசத்தை முறைப்படி பாராயணம் செய்தால் அளவற்ற பயன் கிடைக்கும். அதனுல் அன்னையிடம் இடைவிடாத பக்தியும்

உண்டாகும். அதன் கருத்தினைமட்டும் பீஜாட்சரம் இன்றிச் செய்யுள் வடிவில் கீழே தருவோம் :

## சரஸ்வதி கவசம்

1. சரசுவதி என் தலையைக் காக்க வாக்கின்
 தலைவியாம் வாக்தேவி நுதலைக் காக்க
 விரசுபக வதிகண்ணைக் காக்க நாசி
 விமலைவாக் வாதினியாள் காக்க வித்தைக்(கு)
 உரியதனித் தேவதைஎன் உதடு காக்க
 உயர்புகழ்ப் பிராம்மிபல் வரிசை காக்க
 மருவும் 'ஐம்' என் றிடுமனு கண்டம் காக்க
 வாழ் 'ஹ்ரீமா'ம் எழுத்து என்றன் பிடரைக் காக்க.

2. எழுத்தான 'சிரீம்' என்தோள் காக்க வித்யா
 திருஷ்டாத்மா என்மார்பில் இருந்து காக்க
 வழுத்துவித்யா ரூபிணிஎன் நாபி காக்க
 வாணிகரம் காக்கஎல்லா எழுத்தின் தேவி
 விழுத்தகஎன் அடிகாக்க வாக்கிற் கென்று
 மேயஅதிட் டானதே வதைதான் என்றன்
 முழுத்தஉறுப் பெவற்றினையும் காக்க காக்க
 மூர்கிழக்கில் சர்வகண்ட நாசி காக்க.

3. அங்கியெனும் திசைக்கண்ணே நின்று பீஜாட்
 சரிகாக்க மந்திரராஜத்தின் தேவி
 பொங்குதெற்கி லேயிருந்து காக்க காக்க
 புகல்மூன்றக் கரவுருவாள் நிருதி திக்கில்
 தங்கியெனைப் புரந்தருள்க மேற்குத் திக்கில்
 சாற்றுநா நுனியுறையும் அன்னை காக்க
 துங்கமிகு சர்வாம்பி கைதான் வாயு
 துன்னுதிசை யினில்என்னைக் காக்க காக்க.

4. கத்திபவா சினிவடக்கில் காக்க எல்லாக்
 கலையினிலும் உறைவாள்ஈ சானம் காக்க
 நத்துசர்வ பூசிதையாள் ஊர்த்து வத்தில்
 நயந்திருந்து காத்தருள்க அதோமு கத்தில்
 புத்தகவா சினியாகும் தேவி காக்க
 புகழ்கிரந்த பீஜத்தின் உருவாய் நின்றுஎன்
 எத்திசைக ளிலும்இருந்து காக்க காக்க
 எளியேனைக் கலைமகள் தான் என்றும் காக்க.

இந்தக் கவசத்தைத் தக்க பெரியோரிடம் உபதேசம் பெற்று முறைப்படி பூஜை செய்தால், எல்லாக் காரியங்களிலும் வெற்றி பெறலாம்

## துதி

1. பிரமசித் தாந்த ரூபி மெய்கழல் போற்றி போற்றி
வருநிலை வாற்றல் போற்றி வளர்ஞான சத்தி போற்றி
தெருள் புத்தி சத்தி போற்றி திகழ்பிர திபையே போற்றி
விரிவுறு கற்ப ஊநற் சத்தியாம் விமலை போற்றி.

2. தூயவெள் ளுடையாய் போற்றி துங்கவெண் கமலப் பூவி
மேயினை போற்றி வெண்மை விரிசெப மாலை ஏந்தி
ஆய்தரும் யாழை வாசித் தனைவரும் நலம்பெ றச்செய்
தாயுயர் சத்து வஞ்சார் தனித்தெய்வ மானாய் போற்றி.

மேலே காட்டப்பெற்றுள்ள சரஸ்வதி ஸ்தோத்திரத்தை நாள்தோறும் காலை மாலை இரு வேளைகளிலும், ஸ்வரூப தியானத்துடன் பாராயணம் செய்க. செய்யின் வித்தியா பாரங்கதனாகத் திகழலாம்.

---

# 24. கொடியவனும் மோட்சம் அடைய

### சங்கசூட உபாக்கியானம்

கோலோகத்தில் ஒரு சமயம் ஸ்ரீ கண்ணபிரான் தமது தேவி ராதையோடு அளவளாவி இன்புற்றிருந்தார். அப்பொழுது அதற்கு இடையூருகச் சுதர்மனும், ராதையின் தோழியும் வந்தனர். அதனால் கோபம் கொண்ட கண்ணபிரான், 'நீங்கள் இருவரும் மண்ணுலகில் மனிதப் பிறவி அடையக் கடவீர்' என்று சபித்தார். அதனால் அச்சமுற்ற அவ்விருவரும் வேண்டவே கண்ணபிரான் மீண்டும் ராதையின் தோழியை நோக்கி பெண்ணே, 'நீ தர்மத்துவசனுக்குப் நீ பெண்ணாகப் பிறந்து, சங்கசூடனைத் திருமணம் செய்துகொண்டு சில காலம் நிலவுலகில் இருந்து வருக' என்று கூறி, சுதர்மனைப் பார்த்து, 'நீ சங்கசூடன் என்னும் அசுரனாகப் பிறந்து, பரமசிவனோடு போர் செய்து இறந்து. மீண்டும் என்னிடம் வருக' என்று கூறியருளினார். அவர்களையும் சாபம் பற்றியது.

1. மண்ணுலகில் தர்மத்துவசனும், அவனுடைய பத்தினியும் நெடுங்காலம் அலுப்பின்றி இன்பம் நுகர்ந்தனர். அதன் விளைவாக அந்தப் பெண்மணி நூறு ஆண்டுகள் கர்ப்பந்தரித்து, ஒப்பற்ற ஒரு பெண்ணை ஈன்ருள். அவ்வாறு பிறந்தவள் கண்ணபிரானின் சாபத்துக்கு இலக்கான தோழியேயாவாள். அப்பெண்ணிற்கு 'துளசி' என்று பெயர் சூட்டப்பெற்றது. 'துளசி' என்னு

சொல்லுக்கே, 'தன்னிகரில்லாதவள்' என்பது பொருள். தன் பெயருக்கேற்பவே துளசியும் பேரழகுடன் விளங்கி, சிறப்பாக வளர்ந்து, மணப்பருவத்தை அடைந்து, தனக்குரிய கணவனை எதிர்பார்த்திருந்தாள்.

இந்நிலையில் சங்கசூடனும் துளசியும் எதிர்பாராமல் சந்திக்க நேர்ந்தது. இருவரும் ஒருவரை ஒருவர் பெரிதும் விரும்பினர். அப்பொழுது பிரம்மதேவர் அங்கு வந்து, அவ்விருவருக்கும் திருமணம் செய்துவைத்து மறைந்தார். இருவரும் ரதியும் மன்மதனும்போல் இணைந்து இன்பவாழ்க்கை நடத்திவந்தனர்.

சங்கசூடன் தேவியின் கிருபையினால் ஒப்பற்ற வலிமையடைந்து தேவர்களையெல்லாம் அடக்கிப் பலரைச் சிறையிலிட்டான். ஓடிப் பிழைத்த தேவர்கள் சென்று, தாம் படும் துன்பத்தையெல்லாம் பரமசிவனிடம் கூறி முறையிட்டனர். பரமேஸ்வரனும் தம் அருகிலிருந்த **சித்திரதத்தன்** என்னும் கந்தர்வனை அழைத்து, 'நீ உடனே சங்கசூடனிடம் செல். தேவர்களுக்கு அவரவர்களுடைய பதவிகளைப் பழையபடியே தரச் சொல். இல்லையேல் என்னுடன் போருக்கு வருமாறு சொல்' என்று கூறினர். சித்திரதத்தனும் ஈசன் இட்ட கட்டளையைச் சிரமேல் தாங்கி, விரைந்து சங்கசூடனிடம் சென்று, பரமேஸ்வரன் சொல்லி விடுத்த செய்திகளைக் கூறினன்.

சங்கசூடனே முக்காலத்தையும் உணர்ந்தவன். சிவபிரானுடன் போர் புரிந்து இறந்தால், தான் உடனே கோலோகம் சென்று கண்ணபிரானுடன் அளவளாவி மகிழலாம் என்பதை அவன் உணர்வான். எனவே, அவன் அந்நோக்கத்துடன் சித்திரதத்தனைப் பார்த்து, 'தேவர்கள் எங்கள் குலத்திற்குப் பரம்பரை பரம்பரையாகத் தீமை செய்பவர்கள். எனவேதான் அவர்களை நான் சிறையில் இட்டேன். ஆகவே, அவர்களை விடுவிக்கமுடியாது' என்று சொல்லி அனுப்பினன்.

சித்திரதத்தன் மீண்டு வந்து, சங்கசூடன் உரைத்தவற்றைச் சிவபிரானிடம் கூறினன். அவ்வுரைக் கேட்ட சிவபிரான், சங்கசூடனுடைய உட்கருத்தை அறிந்துகொண்டு, போருக்கு எழுந்தார்.

சங்கசூடனின் மனைவியாகிய துளசி கற்பிற் சிறந்தவள். அவள் கற்புடன் இருக்கும்வரையில் யாராலும் சங்கசூடனுக்கு எத்தகைய தீங்கும் செய்யமுடியாது. அவள் கற்பினை இழந்தால் தான் சங்கசூடனைக் கொல்லமுடியும். இவ்வுண்மையை அறிந்த திருமால், உலகத்தின் நன்மைக்காக, துளசியின் பெண்மையைக் குலைத்துவிட்டார். அதனால் கடுஞ்சினம் கொண்ட துளசி திருமாலைப் பல கேள்விகள் கேட்டாள். அவற்றிற்கு விடையாகத் திருமால், 'துளசி வருந்தாதே. நீ அடுத்த பிறவியில் என்னை அடையவேண்டியவள். தேவர்களுடைய நன்மைக்காக, நான்

நுட்பமான சில செயல்களைச் செய்யவேண்டியிருக்கிறது. வரும் பிறப்பில் உன்னை நான் மணப்பேன். உன்னைவிட எனக்கு உகந்தது வேறு எதுவும் இல்லை' என்று தேற்றிச் சென்றார்.

பின்பு சங்கசூடனுக்கும் சிவபிரானுக்கும் போர் நடை பெற்றது. சிவபிரான் தமது அஸ்திரத்தால் அவனை எளிதில் சங்காரம் செய்தருளினார். சங்கசூடனும் பழையபடியே சுதர்மனாகிக் கோலோகம் சென்றான்.

தன் கணவனது இறப்பைக் கேட்ட துளசி மிகவும் சோகத் துடன் அலறினாள். அவன் உடலோடு தானும் தீயில் விழுந்து இறந்தாள். பிறகு அவள் 'துளசி' என்னும் திருப்பெயருடனேயே, திருமாலின் பேரன்பிற்கு உரியவளாகிப் பரமகல்யாணியாகத் திகழ்ந்தாள். 'துளசியின்றித் திருமாலுக்குச் செய்யும் ஆராதனம் நெய்யில்லாத உணவைப் போன்றது' என்று பெரியோர்கள் கூறுவர்.

இந்த உபாக்யானத்தினால் எவ்வளவு பெரிய சாபமும், பாவமும் அம்பிகையின் நாமத்தால் நீங்கும் என்பதைப் பாப நாசினி, சாபநாசினி என்ற நாமாக்களே நமக்கு நினைவூட்டுகிறது அல்லவா ?

தேவியின் திருநாமம் எவ்வளவு பாபத்தைப் போக்குமோ அவ்வளவு பாபத்தை மனிதன் தன் பிறவியில் செய்யவே முடியாது என்ற பெரியவர் ஸூக்தியும் இவ்வுபாக்யானத்தின் மகிமையை நமக்கு விளக்கும்.

"நாம் நோஸ்தி யாவதீ சக்தி:
பாப நிர்ஹரணம் ஸதே:,
தாவத் கர்த்தும் நசக்நோதி
பாதகம் பாதகீ ஜன."

---

## 25. அளவற்ற ஸுகங்களைப் பெற

### துளசி பூஜை

ஸ்ரீ மஹாவிஷ்ணு பக்தர்கள் செய்யும் பூஜைகளில் துளசி என்று மிகச் சிறந்தது. துளசித் தோட்டத்திற்கும் பிருந்தாவனம் என்றும் பெயர் உண்டு. ஒரு சமயம் மஹாவிஷ்ணுவே, துளசியை மகிழ்விப்பதற்காகப் பூஜை செய்தார் என்று ஹரிவம்சம் என்னும் நூல் கூறுகிறது. துளசிச் செடி இருக்கும் இடத்தில் கோலம் இட்டு, செம்மண் பூசி, நல்ல தீர்த்தம் சேர்த்து, திருவிளக்கு ஏற்றி

வேண்டும். பக்தி சிரத்தையுடன் மடி உடுத்தி, அர்க்கிய பாத்யாதிகள் அளித்து, அன்புடன் பூஜை செய்யவேண்டும்.

1. பிருந்தா தேவியை நான் பஜிக்கின்றேன்.
2. பிருந்தாவனியை நான் பஜிக்கின்றேன்.
3. விச்வ பூஜிதாவை நான் பஜிக்கின்றேன்.
4. விச்வ பவானியை நான் பஜிக்கின்றேன்.
5. புஷ்ப ஸாராவை நான் பஜிக்கின்றேன்.
6. நந்தினியை நான் பஜிக்கின்றேன்.
7. கிருஷ்ணவேணியை நான் பஜிக்கின்றேன்.
8. துளசியை நான் பஜிக்கின்றேன்.

என்னும் இந்த எட்டுத் திருநாமங்களையும் கூறி அர்ச்சனை செய்பவர்கள் அளவற்ற ஸுகங்களை அடைவார்கள் என்பது உறுதி.

---

# 26. தீர்க்க ஸௌமங்கல்யம் பெற

## சாவித்திரி உபாக்கியானம்

மத்திர தேசத்தில் அசுவபதி என்னும் அரசன் அறநீதி தவருமல் ஆட்சி புரிந்துவந்தான். அவனுடைய தர்மபத்தினி மாலதி. அவர்களுக்கு நெடுங்காலமாக மக்கட்பேறு கிட்டவில்லை. அதனுல் வருந்திய அவர்கள், நாரதருடைய உபதேசத்தின்படி ஸ்ரீ சாவித்திரி தேவியைப் பக்தி சிரத்தையுடன் வழிபட்டனர். அதன் பலனுக அவர்கட்கு அழகான ஒரு பெண் குழந்தை பிறந்தது. ஸ்ரீ சாவித்திரி தேவியின் திருவருளால் பிறந்த அக் குழந்தைக்கு சாவித்திரி என்றே பெற்ருேர் பெயரிட்டுச் சீரும் சிறப்புமாக வளர்த்து வந்தனர்.

கர்ப்ப காலத்திலிருந்தே சாவித்திரி உலகன்னையினிடம் பக்தி கொண்டிருந்தாள். நாளடைவில் அந்த பக்தி வளர்ந்துகொண்டே வந்தது. ஐந்தாம் வயதிலேயே சாவித்திரி அம்பிகையின் மந்திர உபதேசத்தைப் பெற்று, அதையே ஜபித்துக்கொண்டு வந்தாள்.

ஒரு நாள் சாவித்திரி தன் தோழியின் மூலமாக சத்தியவான் என்னும் அரசகுமாரனின் பெருமையைப்பற்றிக் கேள்விப்பட்டாள். அக்கணமே அவள் சத்தியவானைத் தனக்குரிய கணவனாக வரித்துவிட்டாள். சமயம் வந்தபொழுது அவள் தன் மனக் கருத்தைத் தன் தந்தையினிடமும் கூறினாள். அசுவபதி சத்தியவானைப்பற்றிப் பெரியவர்களிடம் விசாரித்தான். சத்தியவான் அற்ப ஆயுளை உடையவன் என்று பெரியோர்கள் மன்னனிடம் கூறினர். அதைக் கேட்ட மன்னன் பெருவருத்தம் கொண்டான்.

பெரியோர்கள் சொல்லியதையும், அவ்வுரை கேட்டுத் தன் தந்தை வருந்துவதையும் அறிந்த சாவித்திரி, தன் தந்தையை அடைந்து, 'தந்தையே! ஸ்ரீ சாவித்திரி தேவியின் கட்டளைப்படி யாவும் நடைபெறும். நம்மால் ஆவது ஒன்றும் இல்லை. சத்தியவானையே என் கணவனாக வரித்துவிட்டேன். இனி வேறொருவனை நான் மனத்தால் நினைப்பதும் தவறு. சத்தியவானுக்கே என்னை மணம் முடித்துவையுங்கள்' என்று உறுதியுடன் கூறினாள். அசுவபதியும் வேறு வழியின்றி, சத்தியவானுக்கே தன் அருமை மகளை மணம் செய்துகொடுத்தான்.

சத்தியவானின் பெற்றோர் தம் பார்வையை இழந்தவர்கள். அது மட்டுமா! அவர்களுடைய நாட்டையும் பகைவர் கவர்ந்துவிட்டிருந்தனர். நாட்டையும் பார்வையும் இழந்திருந்த தன் மாமனுருக்கும், மாமியாருக்கும் சாவித்திரி தக்கவாறு பணிவிடைகள் செய்தாள். கணவனுடைய மனம் மகிழுமாறு நடந்து எல்லோருடைய அன்பையும் பெற்றாள்.

சாவித்திரி நாள்தோறும் மாங்கல்ய தேவதையாகிய மங்கள சண்டிகையைப் பூஜித்து வந்தாள். அவள் ஒருமித்த மனத்துடன் அம்பிகையை நோக்கி,

"மங்களே மங்களாதாரே மாங்கல்யே மங்களப்ரதே
மங்களார்த்தம் மங்களேசி மாங்கல்யம் தேஹிமேஸதா"

என்னும் சுலோகத்தை உருக்கத்துடன் கூறுவாள்.

இவ்வாறு இருக்கையில், சத்தியவானுடைய வாழ்நாள் முடியும் காலம் வந்துவிட்டது. அன்று கணவனுடைய முடிவு நாள் என்பதைச் சாவித்திரி அறிந்துவிட்டாள். ஆனால், தனக்கு இறுதி நாள் வந்துற்றது என்பதனைச் சத்தியவான் அறியவில்லை. அன்று சத்தியவான் வழக்கப்படி விறகு வெட்டுவதற்காக

காட்டுக்குச் செல்லக் கிளம்பினான். சாவித்திரி தானும் உடன் வருவதாகக் கூறி அவனோடு கிளம்பிவிட்டாள். மாமனும் மாமியும் அவளைத் தடை செய்யவில்லை.

மாலை நேரம் வந்தது. திடீரென்று சத்தியவான், "ஐயோ! எனக்கு மயக்கமாக வருகிறதே!" என்று கூறியபடியே தரையில் படுத்தான்; படுத்த கணவனைத் தன் மடியில் தாங்கியவாறே சாவித்திரி, சிறிதும் மனங்கலங்காமல், தேவி திருவுருவை மனத்தில் நினைத்துத் தியானம் செய்தாள். பக்தி சிரத்தையாலும், அவளது கற்பின் சிறப்பினாலும் யமதர்மராஜன் சாவித்திரியின் கண்களுக்குத் தோன்றினான். தன் கணவனின் உயிரை யமன் கவர்ந்துசெல்வதை அவள் கண்டு, கணவனின் உடலைக் கீழே கிடத்திவிட்டுத் தானும் யமனுடன் கூடவே சென்றாள். தன்னைப் பின்பற்றி வரும் சாவித்திரியை யமன் பார்த்தான். அப்பொழுது அவள் யமதர்மனை நோக்கி, 'பிரபுவே, எனக்கு மாங்கல்ய பிச்சை தருக. இல்லையேல் என் உயிரை எடுத்துக்கொண்டு, என் கணவன் உயிரைத் தருக' நான் இவரில்லாமல் வாழமாட்டேன். தாங்கள் உயர்ந்தவர்; சத்தியம் தவறாதவர்; தர்மராஜா என்று பட்டம் பெற்றவர்' என்று கூறி,

1. தர்மராஜரே உம்மை வணங்குகிறேன்.
2. சமன் என்ற பெயர் பெற்றவரே உம்மை வணங்குகிறேன்.
3. கிருநாந்தகரே உம்மை வணங்குகிறேன்.
4. தண்டதரரே உம்மை வணங்குகிறேன்.
5. யமன் என்ற பெயர் பெற்றவரே உம்மை வணங்குகிறேன்.
6. புண்ணிய மித்திரரே உம்மை வணங்குகிறேன்.
7. ஸர்வ பூத க்ஷயரே உம்மை வணங்குகிறேன்.
8. ஔதும்பரரே உம்மை வணங்குகிறேன்.

என்னும் இந்த எட்டுப் பெயராலும் - சாவித்திரி யமனைப் போற்றினாள். அவற்றைக் கேட்ட யமன் மகிழ்ந்து, சாவித்திரிக்குப் பல தர்மோபதேசங்களைச் செய்து, தன் கைப்பட்ட உயிர் மீளாது என்று கூறி அவளைத் திரும்பிப் போகச் சொல்லிவிட்டு விரைந்து மேலே செல்வானாயினான்.

சாவித்திரியோ விடாது மேலும் யமதர்மனைப் பின்தொடர்ந்தாள். நரக தண்டனைகள், புண்ணிய பாவங்கள், கடமைகள் ஆகியவற்றையெல்லாம் யமன் அவளுக்கு விளக்கிக் கூறி மேலே சென்றான். அப்பொழுதும் சாவித்திரி விடாமல் யமனைத் தொடர்ந்தாள். தன்னை விடாமல் பின்தொடரும் அம்மங்கையினிடம் இரக்கம் கொண்ட யமதர்மன், 'பெண்ணே' இவன் உயிரைத் தவிர வேறு எது வேண்டுமாயினும் கேள், தருகிறேன்' என்றான். சாவித்திரி முதலில் தன் தந்தைக்குப் பல புதல்வர்கள்

பிறக்கவேண்டும் என்று கேட்டாள். யமன் அப்படியே அவ்வரத்தைத் தந்தான். மறுபடியும் தொடர்ந்து சென்று மாமனும் மாமியும் இழந்த தம் பார்வையையும், நாட்டையும் திரும்பப் பெறுமாறு வரம் கேட்டுப் பெற்ருள்; இவ்வாறு சாவித்திரி கேட்ட வரங்களைக் கொடுத்துவிட்டு யமன் மறைந்தான்.

சாவித்திரி விடுவாளோ! அவள் சிறிதும் தளராமல் தன் கற்பின் பலத்தால் யமனைப் பின்தொடர்ந்தாள். வைதரணி நதியைத் தாண்டி, தர்மராஜனுடைய கோட்டைக்குள்ளேயே சென்றுவிட்டாள்; மீண்டும் மீண்டும் பிடிவாதமாக யமதர்மனைப் பிரார்த்தித்தாள். சாவித்திரியின் இடைவிடாத முயற்சி, தேவி பக்தி, கற்பின் வலிமை ஆகியவற்றைக் கண்ட யமன், மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தான். அவளது கணவனின் உயிரையும் விடுதலை செய்தான்.

[சில ஏடுகளில் யமதர்மராஜன் சாவித்திரியைச் சுமங்கலியாக இருப்பாய் என்று கூற, தர்மசங்கடத்தில் ஆழ்ந்த தர்மராஜன் சத்தியவான் உயிரைத் தர உடன்பட்டான் என்றும்,வேறு சில ஏடுகளில் தனக்குப் புதல்வன் வேண்டும் என்று சாவித்திரி யமனை வரம் கேட்டதாகவும், யமன் ஏமாந்து போய் அந்த வரத்தை அவளுக்கு வழங்கிவிட்டதாகவும், பிறகு தன் பிழையை உணர்ந்து வேறு வழியில்லாமல் சத்தியவான் உயிரைத் திருப்பிக் கொடுத்துவிட்டான் என்றும் உள்ளன.]

இவ்வாறு தன் கணவனின் உயிரை யமனிடமிருந்து திரும்பப் பெற்ற சாவித்திரி அதிவிரைவில் கானகம் வந்தாள். தன் கணவனின் உடலை மெல்லத் தூக்கித் தன் மடியில் வைத்துக் கொண்டவுடன் அவன் தூக்கத்திலிருந்து விழித்து எழுபவனைப் போல் கண்விழித்து எழுந்தான். தனக்கு மயக்கம் வந்த ஒன்றை மட்டும் அவன் அறிவானேயன்றி, தன் மனைவி யமனிடமிருந்து தன் உயிரை மீட்டனள் என்னும் செய்தியை அறியக்கூடவில்லை. சாவித்திரி நிகழ்ந்தவற்றைக் கூருமல் சத்தியவானுடன் தங்கள் ஆசிரமத்துக்குச் சென்ருள். அங்கு அவளுடைய மாமனும் மாமியும் கண் பார்வை பெற்று மகிழ்ச்சியுடன் இருந்தனர். அன்றே மாமன் தான் இழந்த ராஜ்யத்தையும் பெற்ருன். பின்பு யாவரும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர்.

இத்தகைய பெருமையைத் தரும் சாவித்திரி தேவீ பூஜை மிகச் சிறப்பு வாய்ந்தது. 14 ஆண்டுகள் இந்தப் பூஜையைப் பெண்கள் செய்யவேண்டும்.

1. ஆவணி மாதம், சுக்கில பட்ச அஷ்டமியில் மகாலக்ஷ்மி விரதம்,
2. ஆடி மாதம், சுக்கில பட்ச சதுர்த்தசியில் ஸாவித்திரி விரதம்,

3. செவ்வாய்க்கிழமை மங்கள சண்டிகா தேவீ விரதம்,
4. சஷ்டியில் ராஜாதேவீ விரதம்,
5. கார்த்திகை மாதர், சுக்கில பட்ச, அஷ்டமியில் துர்க்கா தேவீ விரதம்.

என்னும் ஐந்து விரதங்களையும், விடாமல், நூல்களில் கூறியுள்ள வாறே சுமங்கலிகள் செய்து வருவாராயின், கணவருடைய அன்பையும், நல்ல புத்தியையும் பெறுவர்; கணவர் நீண்ட ஆயுளுடன் வாழ்வார்; நல்ல புத்திரர்களைப் பெறுவார்கள்; மங்களமாக வாழ்வார்கள்.

---

# 27. மனோபீஷ்டம் நிறைவேறி, சகல சம்பத்துக்களும் பெற

## ஸ்ரீ மஹாலக்ஷ்மீ தோத்திரம்

ஸ்ரீ மஹாலக்ஷ்மீ தோத்திரங்கள் பலவகைப் புராணங்களிலும், நூல்களிலும் பல்வேறு விதமாக அமைந்துள்ளன. எனினும், தேவீ பாகவதத்தில் கூறப்பெற்றுள்ள கீழ்வரும் சுலோகங்கள் மிகவும் உயர்ந்தவை; உடனே பலன் தரத் தக்கவை. எனவே, அவற்றைக் கீழே தருவோம். படித்துப் பயனடைக :—

1. ஸஹஸ்ரதள பத்மஸ்த கர்ணீகா வாஸிநீம்பராம்
சரத்பார்வண கோடீந்து ப்ரபாமுஷ்டிகராம் பராம்.
2. ஸ்வதேஜஸா ப்ரஜ்லந்தீம் ஸுகத்ருச்யாம் மனோஹராம்
பரதப்த காஞ்சந்நிப சோபாம் மூர்த்திமதீம் ஸதீம்.
3. ரத்நபூஷண பூஷாட்யாம் சோபிதாம் பீதவாஸஸா
ஈஷத்தாஸ்யாம் ப்ரஸந்நாஸ்யாம் சச்வத்ஸுஸ்திர யௌவநாம்
ஸர்வ ஸம்பத் ப்ரதாத்ரீம்ச மஹாலக்ஷ்மீம் பஜேசுபாம்.

## இவற்றின் விளக்கம்

1. ஆயிரம் இதழார் கஞ்சத்
தமர்ந்தவள் கருஞ்சி வப்பு
மேயவண் ணத்தி னுடை
விரும்பியே உடுத்தாள் கூதிர்

பாயதண் திங்க ளேபோல்
 பைங்கதிர் வீசும் மேனித்
தாய்எழில் திருமா மங்கை
 தளிரடி போற்றி போற்றி.

2. ஒப்பிலா மேனித் தேசால்
 ஒளிர்பவள் திருக்கண் ணோக்கால்
தப்பிலா இன்பம் ஈயும்
 தன்மையள் தழலில் காய்ந்து
கப்பிய மாசு நீங்கி
 உருகிய கனகச் சோதித்
திப்பிய உருவாள் கற்பிற்
 சிறந்தவள் அடிகள் போற்றி.

3. மணியணி புனைந்து கோல
 மஞ்சட்பட் டுடுத்தும் தேவி
பணிவினில் சிறிதீந் தாலும்
 டன்மடங் காக ஈவாள்
அணிபெறும் இளமை என்றும்
 அகன்றிடா(து) ஒளிரும் அன்னை
திணிபொருள் யாவும் ஈயும்
 செல்விசே வடிகள் போற்றி.

இப்படிப்பட்ட மகிமையை உடைய ஸ்ரீ மஹாலக்ஷ்மீ தேவிக்குப் பல நாமங்கள் இருப்பினும், அவளை லக்ஷ்மி. மஹாலக்ஷ்மி, சுவர்க்கலக்ஷ்மி, நாகலக்ஷ்மி, ராஜ்யலக்ஷ்மி, கிருஹலக்ஷ்மி என்று பலவிதமாக வழிபடுவர் பெரியோர். அவளே யாகத்தில் தக்ஷிணு ரூபிணியாகவும், தாமரையில் அழகாயும், சந்திரனிடத்தில் நில வாயும், சூரியனிடத்தில் காந்தியாயும் இருக்கின்ருள்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மீ தேவியைச் சித்திரை, தை, ஆடி, புரட்டாசி மாதங்களிலும், செவ்வாய், வெள்ளிக்கிழமைகளிலும் பூஜை செய்தால் புண்ணியம் மிகப் பெருகும். மனு, இந்திரன், கேதாரன், நீலன், சுபலன், நளன், துருவன், உத்தானபாதன், பலி, காசியபர், தக்ஷன், கர்த்தமன், விவஸ்வான், பிரியவிரதன், சந்திரன், குபேரன், வாயு, வன்னி, யமன், வருணன் ஆகியவர்கள் லக்ஷ்மி தேவியைப் பூஜை செய்து, அஷ்ட ஐசுவரியங்களையும் பெற்று மகிழ்ந்தனர். மஹாலக்ஷ்மியை முனிவர்கள், துறவிகள், கிருகஹஸ்தர்கள், கந்தவர்கள், யக்ஷர்கள், உரகர்கள், ஸாத்யர்கள், வித்தியாதரர்கள், சுமங்கலிகள் முதலிய யாவரும் பூஜை செய்து மனோபீஷ்டம் நிறைவேறப் பெற்றனர். எல்லாக் காலத்திலும் எல்லா நேரத்திலும் லக்ஷ்மீ பூஜை சிறந்தது. சுலபமான ஆராதனையால் லக்ஷ்மி தேவீ மிகவும் சந்தோஷம் அடைகிருள்.

# 28. சர்வ சக்திகளும் பெற

## அகஸ்தியர் சரித்திரம்

தேவி உபாசகர்களுள் தலைசிறந்தவர் அகஸ்திய மகாமுனிவர் தம்பதியாகத் தேவி பூஜை செய்தவர் அவர். ஸ்ரீமத் ராமாயணத்தில், ஸ்ரீ ராமர் அகஸ்தியரின் ஆசிரமத்திற்குச் சென்று, பல தெய்வ ஸ்தானங்களைத் தரிசித்தார் என்று சொல்லப்பெற்றுள்ளது. ஸ்ரீ ராமருக்குப் பலவித அஸ்தரங்களை அகஸ்தியர் அளித்தார். ஆதித்தியஹ்ருதயம் என்ற மந்திர சாஸ்திரத்தை அப்பெருமானுக்கு குப ஸ்பார்க்களத்தில் உபதேசித்தார். குடத்தில் பிறந்ததால் கும்பஸம்பவர் என்றும் அகஸ்தியர் பெயர் பெற்றார்.

பரமேஸ்வரன் பார்வதி தேவியைத் திருமணம் செய்து கொண்ட காலத்தில் எல்லோரும் திருமணக் காட்சியைக் கண்டு களிக்க இமயமலையில் கூடிவிட்டனர். அதனால் பூமியின் வட திசை தாழ்ந்து தென்திசை உயர்ந்துவிட்டது. அதனையுணர்ந்த சிவபெருமான் அகஸ்தியரை அழைத்து, 'ஸ்ரீ வித்யா தம்பதிகளாகிய நீங்கள் தென்னாடு செல்லுங்கள். அங்கே உமக்குக் காட்சி தருகின்றோம். காமேசுவரி மந்திரத்தை அருளுகிறோம். சர்வ சக்தியையும் பெறுவீர்களாக' என்று கூறித் தென்திசைக்குப் போகுமாறு கட்டளையிட்டார்.

அந்தக் கட்டளையைப் புறக்கணிக்கமாட்டால் அநதத் தேவி பக்த தம்பதிகள் தென்னாடு நோக்கிப் புறப்பட்டனர். அப்பொழுது கங்காதரர் அகஸ்தியருக்குத் தமிழை உபதேசித்தனுப்பினார். அகஸ்தியர் தமது பயணத்தில், விந்திய மலையை அடக்கினார்; வாதாபி வில்வலனை அழித்தார்; காவிரியைத் தோற்றுவித்தார்; குற்றாலத்தில் திருமாலை சிவலிங்கமாக்கி மகிழ்ந்தார். பின்பு அகஸ்தியர் தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிக் கடலைக் குடித்தார்; அம்பிகையின் நவராத்திரி பூஜைக்காகக் கல்பம் இயற்றினார்; தமிழுக்கு மூன்று வகை இலக்கணம் இயற்றினார். தமிழைப் பன்னிரண்டு மாணவர்களுக்குக் கற்பித்தார். தேவியின் மகிமையையும், மந்திரத்தையும் தக்க சிஷ்யர்களுக்கு உபதேசித்தார்; ஸர்வஜன க்ஷேமத்திற்காகப் பல தர்மங்களைச் செய்தார்.

இவ்வாறெல்லாம் பல நற்காரியங்களைச் செய்ததால் காமேசுவரியம்மையுடன் காமேசுவரர் அகஸ்தியருக்குக் காட்சி கொடுத்தருளினார். அப்பொழுது அகஸ்தியர் அந்த மனோகர மூர்த்தியைத் தரிசனம் செய்து, 'பிரபோ, என் உள்ளத்தில் எப்பொழுதும் தேவியின் மந்திர ஸ்வரூபம் பிரகாசிக்கவேண்டும்.

யான் இயற்றிய கல்ப முறைப்படியாவது, துர்வாஸ முனிவர் இயற்றிய கல்போக்த முறைப்படியாவது நவராத்திரி பூஜை செய்தவர்கள் மீண்டும் இவ்வுலகில் பிறவாதிருக்க வரம் அருளவேண்டும்' என்று பிரார்த்தித்தார். சிவபிரான் அகஸ்தியர் கேட்ட வரங்களை மகிழ்ச்சியுடன் ஈந்து அவருக்கு ஸர்வ மங்களத்தையும் அருளினார். தேவியும் அகஸ்தியருக்குப் பூரண அனுக்கிரகத்தை வழங்கினாள்,

---

# 29. பெரும் புகழ் பெற

## ஸ்ரீ ராதிகா தேவி தோத்திரம்

தேவி பூஜைகளில் போகத்தைத் தரும் பூஜையின் தேவதை ராதா. இப்பெருமாட்டியை ராதிகா என்றும் கூறுவர். ராதையின்றிக் கண்ணனைப் பூஜை செய்யக்கூடாது. ஸ்ரீ ராதா என்பது மூன்று அட்சர மந்திரம். "ஓம் ஸ்ரீ ராதிகாயை நம:" என்பது எட்டக்ஷர மந்திரம். ராதைக்குக் 'கிருஷ்ணப் பிரீதி' என்றும் ஒரு பெயர் உண்டு. 'ராதனம்' என்னும் சொல் 'புருஷார்த்தத்தைத் தருவது' என்று பொருள்படும். ராதையும் கண்ணனும் ஒருவரை விட்டு ஒருவர் கணநேரம் கூடப் பிரியமாட்டார்கள். இவ்விருவருள் யார் உயர்ந்தவர் என்று எவராலும் சொல்லமுடியாது.

ராதிகா மந்திரத்திற்கு மகாவிஷ்ணு ரிஷி. காயத்திரி சந்தஸ் தேவதை ராதிகா. மூல மந்திரமும் பீஜாக்ஷரமும் அங்கப் பிரத்தியங்க தேவதைகள். இந்த ராதிகா தேவிக்கு மார்கழி மாதத்தில் திருமணம் நடத்துகிறவர்கள் பெரும் புகழையும் சிறந்த நன்மைகளையும் அடைவர். ராதையைப் பற்றிய பல சுலோகங்களுள் மிக உயர்ந்தனவும், தேவி உபாஸகர்களால் நித்தியமாகப் பாராயணம் செய்யப்படுவனவும், யக்ஞ பலனைக் கொடுப்பனவும் எல்லாப் பாவங்களையும போக்குவனவுமானவை கீழ்வரும் சுலோகங்கள். அவற்றைப் பாராயணம் செய்து பயன் பெறுக:—

1. நமஸ்தே பரமேசாநி ராஸமண்டல வாஸினி
   ராஜேஸ்வரி நமஸ்தேஸ்து கிருஷ்ணப்ராண திகப்ரியே
2. நமஸ்த்ரைலோக்ய ஜநநி ப்ரஸீத கருணார்ணவே
   ப்ரம்ஹ விஷ்ண வாதிபிர் தேவை: வந்த்யமான பதாம்புஜே
3. நம: ஸரஸ்வதீ ரூபேநம: ஸாவித்திரி சங்கரி
   கங்கா பத்மாவதீரூபே ஷஷ்டி மங்கள சண்டிகே

4. நமஸ்தே துளஸீரூபே நமோ லக்ஷ்மி ஸ்வரூபிணி
நமோ துர்கே பகவதி நமஸ்தே ஸர்வரூபிணி

5. மூலப்ரக்ருதிரூபாம் த்வாம் பஜாமி கருணார்ணவாம்
ஸம்ஸார ஸாகராதஸ்மாத் உத்தராம்ப தயாம்குரு

## இவற்றின் விளக்கம்

1. ஏற்றமார் தலைவி போற்றி
இராசமண் டலத்தாய் போற்றி
போற்றிஎம் கண்ணன் அன்பு
பொருந்தியோய் உலகம்மூன்றும்
தோற்றுவித் தருளும் அன்னாய்
துன்னருட் கடலே போற்றி
சாற்றயன் விண்டு வாதி
பணிந்திடு தாயே போற்றி.

2. புகழ்சர சுவதி போற்றி
பொலிசாவித் திரியே போற்றி
திகழும்சங் கரியா நின்ற
தேவியே போற்றி கங்கை
மகிழ்பத்மா வதியே போற்றி
மங்கள சண்டி யோடு
புகல்சட்டி தேவி யாகிப்
பொருந்தினாய் போற்றி போற்றி

3. துளசிபொன் மகளாய் நின்றாய்
துர்கையாம் வடிவே போற்றி
வளர்பக வதியே எல்லா
வடிவமு மானாய் போற்றி
தளர்விலா (து) ஓங்கும் மூலப்
பகுதியாம் தாயே போற்றி
அளவிலா அருளாய் சன்ம
ஆழிநின் றெடுப்பாய் போற்றி.

———

# 30. சகல பாவங்களையும் போக்கிக்கொள்ள

## ருத்திராட்ச மகிமை

ஒவ்வொரு மனிதனும் முன்னோர்கள் வகுத்த ஒழுக்க முறைகளைப் பின்பற்றி நடப்பதில் விருப்பம் உடையவனாக இருக்கவேண்டும்; அழுக்குகளை அகற்றித் தூயவனாக இருக்கவேண்டும்; காலம், முறை முதலியவற்றைப் பயின்று நடக்கவேண்டும். சௌசம் செய்வதால் உடம்பு சுத்தமாகிறது. விதிப்படி எல்லோரும் நீராடவேண்டும். சரீர சுத்திக்கும், சித்த சுத்திக்கும் ருத்ராட்ச தாரணம் மிக அவசியமாகும்.

முற்காலத்தில் திரிபுர சம்ஹாரத்திற்காகச் சிவபிரான் அகோரம் என்ற அஸ்திரத்தை ஸ்மரித்துப் பின் கண்களைத் திறந்தார். அப்பொழுது அவர் கண்களிலிருந்து சிந்தின மூன்று நீர்த் துளிகளே ருத்திராட்சங்களாக மாறின. சிவபிரானுடைய மூன்று கண்களில் ஒன்றான சூரியனிடமிருந்து வந்தவை கபில நிறம் உடையவை; சந்திரனிடமிருந்து வந்தவை வெண்ணிறம் உடையவை; அக்னியிடமிருந்து வந்தவை கருநிறம் உடையவை. இவை ஒவ்வொன்றும் தனித்தனிச் சிறப்புடையவை.

இனி, பல்வகை முகங்களையுடைய ருத்திராட்சங்களின் ஸ்வரூபங்களை உணர்வோம் :—

ஒரு முகம் உள்ள ருத்திராட்சம் சிவ ஸ்வரூபம்

| | | | | |
|---|---|---|---|---|
| இரு முகங்கள் | ” | ” | தேவதேவியின் | ஸ்வரூபம் |
| மூன்று | ” | ” | அக்னி | ” |
| நான்கு | ” | ” | பிரம்ம | ” |
| ஐந்து | ” | ” | காலாக்கினி | ” |
| ஆறு | ” | ” | சுப்பிரமணிய | ” |
| ஏழு | ” | ” | மன்மத | ” |
| எட்டு | ” | ” | விநாயக | ” |
| ஒன்பது | ” | ” | பைரவ | ” |
| பத்து | ” | ” | விஷ்ணு | ” |
| பதினொரு | ” | ” | ஏகாதசருத்ர | ” |
| பன்னிரண்டு | ” | ” | துவாதசாதித்ய | ” |
| பதின்மூன்று | ” | ” | சண்முக | ” |
| பதினான்கு | ” | ” | சிவபிரானது | ” |

இவைகளுக்குத் தனித் தனியே பலன் உண்டு. இவற்றைத் தரிசிப்பதால் எல்லாப் பாவங்களும் நிவர்த்தியாகின்றன. ருத்தி ராட்ச தாரணம் செய்தவரைச் சிவபிரானாகவே கருதவேண்டும். ருத்திராட்சத்தைப் பக்தியுடன் அணியவேண்டும்.

| | |
|---|---|
| தலையில் | 26 மணிகளும், |
| மார்பில் | 50 மணிகளும், |
| தோளில் | 14 மணிகளும், |
| மணிக்கட்டில் | 12 மணிகளும் |

அணிதல் சிறந்தது என்று பெரியோர்கள் கூறுவர். இதைவிட மனிதனுக்குச் சிறந்த ஆபரணம் வேறு இல்லை. 08, 50, 27 என்ற எண்களில் மாலை கட்டி மார்பில் அணிந்தால் எல்லையற்ற புண்ணியம் கிடைக்கும்.

ருத்திராட்சத்திற்கு மேல்பக்கம் பிரம்மாவும், கீழ்ப்பக்கம் மகாவிஷ்ணுவும், நடுப்பக்கம் ருத்திரனும் தங்கியிருப்பதாக ஐதீகம், ருத்திராட்சத்தைச் சிவலிங்க ஸ்வரூபமாகவே பாவித்து அபிஷேகம் செய்தல் சிறப்புடைத்து. பொன், வெள்ளி ஆகியவற்றோடு இணைத்துக் கட்டியும் ருத்திராட்ச மாலையை அணிதல் நன்று. மற்றவற்றோடு ருத்திராட்சத்தைச் சேர்த்துக் கட்டுதல் கூடாது. ருத்திராட்சத்தைக் கண்ணால் கண்டாலும், கையால் தொட்டாலும், அதைப்பற்றி வாயினால் சொன்னாலும், மனத்தால் நினைத்தாலும், அதன் பெருமையைப் பிறர் சொல்லக் கேட்டாலும், எல்லாப் பாவங்களும் நீங்கிவிடும். இவ்வாறு செய்பவர், இம்மையில் பரமேஸ்வரனுடைய ப்ரீதிக்குப் பாத்திரமாவர்; பிறகு சாயுஜ்ய பதவியை அடைவர்.

இப்படிப் பரமேஸ்வரனது திருவாபரணமாகிய ருத்திராக்ஷ மகிமையைக் கூறுவதால் பரமஸதியாகிய ஜகன்மாதா நிரதிசய சந்தோஷத்தை அடைகின்றாள் என்பது நிச்சயம்.

---

# 31. பாவம நீங்கி நோயற்ற வாழ்வு பெற

### விபூதி மகிமை

அஞ்ஞானத்தை அகற்றி ஞானத்தை நல்குவது விபூதி. அதைத் தயாரிக்கும் விதம் வருமாறு :—நித்தியாக்னி, விரஜாக்னி, ஒளிபாசனாக்கினி, சமுதாக்கினி, பசனாக்கினி என்னும் ஐந்து அக்கினிகளிலிருந்தும் விபூதி செய்யப்படலாம். விபூதியைத் தயா

ரிப்பதற்கு முதன் முதல் நல்ல முறையில் சங்கற்பம் செய்து கொண்டு ஸ்நானம் செய்யவேண்டும்; பிறகு விக்னேசுவரரை பிரார்த்தித்துப் பஞ்சாட்சரத்தை ஜபிக்கவேண்டும்; பின், நோய் நொடி இல்லாத லட்சணமான பசுவினது சாணத்தை எடுத்து ருத்திர பாராயணத்துடன் உருட்டி வெளியில் உலர்த்தவேண்டும். இவ்வாறு உலர்த்திய பிறகு அவற்றை மூட்டம் போடவேண்டும். சிவராத்திரி, பிரதோஷம், சோமவாரம் போலும் புண்ணிய காலங்களில் மூட்டம் வைத்தால் சிறந்தது. மூட்டம் வைத்தபிறகு இருபத்தொரு நாட்களுக்குப் பின் பக்தி சிரத்தையுடன் பிரித்து எடுக்கவேண்டும். எடுத்த பிறகு வஸ்திரகாயம் செய்து, வாசனைப் பொருள் சேர்த்து, கீழே சிந்தாத வண்ணம் சேகரிக்கவேண்டும்.

இந்த பஸ்மத்தைச் சாந்திமக பஸ்மம், பௌஷ்டிக பஸ்மம், காமத பஸ்மம் என்றும் பெரியோர்கள் பிரிப்பர். பஸ்மத்தைக் கையில் எடுத்து ஸத்யோஜாதாதி மந்திரத்துடன் முதலில் உத்தூளனமாகத் தரித்துக் கொள்ளவேண்டும். பின்பு தேவையான பஸ்மத்தை உள்ளங்கையில் வைத்து, சிறிது தீர்த்தம் சேர்த்துக் குழைத்து, மூன்று விரல்களால் பஞ்சாட்சரத்தை உச்சரித்துக் கொண்டு தலை, நெற்றி, கழுத்து, மார்பு, வயிறு, தோள், முழங்கை, மணிக்கட்டு ஆகியவற்றில் தரிக்கவேண்டும்.

விபூதி தரித்துக்கொள்ளுங்கால் அமையும் மூன்று ரேகைகளையும் பிரம்ம ரேகை, விஷ்ணு ரேகை, மகேசுவர ரேகை, என்று பெரியோர்கள் பெயரிட்டு அழைப்பர். விபூதி அணியாமல் செய்யப்படும் எந்தத் தேவகாரியமும் பலன் தராது. திரிபுண்டரம் இன்றிச் சைவர்களால் செய்யப்படும் எந்தக் காரியமும் பலன் தராது. விபூதியை எவன் தரிக்கின்றானோ அவனிடம் எந்தத் துர்த்தேவதையும் அணுகாது. எந்தவிதமான விபாதியும் அவனை அண்டாது. எந்த ஜாதியாக இருப்பினும் விபூதி தரிப்பவருக்கு அம்பாளுடன் கூடிய பரமேஸ்வரன் சிரேயஸை அளிக்கிறார். ஸ்நானங்களில் பஸ்மஸ்நானம் மிகவும் உயர்ந்தது. விபூதியானது யமபயத்தை நிச்சயமாகப் போக்குகிறது. சர்வ தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தால் எந்தப் பலன் கிடைக்குமோ, சர்வ தானங்களையும் செய்தால் எந்தப் பலன் கிடைக்குமோ, மகாளயத்தில் சிராத்தம் செய்தால் எந்தப் பலன் கிடைக்குமோ அத்தகைய பலன்களை விபூதி தாரணம் நிச்சயமாக அளிக்கும் என்று பெரியோர்கள் கூறுவர். அதனால்தான் அவர்கள் சதாகாலமும் விபூதி தரித்துப் பாவம் நீங்கப்பெற்றவர்களாய் தேஜஸுடன் விளங்குகிறார்கள். பாவத்தைப் போக்கும் ரக்ஷைகளில் பரமேச்ரேஷ்டமானது விபூதியே என்று உபநிடதம் கூறுகிறது.

---

# 32. அகால மரணம் நேராமல் இருக்க

## காயத்திரி மகிமை

பிராம்மணர்களுக்குக் காயத்திரியைவிடச் சிறந்த மந்திரம் வேறு கிடையாது. இதற்கு "ந காயத்ர்யா: பரோ மந்த்ர:" என்னும் வசனமே சான்று. சந்தியாவனந்தம், மாத்யான்ஹிகம் ஆகிய அநுஷ்டானங்களில் காயத்திரியின் பெருமை விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இந்தக் காயத்திரி தேவதைக்கு வாமதேவர், அத்திரி, பிருகு, குத்ஸர், கௌதமர், அகஸ்தியர், வேதவியாஸர் போன்றவர்கள் ரிஷிகள் ஆவர். காயத்திரிக்கு ரக்ஷையாக உஷ்ணிக் அநுஷ்டுபு, பிருஹதீ, பங்தீ, திருஷ்டுபு, ஜகதி, அதிஜகதி, அக்ருதி, விக்ருதி போலும் பெருமை வாய்ந்த சந்தங்கள் இருக்கின்றன. ஆக்நேயம், பிராஜாபத்யம், ஸௌம்யம், ரசாயனம், சாவித்ரிம் போன்றவர்கள் காயத்திரிக்கு உகந்த தேவதைகள். வாமதேவி. கிரியா, ஸத்யா, விச்வா, பத்ரவிலாசினி, ஜயா, சாந்தா, காந்தா, துர்க்கா, சரஸ்வதி போன்றவர்கள் சக்திகள். சம்பகம், பவளம், ஸ்படிகம், சிவப்பு, மஞ்சள், முத்து, குங்குமம், மை, ரத்தம், வைடூரியம், தேன், மஞ்சள் போன்றவை நிறங்கள். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் போன்றவை உருவங்கள். ஸுமுகம், ஸம்புடம் போலும் இருபத்துநான்கு முத்திரைகள் காயத்திரி தேவதைக்கு உண்டு.

## காயத்திரி கவசம்

| | | | |
|---|---|---|---|
| காயத்திரி தேவி | கிழக்கு | திக்கில் | காப்பாற்றட்டும் |
| சாவித்திரி தேவி | தெற்கு | ,, | ,, |
| ப்ரம்ஹசந்தி | மேற்கு | ,, | ,, |
| சரஸ்வதி | வடக்கு | ,, | ,, |
| பார்வதி | அக்னி | ,, | ,, |
| யாதுதானி | நிருதி | ,, | ,, |
| விலாசினி | வாயு | ,, | ,, |
| ருத்திராணி | ஈசானி | ,, | ,, |

ப்ரம்மாணி ஊர்த்துவ பாகத்தைக் காப்பாற்றட்டும்
வைஷ்ணவி அதோ ,, ,,
புவனேசுவரி சர்வ இடத்தையும் ,,
தத் என்னும் பதம் பாதங்களைக் ,,
ஸவிது : என்ற பதம் கணுக்கால்களைக் ,,
வரேண்யம் ,, இடையைக் ,,
பர்கம் ,, நாபியைக் ,,

தேவஸ்ய என்ற பதம் இருதயத்தைக் காப்பாற்றட்டும்
தீமஹி ,, மோவாய்க்கட்டையைக் ,,
தி ய : ,, கண்களைக் ,,
ய : ,, நெற்றியைக் ,,
ந : ,, தலையைக் ,,
ப்ரசோதயாத் ,, சிகையைக் ,,

இத்தகைய திவ்யமான கவசம் கோடிக்கணக்கான பாவங்களைப் போக்குவதால், எல்லோரும் பக்தி சிரத்தையுடனும் ஆர்வத்துடனும் ஜாக்கிரதையாக முறைப்படி காயத்திரி மந்திர ஜபத்தைச் செய்யவேண்டும்.

இந்தக் காயத்திரி தேவிக்கு ஹிருதயம் என்னும் மந்திரம் உண்டு. காயத்திரி தேவியைப்பற்றிய ஸ்தோத்திரங்கள் பல உள்ளன. காயத்திரி தேவதைக்கு ஓர் அழகிய ஸஹஸ்ரநாமார்ச்சனை செய்தாலும், கவசத்தைப் பாராயணம் செய்தாலும் அபமிருத்யு நிவாரணம் ஏற்படுகிறது. காயத்திரி மந்திரத்தின் மூலம் காயத்திரி ஹோமமும் செய்வதுண்டு. (காயந்தம் திராயதே இதி காயத்திரி.) பதினான்கு உலகங்களாகவும், ஸர்வ தீர்த்தங்களாகவும், ஸர்வ தேவதைகள் வடிவமாகவும் காயத்திரி தேவி விளங்குகின்றாள்.

## காயத்திரி துதி

முக்தா வித்ரும ஹேம நீல தவளச் சாயை : முகை : த்ரீக்ஷணை
யுக்தா மிந்து கலாநிபத்த மகுடாம் தத்வார்த்த வர்ணாத் மிகாம்
காயத்ரீம் வரதாப யாங்கு சகசா : சுப்ரம் கபாலம் குணம்
சங்கம் சக்கரம் மதாரவிந்தயுகளம் ஹஸ்தைர் வஹந்தீம் பஜே

## இதன் பொருள்

முத்து, பவளம், பொன், நீலம், வெள்ளை ஆகிய கிரணங்களோடு கூடியதும், சந்திர கலையோடு கூடியதுமாகிய கிரீடத்தை உடையவளும், தத்வார்த்தவர்ணாம்பிகையும், அங்குசம், கபாலம், கதை, கத்தி, சக்கரம், தாமரை போலும் பல பொருள்களைக் கையில் உடையவளும், காயத்திரி என்ற பெயர் படைத்தவளுமான அந்தத் தேவியைப் பூஜிக்கிறேன்.

# 33. பஞ்சத்தைப் போக்க

## 1

### கௌதமர் சாபம்

காயத்திரி தேவதையின் மஹிமையை விளக்கும் கதை ஒன்று உண்டு. பழங்காலத்தில் கௌதமர் என்னும் மகா முனிவர் தேவியைக் குறித்துச் சிறந்த முறையில் தவஞ்செய்து, பெறுதற்குரிய சித்திகள் பலவற்றையும் பெற்ருர். பிறகு அவர் தேவியின் அபர வடிவமான காயத்திரியை ஜபித்து, தேவியைத் தரிசித்து பூரண அருளைப் பெற்று விளங்கிஞர்.

ஒரு முறை மண்ணுலகத்தில் மழையே பெய்யாமல் பன்னிரண்டு ஆண்டுகள் பஞ்சம் வந்தது. அப்பொழுது பசும்புல்லைக் காண்பதும் அரிதாக இருந்தது. உணவுக்கும் நீருக்கும் மக்கள் பட்ட துன்பத்திற்கு அளவேயில்லை. அதனுல் காட்டில் வாழ்ந்து வந்த பிராம்மணர்கள் ஒன்றுகூடி, கௌதமருடைய ஆசிரமத்தை அடைந்தனர். அவர்கள் கௌதம முனிவரைக் கண்டு, அவருடைய திருவடிகளில் வீழ்ந்து, 'காயத்திரி தேவியின் பூரண அனுக்கிரகத்தைப் பெற்ற பெரியீர், நாங்கள் பசியாலும் தாகத்தாலும் வருந்துகிருேம். எங்களைப் பாதுகாப்பது தேவரீர் கடமையாகும். எங்களுக்கு வேறு கதி இல்லை' என்று கூறிக் கண்ணீரும் கம்பலையுமாக நின்றனர்.

அவ்வாறு கலங்கிக் கண்ணீர் விட்டு நின்ற பிராம்மணர்களைக் கருணுமூர்த்தியான கௌதமர் பார்த்து, மனம் வருந்தி, 'நீங்கள் அஞ்சவேண்டா. ஜகன்னை உங்களைக் காப்பாற்றுவாள்' என்று ஆறுதல் கூறி, அவர்களை அமரச் செய்தார். பின்னர், அவர் திவ்ய மங்கள ஸ்வரூபியும், இன்பம் வழங்குபவளும், ஸர்வ ஜீவ தயாபரியும், வேதஸ்வரூபியுமான காயத்திரி தேவியைக் குறித்து ஒரு திவ்ய ஹோமம் செய்தார்; அதனுல் பெருமகிழ்ச்சியுற்ற காயத்திரி அன்னை, ஹோமகுண்டத்தின் மூலமாக அட்சய பாத்திரம் ஒன்றைக் கொடுத்தருளிஞர். அதன் மகிமையால், கௌதமர் தம்மை வந்தடைந்த எல்லோருக்கும் அறுசுவை உண்டி அளித்து ஆடைகளும் அணிகளும் வழங்கி, அவர்கள் தங்குவதற்கு மாளிகைகளையும் அமைத்துக் கொடுத்தார். கௌதமரின் புகழ் மூவுலகங்களிலும் பரவியது. தேவேந்திரன் கௌதமரைப் பாராட்டிஞன். அவ்வாறு அவன் பாராட்டியதை நாரதர் பூவுலகுக்கு வந்து கௌதமரிடம் கூறிஞர். அது கேட்டுக் கௌதமர் பெருமகிழ்ச்சி யுற்ருர். பிறகு நாட்டில் மழை பொழிந்தது; பஞ்சம் நிலவியது; நாடும் நாடாயிற்று.

கௌதமர் அட்சய பாத்திரத்தைக் கொண்டு மக்களுக்கெல்லாம் உண்டியும், உறையுளும், ஆடை அணிகளும் வழங்கினர் அல்லவா ? அதனால் அவரது புகழ் மூவுலகங்களிலும் பரவியதன்றோ ? இவற்றால், அவர்மீது சிலர்க்குப் பொறாமை உண்டாயிற்று. அவ்வாறு ஏற்பட்ட பொறாமையால் அவர்கள் முனிவர் மீது பெரும்பழி சுமத்த விரும்பினர். எனவே, அவர்கள் மரணத் தருவாயிலிருக்கும் ஒரு கிழப் பசுவைக் கௌதமர் செய்து வந்த கோபூஜைக்காகக் கொண்டு வந்து நிறுத்தினர். அவர்களுடைய சூதினை உணராத கௌதமர், அப்பசுவின்மீது அபிஷேகத்திற்காகத் தீர்த்தத்தைக் கொட்டினார். அவ்வளவில் அக்கிழட்டுப் பசு நடுநடுங்கிக் கீழே விழுந்து உயிர் துறந்தது.

இந்த நிகழ்ச்சியை அருகில் நின்று பார்த்துக்கொண்டிருந்த அந்தப் பொறாமைக்காரர்கள், நன்றியுணர்ச்சி அற்றவர்களாய், 'ஐயோ ! எத்தனை பாவம் ! முனிவர் பசுவைக் கொன்றுவிட்டாரே! இதனைவிடக் கொடிய பாவம் வேறு இல்லை. இனி இந்த ஆசிரமத்தில் தங்குதலும் பாவம்' என்று கூறியவாறே புறப்படலாயினர். முனிவர் சிறிது நேரம் மயங்கி நின்றார். பிறகு அவர் அன்னை காயத்திரியைத் தியானித்தார். அவ்வளவில் அவருக்கு உண்மை புலப்பட்டுவிட்டது. பொறாமைக்காரர்களின் சூது அவருக்கு விளங்கியது. எனவே, அவர், அந்தப் பொறாமைக் கூட்டத்தாரிடம் பெருஞ்சீற்றம் கொண்டு, அவர்களுக்குப் பயங்கரமான முறையில் சாபம் இட்டார்.

சாபத்தின் கொடுமையைத் தாங்கமாட்டாத அந்தப் பொறாமைக்காரர்கள், கௌதமருடைய கால்களில் விழுந்து தங்களை மன்னிக்குமாறு வேண்டினர். முனிவரும் சாந்தம் அடைந்தார். பின் அவர், 'ஜீவர்களை மன்னிப்பது அன்னையின் பூஜைக்குச் சமம். நீங்கள் பல்லாண்டுகள் இத்துயரை அனுபவித்துப் பிறகு சித்திரை மாதம் சுக்கில பட்சத்து நவமியன்று அன்னையைப் பூஜை செய்து, இச்சாபத்திலிருந்து விடுதலை பெறுவீராக' என்று திருவருள் செய்தார். பொறாமைக்காரர்களும் நிம்மதியுடன் திரும்பிச் சென்றனர்.

கௌதமர் பிறகு அமைதியாகப் பராசக்தியைக் குறித்துப் பீஜாக்ஷரத்துடன் ஜபம் செய்தார். அதனால் அன்னை அவருக்குக் காட்சி கொடுத்து, அவரைப் பார்த்துப் புன்முறுவலுடன், 'கௌதமா, பயப்படாதே, உலகம் பொறாமைக்கார மக்கள் பலரைக் கொண்டிருக்கிறது. கலிகாலமும் நெருங்கிவிட்டதன்றோ! நடந்த செயலுக்கு வருந்தாதே' என்று கூறி மறைந்தருளினார். புவனேஸ்வரியின் பெருங்கருணைத் திறனைக் கண்டு, மயிர்க்கூச்செறியப் பெற்ற கௌதமர் மேலும் மேலும் அன்னையைப் பூஜை செய்வாராயினர்.

## 2

இன்று நாட்டில் பஞ்சம் தலைவிரித்தாடுகிறது. மனிதர்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும், குடிக்க நீரும், சுவாசிக்கக் காற்றும்கூடக் கிடைப்பது அரிதாக உள்ளது. "ஒரு தட்டிலே பொன்னும் ஒரு தட்டிலே நெல்லும் ஒக்க விற்கும் கார் தட்டிய பஞ்ச காலம்" ஒன்று தமிழ்நாட்டில் முன்பு வந்ததாகப் புலவர் ஒருவர் பாடியுள்ளார். ஆனால் இன்று பொன்னும் இல்லை; நெல்லும் கிடைக்கவில்லை. மனிதன் தன் உயிர் வாழ்க்கைக்காகப் படும் தொல்லைகளுக்கு எல்லையில்லை. நாட்டின் மக்கள் தொகையோ நிமிஷத்துக்கு நிமிஷம் பெருகுகிறது. இனி எப்படிப்பட்ட கஷ்டங்கள் வருமோ? இப்படிப்பட்ட கஷ்டமான பஞ்ச காலத்தில் மக்களின் கடமை என்ன? நம்மையெல்லாம் படைத்த தேவியை ஆராதனை செய்வதுதான். நம்மைப் படைத்த தேவிக்கு தேவியை நம்மைக் காப்பதும் கடமையன்றோ?

ஸ்ரீ தேவீ பாகவதத்தின் எட்டாவது ஸ்கந்தத்தில் "தேவீ ஆராதனை" என்ற பகுதியில் ஒரு முக்கியமான வரலாறு கூறப்படுகிறது. அது வருமாறு:—

மிகப் பழங்காலத்தில் அயோத்தியை அடுத்துள்ள பிரதேசங்களில் கொடிய பஞ்சம் நிலவியிருந்தது. மழையின்மையால் பயிர் பச்சைகள் விளையவில்லை. உயிர்கள் யாவும் பெருந்துன்பமுற்றன. என்ன செய்யலாம் என்று எல்லோரும் ஆராய்ந்தனர். அவர்கள் 'ஏன் இந்தப் பஞ்சம் வந்தது? இந்தப் பஞ்சத்தை ஸ்ரீ தேவியே தான் தீர்க்கவேண்டும்' என்று முடிவு செய்து, தேவியின் அருளைப் பெறுவதற்குரிய வழிகளை உணரும்பொருட்டு, அங்கேயிருந்த வனத்தில் தவம் செய்துகொண்டிருந்த துர்வாஸ முனிவரை அணுகினர். முனிவர் அவர்களை நோக்கி, 'பரம கருணாநிதியான அம்பிகையால்தான் இந்தப் பஞ்சத்தைப் போக்கமுடியும். ஸ்ரீ சாகம்பரீ தேவியின் மந்திரத்தை நான் உங்களுக்கு உபதேசிக்கிறேன். நீங்கள் அம்மந்திரத்தைச் சொல்லித் தேவியைப் பிரார்த்தியுங்கள்' என்று சொல்லி, ஸ்ரீ சாகம்பரீ தேவியின் மந்திரத்தையும், அந்தத் தேவியைப் பூஜை செய்யும் முறைகளையும் உபதேசித்தருளினர். அந்த ஸ்தோத்திரம்:—

அச்வத்த வடநிம்பாம்ர கபித்த பதரீகதே!
பநஸார்க்க கரீராதி க்ஷீரவ்ருக்ஷ ஸ்வரூபிணி!
துக்தவல்லீ நிவாஸார்ஹே தயநீயே தயாநிகே!
தாக்ஷிண்ய கருணாரூபே சாகம்பரி நமோஸ்துதே!

என்பதாகும். யாவரும் இந்தத் துதியை மனமாரச் சொல்லி ஸ்ரீ தேவியைப் பிரார்த்தித்தனர். அவ்வளவில் ஸ்ரீ தேவி, தம் பரம

 

கல்யாண கோலத்தோடு, தம் கைகளில் காய், கிழங்கு, தானியம் முதலியவற்றை ஏந்தி வந்து, யாவருக்கும் அளித்தாள். உடனே நாட்டில் மழை தவறாமல் பெய்யத் தொடங்கியது. பஞ்சமும் பிணியும் நீங்கி எங்கும் வளம் பெருகியது.

இந்த வரலாற்றிலிருந்து தெரிவது யாது? நாட்டில் உணவுப் பொருள்களுக்குப் பஞ்சம் வந்தபொழுது ஸ்ரீ அம்பிகையைத் துதிக்கவேண்டும் என்பதேயன்றோ? ஸ்ரீ சாகம்பரீ தேவியை ஆராதனை செய்தால் உணவுப்பொருள்கள் கணக்கில்லாமல் நாட்டில் கிடைக்கும்; மழையும் தவறாமல் பெய்யும். இந்த நம்பிக்கையுடன் மக்கள் தேவியை ஆராதனை செய்யவேண்டும். தேவியை ஆராதிக்கும் முறையை உணராதவர்கள் தேவி உபாசகர்களைக் கொண்டு, தேவீ ஆராதனைகளை நிறைவேற்றலாம்.

---

# 34. உண்மை ஞானம் பெற

### கேந உபநிஷதக் கதை

பராசக்தி அகில உலகங்களுக்கும் தாய். எல்லா உலகங்களையும் படைத்து, காத்து, அழித்து, மறைத்து, அருள் செய்கின்றாள் அந்தத் தாய். இவ்வாறு பஞ்சகிருத்தியங்களையும் செய்கின்ற ஜகன்மாதாவின் வலிமையையும், சிறப்பையும் ஒரு காலத்தில் தேவர்கள் மறந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் தாமே சிறந்தவர் என்னும் எண்ணத்துடன் அகங்காரம் கொண்டு திரிந்தனர். அவர்களுக்கு ஜகதன்னை மெய்யறிவு ஊட்ட விரும்பினாள்.

இவ்வாறு திருவுள்ளங் கொண்ட அன்னை, ஒரு யக்ஷ வடிவில் இந்திரன் முதலிய தேவர்களின் முன்னிலையில் காட்சியளித்தாள். இந்திரன் அந்த யக்ஷ வடிவைக் கண்டு அதிசயித்து, அவரைச் சோதித்து வருமாறு அக்னி தேவனை அனுப்பினான். அக்னி தேவனும் சென்று, அந்த யக்ஷனால் இடப்பட்ட ஒரு சிறு துரும்பை எரிக்கமாட்டாமல் தோற்று அவமானத்துடன் திரும்பினான். இதைக் கண்ட வாயுதேவன், தனது வலிமையைக் காட்டுவதற்குத் தக்க சந்தர்ப்பம் கிடைத்தது என்று எண்ணி, மிக வேகமாக அந்த யக்ஷனிடம் சென்றான். ஆனால் வாயு தேவனால் அந்த யக்ஷன் நிலத்தில் போட்டிருந்த சிறு துரும்பை அசைக்கக்கூட முடியவில்லை. வாயுதேவனும் வெட்கமடைந்து திரும்பிவிட்டான். பின்பு வருணன் அந்த யக்ஷனிடம் சென்றான். யக்ஷன் அங்கு ஒரு சிறிய மண்கட்டியைத் தரையில் வைத்தான். ஆனால் வருணனால் அந்தச் சிறிய மண்கட்டியைக் கரைக்கமுடியவில்லை. இதனால் வருணனும் தலை குனிவுடன் திரும்பினான்.

அக்னி தேவனும், வாயு தேவனும். வருண பகவானும் தோல்வியுற்றமை கண்ட இந்திரன் வியப்பும் சினமும் கொண்டு தேவியாகிய அந்த யக்ஷனிடம் வந்து, அவ்வுருவை உற்றுப் பார்த்தான். அவ்வளவில் அந்த யக்ஷ உருவம் மறைந்துவிட்டது. இந்திரன் மிகுந்த அச்சத்துடன் வேத மாதாவைத் துதிக்கலானான். அவனுடைய கர்வம் அடங்கியது. இந்திரன் ஓதிய வேத மந்திரத்தைக் கேட்டு மன மகிழ்ச்சியடைந்த பராம்பிகை அசரீரியாக, 'இந்திரனே, அஞ்சாதே! எந்தச் சக்தியினால் எல்லா உயிர்களும் இயங்குகின்றனவோ, எந்தச் சக்தி இச்சை, கிரியை, ஞானம் என்ற வடிவத்துடன் உலகில் காணப்படுகின்றதோ அந்தச் சக்தியாகிய அன்னைதான் சர்வ சக்திகளுக்கும் காரணம். தனிப்பட்ட எவருக்கும் பெருமை இல்லை. தனிப்பட்ட ஒருவரது சக்தியினால் பயன் உண்டாகாது. நீ கண்ட யக்ஷ உருவம் எமது உருவமேயாகும்' என்று உரைத்தருளினர். அசரீரியின் உரையைக் கேட்ட இந்திரன் உண்மையை உணர்ந்தான். தயாபரியும், சம்சாரச் சேற்றில் புதைகின்ற ஜீவர்களைக் கடைத்தேறச் செய்பவருமான அன்னையைப் பின்வருமாறு துதித்தான் :—

க்ரீடாதே லோக ரசநா ஸகாதே சிந்மய : சிவ :
ஆஹா ரஸ்தே ஸதாநந்த : வாஸஸ்தே ஹ்ருதயம் மமா

## இதன் பொருள்

அன்னையே, இந்த உலகப் படைப்பு உமக்கு விளையாட்டு உமது நண்பன் மகாதேவன். உமக்கு உணவு ஆனந்தமே. நாம் வசிக்கும் இடமோ அடியேனது இதயக் குடில்:

---

# 35. அம்பிகையின் அருளைப் பெற

### சர்வோபசாரங்கள்

மக்கள் யாவரும் அதிகாலையில் எழுந்து, கடவுளைத் துதித்துக் காலைக் கடன்களை முடித்து ஸ்நானம் செய்தபிறகு, நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்யவேண்டும்; பிறகு பூஜை செய்யும் இடத்திற்குச் சென்று அம்பிகையைப் பிரார்த்தித்து, 'தாயே, வர வேண்டும்' என்று மனமுருகி வேண்டிக்கொண்ட பிறகு, செய்ய வேண்டிய உபசாரங்களை முறைப்படி தனித்தனியே உள்ளன்புடன் செய்யவேண்டும். அவ்வாறே அம்பிகைக்குச் செய்யவேண்டிய உபசாரங்களுள் சிறந்தவை கீழே தரப் பெறுகின்றன :—

1. அம்பிகைக்கு முதலில் பரிசுத்தமான தீர்த்தத்தால் பாத்யம் அளித்தல்.
2. பின்பு அன்னையினுடைய முதல் நாள் அலங்காரங்களையும் அணிகளையும் களைதல்.
3. பின்பு ஜகன்மாதாவை மனம் மிகுந்த தைலத்தால் அபிஷேகம் செய்தல்.
4. அன்னையை நீராடும் இடத்திற்கு அழைத்துச் செல்லுதல்
5. நீராடும் இடத்தில் அன்னையை அழகிய ரத்தின பீடத்தில் அமர்த்துதல்.
6. நறுமண மிக்க வாசனைப் பொடிகளால் அன்னையின் திருவுடலைத் தேய்த்துவிடுதல்.
7. ஸுகமாகக் கைபொறுக்கும் வெந்நீரால் ஸ்நானம் செய்வித்தல்.
8. ஜபம் செய்த தீர்த்தத்தால் அபிஷேகம் செய்தல்.
9. உலர்ந்த வெண்மையான வஸ்திரத்தால் அன்னையின் திருமேனியை ஒற்றுதல்.
10. சிவந்த அழகிய பட்டாடையை அணிவித்தல்.
11. சிவந்த பட்டு உத்தரீயத்தை அணிவித்தல்.
12. ஆலேபன மண்டபத்திற்கு அழைத்துச் செல்லல்.
13. ஆலேபன மண்டபத்தில் அம்பிகையை ரத்தின மயமான சிம்மாசனத்தில் எழுந்தருளுவித்தல்.
14. சந்தனம், அகில், குங்குமப்பூ, சங்கு, கஸ்தூரி, கற்பூரம், கோரோசனம், ஜவ்வாது, அரகஜா போன்ற வாசனைத் திரவியங்களைத் தேவியின் திருவுருவில் பூசுதல்.
15. கூந்தலுக்குத் தூபம் போட்டு உலர்த்துதல்.
16. மல்லிகை, ஜாதி, முல்லை, சம்பங்கி, இருவாட்சி, சண்பகம், மகிழம் முதலிய பூக்களால் தொடுக்கப்பட்ட மாலைகளை முறைப்படி அணிவித்தல்.
17. பூஷண மண்டபத்திற்கு இறைவியை அழைத்துச் செல்லல்.

18. பூஷண மண்டபத்தில் மணிமயமான பீடத்தில் அமர்த்துதல்.

19. நவமணிக் கிரீடத்தை அணிவித்தல்.

20. சந்தர வட்டம், சூரிய வட்டம் என்னும் ஆபரணங்களை சூட்டுதல்.

21. ஸீமந்தம் என்ற நேர் வகிட்டின் நெற்றியில் சிந்தூரம் அணிவித்தல்.

22. நெற்றியில் கல் இழைத்த பொட்டு வைத்தல்.

23. கண்ணிற்குக் கருநிற மை தீட்டல்.

24. மூக்கின் இருபுறங்களிலும் பேஸரி, வாளி என்னும் மூக்கணிகள் அணிவித்தல்.

25. காதுகளில் அழகிய தாடங்கம் அணிவித்தல்.

26. மூக்கின் நடுவில் உதடுவரை தொங்கும் புல்லாக்கு அணிவித்தல்.

27. காதுகளில் தொங்குகின்ற ரத்தின குண்டலம் அணிவித்தல்.

28. உதடுகளுக்குப்பூச்சிடுதல்.

29. கழுத்தில் பிரதம பூஷணம் என்ற திருமங்கலியம் பூட்டுதல்.

30. தங்க அட்டிகை, பதக்கம் அணிவித்தல்.

31. மகர பதக்கம் என்னும் கல்லிழைத்த அட்டிகை அணிவித்தல்.

32. நீண்ட முத்துமாலை சாத்தல்.

33. இருபத்தொரு முத்துக்கள் கட்டிய ஏகாவளி என்ற முத்துமாலை அணிவித்தல்.

34. இருபக்கமும் பூணூல் போன்ற பொற்கொடி (ஸந்த பூஷணம்) அணிவித்தல்.

35. நான்கு கைகளிலும் கைக்கு இரண்டாக நாகொத்து அணிவித்தல்.

36. ஒவ்வொரு கைக்கும் நான்கிற்குக் குறையாமல் வளைகளை ஒத்தாற்போல அடுக்குதல்.

37. கட்டை விரல் நீங்கலாக ஏனை விரல்களுக்கு, ஒவ்வொன்றுக்கும் இரண்டிரண்டாகப் பல்வேறுப்பட்ட மோதிரங்களை அணிவித்தல்.

38. சலங்கை கட்டிய ஒட்டியாணம் பூட்டுதல்.

39. இடுப்பிற்கு மூன்று வடங்களில் அரைஞாண் அணிதல்.

40. அழகிய அரசிலை சாத்தல்.

41. இரு பாதங்களிலும் பாதசரங்கள் அணிவித்தல்.

42. அழகிய கொலுசு, காப்பு முதலியவற்றை அணிவித்தல்.

43. கால் விரல்களில் மெட்டி, சுற்று, உருட்டு முதலியவற்றைப் போடுதல்.

44. ஒரு கையில் அங்குசம் கொடுத்தல்.

45. மற்றொரு கையில் பாசம் அளித்தல்.

46. வேறொரு கையில் செங்கரும்பு வில் சேர்த்தல்.

47. இன்னொரு கையில் மலர்க்கணைகள் சேர்த்தல்.

48. திருவடிகளில் ரத்தின பாதுகை அமைத்தல்.

49. விருப்பமான ஆபரணங்களுடனும், பரிவாரங்களுடனும் ஸ்ரீ சக்கரத்தில் ஏற்றிவைத்தல்.

50. ஸ்ரீ காமேசுவரருடைய மடியில் அமர்த்துதல்.

51. அமிர்தரூபமான இனிய மதுக்குடம் சமர்ப்பித்தல்.

52. நறுமணம் மிக்க தாம்பூலம் அளித்தல்.

53. இன்பம் தரும் புன்சிரிப்புக் காட்சி தரப் பிரார்த்தித்தல்.

54. மங்கள ஹாரத்தி.

55. குடை சேவித்தல்.

56. சாமரம் வீசுதல்.

57. கண்ணாடி காட்டல் (மிருதுவாக 'தர்ப்பணம்' என்று உச்சரிக்கவேண்டும்.)

58. அழகிய மெல்லிய விசிறி கொண்டு வீசுதல்.

59. திவ்யமான சந்தனம் தெளித்தல்.

60. சுகந்த புஷ்பம் சாத்துதல்.

61. நறுமணமுள்ள தூபம் காட்டுதல்.

62. நல்ல நெய்யுடன் கூடிய தீப தர்சனம்.
63. சிறந்த பலவிதமான நிவேதனங்கள்.
64. ஆபோசனம்.
65. பானியம்.
66. உத்தரா போசனம்.
67. ஹஸ்தப் பிரக்ஷாளினம், பாதப் பிரக்ஷாளனம்.
68. துடைக்க வஸ்திரம் அளித்தல்.
69. பிரதட்சிண நமஸ்காரங்கள்.

மேலே காட்டியவை சிறந்த உபசாரங்கள். சுத்த வெண்மையான அட்சதைகளால் பூஜை செய்யக்கூடாது. மஞ்சள் அல்லது குங்குமம் கலந்த, பொறுக்கி யெடுக்கப்பெற்ற, முழுதாக அமைந்த அரிசியைத்தான் அட்சதையாக உபயோகிக்கவேண்டும். மேலே சொல்லப்பெற்றுள்ள எல்லா உபசாரங்களையும் செய்யமுடியாவிடினும், பூஜை என்று தொடங்கினுல் கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் என்னும் ஐந்துமேனும் கட்டாயம் இருக்கவேண்டும். இந்த ஐந்தும் இன்றிப் பூஜை செய்யக்கூடாது.

---

# 36. பிறவிப் பிணியைப் போக்கிக்கொள்ள

### மணித்வீபக் காட்சி

பிரம்மலோகத்திற்கும் மேலே மணித்வீபம் அமைந்துள்ளது. வைகுண்டம், கைலாசம், கோலோகம் முதலியவைகளைவிட மணித்வீபம் மிகவும் பெருமை வாய்ந்தது. இதற்கு ஸர்வலோகாதிகம் என்ற பெயரும் உண்டு. இந்தத் தீவு பெரிய அமுதக் கடலின் நடுவில் அமைந்துள்ளது. இதற்கு வடக்கே இரும்பு மதில் ஒன்று உண்டு. அது மிக உறுதியும் உயரமும் உடையது. பொற் பிரம்புகளைப் பிடித்தவாறு பலர் அதைக் காவல் புரிகின்றனர். அங்கு ஆரவாரம் மிகுந்திருக்கும்.

அந்த இரும்புப் பிராகாரத்துக்கு வடக்கே வெண்கலமயமான ஒரு மண்டபம் உள்ளது. அங்கு எப்பொழுதும் பேரொளி அமைந்-

திருக்கும். ஆறு ருதுக்களிலும் மலர்கின்ற பூக்களும், பழுக்கின்ற பழங்களும் அங்கே எப்பொழுதும் கிடைக்கும்.

இதற்கு வடக்கில் ஏழு யோசனைப் பரப்புள்ள தாமிரப் பிரகாரம் உள்ளது. அவ்விடத்தே கற்பக மரங்கள் நிறைந்திருக்கும். வஸந்தன் தன்னுடைய மதுஸ்ரீ, மாதவஸ்ரீ என்னும் இரு மனைவியருடனும் அங்கே காலத்தைச் சந்தோஷமாகக் கழிக்கின்றான். அவ்விடத்தே குயிலோசை நிறைந்திருக்கும்.

அதற்கு வடக்கே ஏழு யோசனை அகலமுள்ள ஈயத்தால் ஆன பிராகாரம் இருக்கிறது. சந்தன மரங்கள் அங்கே நிறைந்திருக்கும். கிரீஷ்ம ருதுவின் நாயகன் சுக்ரஸ்ரீ, சுகிம்ஸ்ரீ என்ற தன் இரு மனைவியருடன் ஸுகமாக அவ்விடத்தில் இருக்கிறான்.

அதற்கும் வடக்கில் ஏழு யோசனைப் பரப்புடைய பித்தளைப் பிராகாரம் உள்ளது. ஹரிசந்தன மரங்கள் அங்கு நிறைந்துள்ளன. தேவியின் பொருட்டுத் தருமகாரியம் செய்தவர்கள் அங்கு வசிக்கின்றனர். வருஷ ருது என்பவன் தன்னுடைய பன்னிரண்டு மனைவியருடன் வசிக்கும் இடம் அது.

அதற்கு எதிரே ஏழு யோசனை அகலமுள்ளதும், பஞ்சலோகத்தால் அமைந்ததுமான ஒரு பிராகாரம் இருக்கிறது. அதன் நடுவில் மந்திரசாலை ஒன்று உண்டு. அங்கே சித்தர்கள் தம் மனைவியருடன் வசிக்கிறார்கள். சரத் ருதுவின் நாயகன் லக்ஷ்மி, ஊர்ஜ லக்ஷ்மி என்னும் இரண்டு மனைவியருடன் அவ்விடத்தில் ஸுகமாக வசிக்கிறான்.

அந்த இடத்திற்கு எதிரில் பெரிய சிகரங்களோடு கூடிய வெள்ளிப் பிராகாரம் உண்டு. பாரிஜாத மரங்கள் அங்கு வளர்ந்துள்ளன. அங்கே ஹேமந்த ருது மிக்கமகிழ்ச்சியுடன் தன்னுடைய மனைவியராகிய ஸஹஸ்ரீ, ஸகஸ்யஸ்ரீ என்பவர்களுடன் வசிக்கிறான். தேவி விரதத்தைச் செய்பவர்கள் அங்கு நிறைந்துள்ளனர்.

இதற்கு முன்புறத்தில் பெரியதொரு ஸ்வர்ணப் பிராகாரம் உள்ளது. கதம்ப மரங்கள் அங்கே நிறைந்திருக்கும். சிசிர ருது தன் மனைவியராகிய தபஸ்ரீ, தபஸ்யஸ்ரீ என்பவர்களுடன் மகிழ்ச்சியோடு அங்கு வசிக்கின்றான்.

இந்த இடத்திற்கு எதிரில் புஷ்பராக மயமான பிராகாரம் இருக்கிறது. இரத்தின மயமாக இருப்பதால் அதற்கு ரத்னசாலை என்றும் பெயர் உண்டு. திக்குப் பாலகர்கள் அங்கே வாழ்கின்றனர்.

அதற்குக் கிழக்கில் அமராவதி என்ற பட்டணம் அமைந்துள்ளது. அங்கே இந்திரன் தன் மனைவியாகிய இந்திராணி

யுடன் வசிக்கிறான். அக்கினி கோணத்தில் அக்கினிபுரி என்னும் நகரம் உள்ளது. அங்கே அக்கினி தேவன் தன் மனைவியராகிய ஸ்வாஹா, ஸ்வதா என்பவர்களுடன் வசிக்கின்றான். தென்புறத்தில்தான் யமபுரி உள்ளது. தர்மராஜா தன் மனைவியுடனும், சித்திரகுப்தனுடனும் அங்கே வாழ்கிறான். தென்மேற்கில் நைருதி கத்தியைக் கையில் பிடித்துக்கொண்டு தன் மனைவியோடு சேர்ந்திருந்து, மதுபானம் செய்து மகிழ்ந்திருக்கிறான். வடமேற்கில் வாயுதேவன் ஆடம்பரமாக வாழ்கிறான். வடக்கில் குபேரனும், வடகிழக்கில் ஈசான்ய தேவரும் வாழ்கின்றனர்.

புஷ்பராகப் பிராகாரத்திற்குமுன் பதுமராகப் பிராகாரம் ஒன்று உள்ளது; அங்கே அறுபத்துநான்கு கலைகளும் சக்தி வடிவங்களாகக் காட்சி அளிக்கின்றன.

பதுமராகப் பிராகாரத்துக்கு அடுத்தபடி கோமேதகப் பிராகாரம் உண்டு. அங்கு மகாதேவி முப்பத்திரண்டு சக்திகளோடு காட்சியளிக்கிறாள்.

கோமேதகப் பிராகாரத்தை அடுத்து வஜ்ரப் பிராகாரம் உண்டு. அங்கு ஸ்ரீ தேவியின் பரிசனங்கள் மிக மகிழ்ச்சியுடன் தத்தம் வேலைகளைச் செய்துகொண்டிருப்பர். அவர்கள் பேரழகு உடையவர்களாய், சிங்கார ரஸப் பிரதானர்களாய் இருந்து சிரித்த முகங்களுடன் காட்சியளிப்பர்.

இந்த வஜ்ரப் பிராகாரத்திற்கு முன்பக்கத்தில் வைடூரியப் பிரகாரம் பத்து யோசனைப் பரப்பில் அமைந்துள்ளது. அங்கே ஸப்த மாதாக்களும், லக்ஷ்மீ தேவியும் நித்தியவாஸம் செய்கிறார்கள்.

வைடூரியப் பிராகாரத்துக்கு அடுத்தபடி இந்திரநீலப் பிராகாரம் அமைந்துள்ளது. இங்கே ஒரு பெரிய தாமரை உள்ளது; சுதர்சனத்திற்கு அடுத்தபடியாக உள்ளது. இங்கே பதினாறு சக்திகள் அமைந்துள்ளன. ஜகன்மாதாவுக்குச் சேனைபதிகளாக இவர்கள் உள்ளனர்.

இந்திரநீலப் பிராகாரத்துக்கு முன்பாகப் பத்து யோசனை அகலமுடைய முத்துப் பிராகாரம் அமைந்துள்ளது. அங்கே அம்பிகைக்கு ஆலோசனை கூறக்கூடிய மந்திரிகள் நிறைந்துள்ளனர்.

இந்த முத்துப் பிராகாரத்தை அடுத்து மரகதப் பிராகாரம். அங்கே எல்லாம் மரகதமயம். அங்கு ஓர் அறுகோணச் சக்கரம் உள்ளது. அதன் கிழக்கில் காயத்திரி தேவியும், நிருதி கோணத்தில் மகாவிஷ்ணுவும், வாயுகோணத்தில் ருத்திரமூர்த்தியும் அக்கினி கோணத்தில் குபேரனும், மேற்கில் ரதியோடு மன்மதனும் விளங்குவர்.

அந்த மரகதப் பிராகாரத்துக்குப் பக்கத்தில் நூறு யோசனைப் பரப்புள்ள பவளப் பிராகாரம் உள்ளது. அதன் நடுவில் பஞ்ச சக்திகள் வீற்றிருக்கின்றனர்.

இந்தப் பவளப் பிராகாரத்திற்கு அடுத்தபடியாக நவரத்தினப்பிராகாரம் ஒன்று உண்டு. அங்கே ஸ்ரீ தேவிக்குரிய மந்திரங்களும், மகா வித்யைகளும் நிறைந்துள்ளன. மேலும் ஆபரண தேவதைகள் ஸர்வ பூஷணங்களுடன் கோடிசூர்யப் பிரகாசமாகக் காட்சியளிப்பர். சப்த கோடி மகா மந்திரங்களும் அங்கே வசிக்கின்றன.

அதற்கு எதிரில்தான் சிந்தாமணிக் கிருகம் உள்ளது. சிந்தாமணிக் கிருகத்தின் மத்தியில் ஆயிரங்கால் மண்டபமும் ஒன்று உண்டு. அம்மண்டபத்தின் நான்கு பக்கங்களிலும் சிருங்கார மண்டபம், முக்தி மண்டபம், ஞான மண்டபம், ஏகாந்த மண்டபம் என்னும் நான்கு மண்டபங்கள் உள்ளன. அவற்றிற்கு எதிரே பூந்தோட்டமும் புஷ்கரிணியும் உள. சிருங்கார மண்டபத்தில் ஜகதன்னை விற்றிருந்து கான அமுதத்தைப் பருகுவாள்; முக்தி மண்டபத்திலிருந்து ஆத்மாககளின் பாசங்களைப் போக்க முயல்வாள்; ஞான மண்டபத்திலிருந்து ஞானோபதேசம் செய்தருள்வாள்; ஏகாந்த மண்டபத்தில் இருந்து உலகத்தைக் காப்பதற்குரிய சிந்தனையைச் செய்துகொண்டிருப்பாள்.

மேற்கூறிய சிந்தாமணி மண்டபத்தில் பத்துப் படிகளோடு கூடிய ஒரு மஞ்சம் உண்டு. அதற்குக் கால்கள் பிரம்மா, விஷ்ணு, ருத்திரர், மகேசுவரர் ஆவர். சதாசிவர் அந்த மஞ்சத்திற்குப் பலகையாக அமைந்துள்ளார். மகாதேவர் புவனேசுவரராகக் காட்சியளிக்கிறார். இங்கே ஜகன்மாதா ஸர்வபாபரண பூஷிதையாக, சகல தேவதைகளும் புடைசூழக் காட்சியளிப்பாள். புவனேசுவரிக்கு வலது பக்கத்தில் நவரத்தினமயமான ஓர் ஆறு உண்டு. அது பல கிளைகளாகப் பிரிந்து, பலவிதப் புரசங்களாப் பரிணமித்து, வேண்டுவோர்க்கு வேண்டியவற்றை நல்கும் தன்மையை உடையதாக விளங்குகிறது.

அங்கே நோய், திரை, கவலை, மாற்சர்யம், குரோதம் முதலியன இல்லை. எல்லாப் பெண்களும் நித்திய யௌவனத்துடன் பிரகாசிப்பர். எல்லோரும் ஜகதன்னையைப் பூஜித்துக்கொண்டேயிருப்பர். அங்கே சாலோக, ஸமீப, சாருப, சாயுஜ்ய பதவிகளை அடைய விரும்புகிறவர்கள் அந்த அந்தப் பதவிகளை அடைவர்; சகல ஐசுவரியம், சகல சிருங்காரம், சகல பராக்ரமம் முதலியவற்றை அங்கு யாவரும் அடைந்து விளங்குவர். இதனை நமது பரமாசார்ய ஸ்வாமிகள் தமது ஸௌந்தர்யலஹரியில்,

"ஸுதா ஸிந்தோர் மத்யே ஸுரவிட பிவாடீ பரிவிருதே
மணித்வீபே நீபோபவனவதி சிந்தாமணி கிருசஹ
சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்
பஜந்தித்வாம் தன்யா : கதி சனசிதா நந்த் லஹரீம்"

என்று வாயாரப் புகழ்ந்துள்ளார். இப்படி வர்ணிக்கப்பட்டுள்ள மணித்வீபத்தை நினைத்தாலே சகல பாவநாசனம் ஏற்படும் இறந்துபோகும் சமயத்தில் இந்த மணித்வீபக் காட்சி ஒருவனுக்கு வருமாயின் அவன் மறுபடியும் பூமியில் பிறக்கமாட்டான்.

---

# 37. முக்தி பெற

**ஸ்ரீ தேவீ பாகவதப்பயன்**

இந்தத் தேவீ பாகவதத்தை விடாது பாராயணம் செய்பவர் விதேக முக்தி அடைவர். இதனை மண்டலமாகவும், ஒன்பது நாட்களிலும், பதினைந்து நாட்களிலும் பாராயணம் செய்யலாம். தேவீ பாகவத சிரவணம் சகல பாவங்களையும் போக்குவதுடன், அன்னையிடம் எல்லையற்ற பக்தியை உண்டாக்குகிறது. வருஷத்தில் நான்கு நவராத்திரிகளாகப் பதினான்கு வருஷங்களில் 56 நவராத்திரிகளையும் தூர்வாஸ முறைப்படி நடத்தி, தேவீ பாகவதம் பிரவசனம் செய்தவர் மீண்டும் தாயின் வயிற்றில் பிறக்கமாட்டார் என்பது உறுதி. 100 முறை பாராயணம் செய்தால் க்ஷயரோகம். நீங்கிவிடும்.

தேவீ பாகவத சிரவணத்தை நவமி, அஷ்டமி, பௌர்ணமி, உத்திரம், சோமவாரம், சுக்கிரவாரம் ஆகியவற்றில் செய்வாராயின் மக்கள் சகல சௌபாக்கியங்களையும் பெற்று வாழ்வர். தேவீ பாகவதத்தில் கூறியபடி கிழமைப் பூஜை நட்சத்திர பூஜை, திதி பூஜை, கர பூஜை, யோக பூஜை ஆகியவைகளைச் செய்வோர் எல்லாவித நோய்களிலிருந்தும் விடுபடுவர்.

இந்தப் புராண சிரவணத்தினால் பரீக்ஷித்து உயர்கதி அடைந்ததைப் போல் எல்லாருக்கும் உயர்கதி கிடைக்கும் என்று வேத வியாசர் ஜனமேஜயனுக்குக் கூறியதாகச் சூதமாமுனிவர் ஏனை மஹரிஷிகளுக்குச் சொன்னார். அவர்களும் அவ்வாறே சம்பூர்ண தேவீ பாகவத சிரவணம் செய்து, இன்பக் கடலில் மூழ்கி, பராம்பிகையின் கல்யாண குணங்களில் ஈடுபட்டுச் சூதமா முனிவரை வணங்கினர்.

ஸகலஸுகப்ரதமும், ஸர்வாரிஷ்ட நிவாரணமும், தேவீ பாக வதை சிரவணமும் தரக்கூடியது கீழ்வரும் நவமங்களி பாராயணம்:

## நவமங்களி பாராயணம்

1. காத்யாயநி மஹாமாயே பவாநி புவநேச்வரி
ஸம்ஸார ஸாகரே மக்நாத் உத்தரஸ்ரீ க்ருபாமயி

2. தன்யோஹம் அதிபாக்யோஹம் பாவிதோஹம் மஹாத்மபி;
யத்பிருஷ்டம் ஸுமஹத் புண்யம் புராணம் வேதவித்க்ருதம்

3. நமோ தேவ்யை ப்ரக்ருத்யைச விதாத்ர்யை ஸததம் நம;
கல்யாண்யை காமதாயைச வ்ருத்யை ஸித்யை நமோ நம:

4. சச்சிதாநந்த ரூபிண்யை ஸ்ம்ஸாராரணயே நம:
பஞ்ச க்ருத்யை விதாத்ரைச புவநேச்வர்யை நமோ நம:

5. க்ரீடாதே லோகரசநா ஸகா தே சிந்மய: சிவ:
ஆஹா ரஸ்தே ஸதாநந்த; வாஸஸ்தே ஹ்ருதயம் மம

6. நமச்சிவாயை கல்யாண்யை சாந்த்யை புஷ்ட்யை நமோ நம:
பகவத்யை நமோ தேவ்யை ருத்ராயை ஸததம் நம:

7. ஜய ஜய ஜயாதாரே ஜயசீலே ஜயப்ரதே
யக்ஞ ஸூகர ஜாயே த்வம் ஜயதேவி ஜயாவஹே

8. ஸுகதே மோக்ஷதே தேவி ப்ரஸந்நா பவஸீந்தரி
புஷ்பஸாரா நந்த நீயே துளஸீ கிருஷ்ண ஜீவநீ

9. நமஸ்தே துளஸீ ரூபே நமோ லக்ஷ்மி ஸரஸ்வதி
நமோ துர்கே பகவதி நமஸ்தே ஸர்வ ரூபிணி

இந்த நவமங்களியைத் தினந்தோறும் பாராயணம் செய்து பெறக்கூடிய பெரும் பயன்களில் நிதர்சனமாக எளிதில் அடை யக் கூடியவை மன அமைதி, நீண்ட ஆயுள், காரிய சித்தி முதலியவைகளேயாகும்.

சுபம்



# அநுபந்தம் — 1

## ஸ்ரீ தேவீ பாகவத

## சுலோக பாராயண முறை

இப்புத்தகத்திலிருக்கும் காரிய ஸித்திகளுக்கு ஸ்ரீ தேவீ பாகவத மூலக்ரந்தத்திலிருந்து அந்தந்தப்பலனுக்கு ஏற்ப, முக்ய ஸ்லோகங்களைத் தொகுத்துக் கீழே வெளியிட்டிருக்கிறோம். ஸ்ரீ தேவீ பாகவதத்தில் அந்தந்தக் கட்டத்தை ஸம்ஸ்கிருதத்திலேயே பாராயணம் செய்வதுதான் உசிதம். முடியாத அன்பர்கள் இந்த முக்கிய ஸ்லோகங்களை மாத்திரமாவது பாராயணம் செய்தாலும் பலனளிக்கும் என்று ஜகன்மாதாவின் திருவடிகளை த்யானித்து தேவீ கதாம்ருத வர்ஷக, வேதலக்ஷண வித்வான், வேதாந்த சிரோமணி தர்மக்ஞ, வித்யாவாசஸ்பதி, ப்ரஹ்மஸ்ரீ மாயூரம் ராமநாத தீக்ஷிதர் அவர்கள் தொகுத்துத் தந்துள்ளார்கள். அப்பெரியவரை ஆஸ்திகர்கள் சார்பாக நமஸ்கரிக்கிறோம். அன்பர்கள், யாரையாவது பெரியவர்களைக் கொண்டு உபதேசம் பெற்றுக்கொண்டு பாராயணம் செய்யும்படி கோருகிறோம்.

— பதிப்பகத்தார்



TSTMO : YRLX

தெளிவுரை :

ஸ்ரீமத் பகவத் கீதையில் அருச்சுனன் கண்ணனைக் கேட்கிறான் — "யோகியே! யாண்டும் உம்மையே (பரமாத்ம ஸ்வரூபத்தையே) சிந்தித்து நான் உம்மை அறிவது எப்படி? என்னென்ன பாவங்களில் நீர் என்னால் சிந்திக்கத் தக்கவராக இருக்கிறீர்?" இதற்கு விடையாகப் பகவான், "என் விபூதிகளையெல்லாங் கூறுகிறேன் என்று தான் ஒவ்வொரு வகையிலும் என்ன பாவத்தில் சிந்திக்கத் தக்கவர் என்று கூறி மேலும் மகிமை, அழகு, வலிவு முதலியவை உடையது எது எதுவோ அவை யாவையும் என் ...வையும் என்னுடைய தேஜஸில் உண்டானது என்பதாக அறி" என்று கூறுகின்றார். எனவே, முதலில் ஒரு குறிப்பிட்ட சிலவற்றில் தேவியைக் கண்டு, பிறகு சிறப்பு, மகிமை, அழகு முதலியன வாய்ந்தவற்றில் எல்லாம் தேவியைக் கண்டு வழிபட்டால் அதன் ...லம் சராசரம் (சரம்—அசையும் பொருள் ; அசரம் —அசையாப் பொருள்) அனைத்தையும் தேவியாகக் காணும் மேலான ஞானம் உண்டாகும் என்பதில் தினையளவும் ஐயமில்லை. இம்மேலான ஞானமே சாயுஜ்யம் என்னும் இரண்டறக் கலக்கும் முக்தி நிலையையளிக்கவல்லது.

"ஏகமாய் இருக்கும் என் தாய் பராசக்தி பல்வேறு தோற்றத்துடன் விளங்குகிறாள். அளவில்லாத சக்தியுடைய அவள் ...வனாகவும் ஜகத்தாகவும் பேதப்பட்டு, சரீரம், புத்தி, சன்மார்க்கம், ஆத்மார்த்தம் முதலிய வேறுபட்ட சக்திகளையுடையவளாய்க் ...வைபடுகிறாள். சக்தி வேதாந்தத்தில் கூறப்படும பிரம்மமே ...யிர வேறல்ல. கட்புலனாகாத பிரம்மத்தின் பிரத்யக்ஷ ஸ்வரூபமே ...வள்."

— ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் உபதேசம்



ஸ்ரீ:

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை



## மங்களம்

தஞ்சாவூர் ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலுகா, பா
ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் இருக்கும் கற்பகநாதர்கு
என்னும் க்ஷேத்ரத்தில் பக்தர்களுக்குப் பரமானந்தம் த
ஸ்ரீ பாலசவுந்திரி அம்மன், உலகனைத்தையும் உண்டாக்கிய ந
முகனின் தேவியார், தஞ்சாவூர் ஜில்லா கூத்தானூரில் ஸே
தரும் ஸ்ரீ வேதவாணி அம்மன், சென்னை திருவல்லிக்கேணி
வீற்றிருந்து திவ்ய தரிசனம் தரும் ஸ்ரீ வேதவல்லித் தாயார்,
மூன்று லோக மாதாக்களின் கிருபையால் நம் நாட்டு ஜனங்
ஆரோக்கியம், நல்லுடை, நல்லுணவு, நல்ல வீடுகள் இவற்று
ஒற்றுமையாக வாழவேண்டுமென்று, அந்த ஜகத்தாயார்க
பிரார்த்திக்கும் பாடல் இது.

(பாடல் அடுத்தப் பக்கத்தில் தரப்பட்டுள்ளது)

